# ஸ்ரீமத்
# பாகவத புராணம்



க. தேவகி பிரகாசம்

# ஸ்ரீமத் பாகவத புராணம்

முனைவர் க. தேவகி பிரகாசம்

வெளியீடு :

K. தேவகி பிரகாசம்

17-290, அவிலாலா தெரு

திருப்பதி, சித்தூர் மாவட்டம்

ஆந்திரப் பிரதேசம்

முதற் பதிப்பு : அக்டோபர், 1994
பதிப்புரிமை பெற்றது.
**விலை : ரூ. 30-00**

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | SREEMATH BHAGAVADHA PURANAM |
| Author | : | Dr. K. Devaki Prakasam |
| Language | : | Tamil |
| Edition | : | First 1994 |
| Copy right | ; | Author |
| Paper used | : | 10.5kg white cream wova |
| Size of the Book | : | 18×12.5cm |
| Type used | : | 10pt. |
| Number of pages | : | 168 |
| Number of copies | : | 1000 |
| Printers Name | : | MOOVENDHAR ACHAGAM<br>Royapettah, Madras-600 014<br>Telephone : 8267189 |
| Binding | : | Card Board |
| Price | : | Rs. 30 |
| Publisher | : | K. DEVAKI PRAKASAM<br>17-290, Avilala Street<br>Thirupathi, Chittoor Dist.<br>Andhra Pradesh |
| Subject | : | Religious Philoosphy |

அச்சிட்டோர் :
**மூவேந்தர் அச்சகம்**
இராயப்பேட்டை
சென்னை-600 014
தொலைபேசி-8267189



THIS BOOK

Is printed and
published with
the financial
assistance of
Tirumala-Tirupati
Devasthanams
under their scheme
"Aid to publish
religious books".

DEDICATED

to

Sri BALAJI

OM BHUR, BHUVAH, SUVAH
TAT SAVITUR VARENYAM
BHARGO DEVASYADHIMAHI
DHIYO YONAH PRACHODA YAT

Om, who is the dearer than our breaths
Is self subsistent, all Knowledge and
all bliss
We medidate ubon that adorable effulgence
Of the resplendent vivifier of the universe,
Savita
May he illumine our intellects unto thee
right-path

# வாழ்த்துரை

## கவிஞர் டாக்டர்
## த. அமிர்தலிங்கம் எம்.ஏ.பி.எச்.டி.,

ஆசிரியர் : "திருக்கோயில்"

அருள்நந்தி சிவாச்சாரியார் தம்முடைய சிவஞான சித்தியார் என்னும் திருவருள் நூலில் நல்ல இறையருள் நூல்களை ஓதுவிப்பது எல்லாம் வல்ல இறைவனுக்கு உகந்த எழில் ஞான பூசையாகும் என்று போற்றியுரைத்திருக்கிறார்.

**"ஞான நூல்தனை ஓதல் ஓதுவித்தல்**
**நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல் நன்கு,**
**ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்**
**இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை"**

என்னும் அவர்தம் அருள் வாக்கிற்கிணங்க "ஸ்ரீமத் பாகவத புராணம்" எனும் ஞான நூலை ஞாலத்தார் கற்று இறைவன் அருள் பெறும் வண்ணம் மிக நேர்த்தியாகப் படைத்தளித்திருக்கின்றார் திருமதி டாக்டர் தேவகி பிரகாசம் அவர்கள்.

எளிய இனிய நடையில், தெளிந்த நீரோடை சலசல வெனப் பாய்ந்து, பரந்து ஓடுவது போன்ற தமிழ் நடையில் ஒருமுறை படித்தாலே மனதினில் ஆழமாக நிகழ்ச்சிகளும் நீதிகளும் பதியும் வண்ணம், இந்நூலை டாக்டர் தேவகி பிரகாசம் அவர்கள் பாங்குடன் படைத்திருப்பதைப் பாராட்டிட நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

தேனாய், கன்னலாய், அமுதாய்த் தித்திக்கும் ஆழ்வார் அருட்பாசுரங்களையும் ஆங்காங்கே நூலாசிரியர் பதித்துச் செல்வது,பொன்மகுடத்தில் வைரமணிகளைப் பதித்ததைப் போன்று இந்நூலின் எழிலுக்கு எழில் சேர்க்கின்றது.

இராமாவதாரம் விவரிக்கும் டாக்டர் தேவகி பிரகாசம் அவர்கள், அருணாசல கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனைகளையும் பொருத்தமுற இயைத்து நூலைப் பொலிவுபடுத்துகிறார். கிருஷ்ணாவதாரத்திற்குப் பெருமை சேர்ப்பது பகவத் கீதை. அதேபோல் இராமாவதாரத்திலும் இராம கீதை உண்டு என்று இராமர், பரதாழ்வாருக்கு உபதேசித்த பாங்கை டாக்டர் திருமதி தேவகி பிரகாசம் அவர்கள் காட்டுவது இந்நூலின் சிறப்பிற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் நயமான பகுதியாகும்.

அறுசுவை விருந்திட்டுப் பொன் தட்டில் தாம்பூலமும் தரிக்கத் தருவதைப் போல தசாவதாரக் கதைகள் எனும் ஆராஅமுதைக் கற்பாருக்கு வழங்கி துருவன், யயாதி முதலான புண்ணிய புருசர்களின் கிளைக் கதைகளையும் படித்து மகிழ இந்நூலின்கண் நமக்கு வழங்கியுள்ளார் நூலாசிரியர். கருத்துக்கு விருந்தாகும் கண்ணனின் திருமணங்களையும், கண்ணனின் மகன், பேரன் மற்றும் மைத்துனன் திருமணங்களையும் தெய்வத் திருமணங்களாக டாக்டர் தேவகி பிரகாசம் தொகுத்து வழங்கியிருப்பது பாராட்டிற்குரியது.

தேனீக்கள் அரும்பாடுபட்டு தேன் சேகரம் செய்து திகட்டாத கொம்புத்தேனை நமக்கு வழங்குவதைப் போல டாக்டர் தேவகி பிரகாசம் அவர்கள் தம் ஆற்றல்மிகு உழைப்பால் இந்த உன்னத நூலைப் படைத்தளித்துள்ளார் கள். அவர்களைப் பல்லாண்டு வாழ்க வளமுடன் என்று பரிவுடன் வாழ்த்திப் போற்றுகின்றேன்.

த. அமிர்தலிங்கம்

# என்னுரை

சர்வமங்களங்களையும் கொடுக்கக்கூடிய பகவானுடைய அவதாரங்களை உலக நன்மைக்காக ஸ்ரீனிவாச பகவான் பாகவதம் என்னும் புராணத்தைச் செய்து அருளினார். பின்னர் இந்தப் புராணத்தைத் தம் புத்திரரான சுகப் பிரம்மத்துக்கு உபதேசித்தார்.

சகல சாஸ்திரங்கள், வேதங்கள், இதிகாசங்கள் ஆகிய வற்றின் சாரமான இப்புராணத்தைக் கங்கைக் கரையில் உயிரை விடக் காத்திருந்த பரீட்சித்து ராஜனுக்கு சுகர் உபதேசித்தார். அரசனைச் சூழ்ந்திருந்த அநேக ரிஷிகளோடு சூத முனிவரும் அங்கிருந்தார். அவர் அப் புராணத்தைக் கேட்டுப் பின்னர் நைமிசாரண்ய முனிவர் களுக்கு இதைச் சொன்னதாகப் புராணம் ஆரம்பமாகிறது.

வடமொழியிலுள்ள இந்தப் பாகவத புராணத்தைத் தமிழில் செவ்வைச் சூடுவார் செய்யுள் வடிவில் செய்துள் ளார். மூலத்தை அடியொற்றி, இலக்கிய நயம் குன்றாமல் கதை உருவில் இதை எழுதியுள்ளேன். பெரியோர்களும், மாணவ மாணவிகளும் படித்துப் பயன் பெறுமாறு எளிய இனிய நடையில் எழுதப்பட்டுள்ளது.

இப்புராணம் வெளிவருவதற்குக் காரணமாயிருந்த பரீட்சித்து மன்னனின் வரலாறும், பகவான் எடுத்த பத்து அவதாரங்களின் மகிமையும் இப்புராணத்தின் கண் விரவி யிருக்கும் கிளைக் கதைகளும், திருமணங்களும் இந்நூலில் இடம் பெறுகின்றன.

**க. தேவகி பிரகாசம்**

# உள்ளுறை

# ஸ்ரீமத் பாகவத புராணம்

## 1. பரீட்சித்து

### அறிமுகம்

உலக க்ஷேமத்துக்காக—மங்களகரமான விஷயத்தை அறிந்து கொள்வதற்காக—இதை எழுதுகிறேன். பகவானிடம் பக்தி கொள்வதே ஜீவன்களுக்குச் சிறந்த தர்மமாகும். பகவானுடைய நாம ஸ்மரணையும் அவனுடைய அவதார லீலைகளைப் பக்தியோடு சிரவணம் செய்வதுமே சிறந்த உபாசனையாகக் கலியுகத்தில் கூறப்பட்டுள்ளது. தம்முடைய கதையைக் கேட்பவர்களுடைய உள்ளங்களில் பகவான் இருந்து கொண்டு அவர்கள் மனத்திலுள்ள காமம் முதலான அழுக்குகளை அகற்றிவிடுகிறார். அதனால்தான் மகான்கள் வாசுதேவனிடம் பக்தி பூண்டு இருக்கிறார்கள்.

சத்துவம், ராஜசம், தாமதம் என்ற மூன்று குணங்கள் பிரகிருதிக்கு உண்டு. அவற்றோடு கூடிய பகவானே இப்பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமானவர். ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற காரியங்களுக்கு ஏற்ப அவரே பிரமதேவனாகவும், அரியாகவும், அரனாகவும் விளங்குகிறார். யாகங்களும் அவரை ஆராதிக்க உண்டானவையே. சாஸ்திரங்களும் அவரையே பிரதானமாகக்கொண்டுள்ளன.

எல்லாக் காரியங்களும் அவரைத் திருப்திபடுத்தவே சொல்லப்பட்டுள்ளன. பகவான் ஜீவன்களிடத்தில் அவரவர் களின் தகுதிக்கேற்ப தோற்றம் கொண்டுள்ளார். அவர் சத்வ குணத்தினால் சகல சிருஷ்டிகளையும் பரிபாலித்து வருகிறார்.

## குருக்ஷேத்திரம்

பாரதப் போரின் இறுதிக் கட்டம். பாண்டவர் தரப்பி லும் கௌரவர் தரப்பிலும் எண்ணற்ற வீரர்கள் போரிட்டு வீர சுவர்க்கத்தை அடைந்தனர். பீமன் தன் கதையால் துரியோதனனுடைய தொடையை முறித்தான். துரியோதனன் கீழே விழுந்து மரண அவஸ்தையில் இருந் தான். அதைக் கண்ட அசுவத்தாமன் துரியோதனனைத் திருப்தி செய்ய எண்ணினான். அவன்தான் கடைசி கௌரவ சேனாதிபதி. பாண்டவர்களுடைய பாசறையில் புகுந்து அங்கு உறங்கிக் கொண்டிருந்த உப பாண்டவர்கள் எனப் படும் பாண்டவர்களின் மைந்தர்கள் ஐவரையும் கொன்று, அவர்களுடைய தலைகளைக் கொண்டு வந்து துரியோதனன் முன்பு போட்டான். பாரதத்தின் சௌப்திக பருவத்தில் இச்செய்தி சொல்லப்பட்டுள்ளது. சௌப்திகம் என்றால் உறங்குபவர்களைக் கொல்லுதல் என்பது பொருள். இது மகாபாதகமாகக் கருதப்படுகிறது. துரியோதனன் மிகவும் வருந்தினான்.

இச்செய்தியை அறிந்து, அர்ச்சுனன் ஆத்திரமடைந்து அஸ்வத்தாமனுடன் போரில் ஈடுபட்டான். பலவித அஸ்திரங்கள் இருதரப்பிலும் பிரயோகிக்கப்பட்டன. கடூரமான போர் நடந்தது. இறுதியில் அஸ்வத்தாமன் சிறை பிடிக்கப்பட்டான்.

அஸ்வத்தாமன் பிராமண குலத்தில் பிறந்தவன் ஆதலாலும், குருவாகிய துரோணருடைய மகனாதலாலும் அவனைக் கொல்வது உசிதமில்லை என்று அர்ச்சுனன் கருதி

னான். கிருஷ்ண பரமாத்மா கூறிய ஆலோசனையின்படி அர்ச்சுனன் அஸ்வத்தாமனுடைய சிகையையும் தலையில் கட்டியிருந்த மணியையும் வாளால் துண்டித்து எறிந்தான்; அஸ்வத்தாமனை விடுதலை செய்து கூடாரத்துக்கு வெளியே துரத்திவிட்டான். சாஸ்திரத்தில் பிராமணர்களைத் தண்டிப்பதற்கு இப்படி ஒரு வழி உள்ளது.

பின்னர் பாண்டவர்கள் போரில் இறந்த உற்றார் உறவினர்களுக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன்களைச் செய்ய கங்கைக் கரைக்குச் சென்றனர். கிருஷ்ணன், திருத ராட்டிரன், காந்தாரி, குந்தி முதலியோர்க்கு ஆறுதல் கூறினார். பின்னர் பாண்டவர்களிடம் விடை பெற்றுத் துவாரகைக்குப் புறப்பட்டார்.

அப்போது சுபத்திரை அங்கே ஓடி வந்தாள். ''அண்ணா! அபிமன்யுவின் மனைவி உத்தரையின் கருப்பத்தி லிருந்த சிசுவை அழிப்பதற்காக அஸ்வத்தாமன் அபாண்ட அஸ்திரத்தை ஏவியுள்ளான். அந்த ஆபத்திலிருந்து சிசுவைக் காப்பாற்ற வேண்டும்'' என்று கதறினான். ''பயப்பட வேண்டாம்'' என்று கண்ணபிரான் அபயம் அளித்தார்.

அவமானம் தாங்கமாட்டாமல் அஸ்வத்தாமன் கடைசி முறையாகப் பாண்டவர்கள் வம்சமே நிர்மூலமாக வேண்டும் என இதை ஏவிவிட்டுள்ளான் என்பதை பகவான் அறிந்து கொண்டார். சக்கரத்தை ஏவி அந்த அஸ்திரத்தைத் தம்மிடம் கிரகித்துக் கொண்டார். அதனுடன் உத்தரை யின் கருப்பத்தில் வளர்ந்து வரும் கருவுக்கு ஆபத்து நேரா வண்ணம் பார்த்துக் கொண்டார். குந்திதேவி, தம் மக்களைக் காப்பாற்றியதோடு வம்சம் அற்றுப் போகாமல் காப்பாற்றியதற்காகவும் கண்ணனை வணங்கிப் போற்றி னாள்.

பின்னர் அனைவரும் அஸ்தினாபுரம் சென்றனர். அங்குச் சில நாள் தங்கியிருந்து கண்ணன் துவாரகைக்குச் செல்ல எண்ணினார்.

## பீஷ்மர்

போரில் ஏற்பட்ட காயங்களால் உடலெங்கும் ரணமாகி அம்புப் படுக்கையில் பீஷ்மர் படுத்திருந்தார். உத்தரா யணத்தை எதிர்நோக்கி உயிரை விடாது, உடல் வேதனை யைச் சகித்துக் கொண்டிருந்தார். அப்பெருமானைக் காண்பதற்காகத் தருமர் முதலானோர் சென்று; அவரை வணங்கினர், அவரைத் தரிசிப்பதற்காக பர்வதர், நாரதர் முதலான ரிஷிகளும் அங்கு வந்திருந்தனர். எழுந்திருக்க இயலாமையால் பிதாமகர் அவ்விடம் வந்திருந்த முனிவர் களுக்குத் தம் மனத்தால் வந்தனம் செய்தார்.

எதிரில் நின்றிருந்த கிருஷ்ணனை உள்ளத்தில் வழி பட்டார். பாண்டவர்களை நோக்கிக் கூறலானார்.

''தர்ம சிரேஷ்டர்களே! உங்கள் மனத்தில் குடி கொண்டிருக்கும் எண்ணங்களை நான் அறிவேன் எண்ணற்ற பந்து மித்திரர்களைப் போரில் கொன்று வீண் பழிக்கு ஆளாகி விட்டோமே என்று வருந்துகிறீர்கள். இவ்வுலகில் இவையனைத்தும் உங்களால் நடக்க வேண்டு மென்று விதிக்கப்பட்டுள்ளது. ஆகவே இதைக் குறித்து நீங்கள் வருந்த வேண்டா. உங்களால் நான் கண்ணனைத் தரிசித்தேன். உயிர் பிரியும் நேரத்தில் கண்ணனைத் தரிசிக்கும் பாக்கியத்தைப் பெற்றேன்'' என்றார்.

ஒருவாறு மன ஆறுதல் பெற்று தருமபுத்திரர் பிதா மகரை நோக்கி, ''மகா சிரேஷ்டரே! தாங்கள் எங்களுக்குத் தர்ம மார்க்கத்தை உபதேசிக்க வேண்டுகிறேன்'' என்றார். அவ்வாறே பீஷ்மர் பாண்டவர்களுக்குத் தர்ம மார்க்கத்தை உபதேசித்தார். அது கீதையைப் போல சிறந்த சாஸ்திரமாகப் போற்றப்படுகிறது.

பீஷ்மர் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த உத்தராயண புண்ணிய காலமும் வந்தது. அதாவது தை மாதம் பிறந்தது. எதிரில் நின்று கொண்டிருந்த கிருஷ்ண

பரமாத்மாவைத் துதித்தார், அவருடைய கருணா சொரூபத்தை நன்கு பருகினார். இவ்வாறு பீஷ்மர் துதித்த வாறே தம் ஆத்மாவை கிருஷ்ணனிடம் லயிக்கச் செய்து, பரம்பொருளோடு கலந்தார். தேவ துந்துபி முழங்கியது. மலர் மாரி பொழிந்தது.

தருமர் பீஷ்மருக்குச் செய்ய வேண்டிய உத்திரகிரியை களைச் செய்தார். அனைவரும் அஸ்தினாபுரம் திரும்பினர்.

திருதராஷ்டிரனைப் பணிந்து, ஆசி பெற்று, தரும புத்திரர் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தத் தொடங்கி னார். குருக்ஷேத்திரத்தில் பீஷ்மர் உபதேசித்த அறவழியில் நின்று பரிபாலனம் செய்து வந்தார். அதனால் நாடு செழித்தது. மக்கள் நல்வாழ்வைப் பெற்றனர். சில நாட்கள் அஸ்தினாபுரியில் தங்கியபின் கிருஷ்ணன் துவாரகைக்குப் புறப்பட்டுச் சென்றார். மங்கள வாத்தியங்கள் முழங்கின. நகர மாந்தர் மலர் தூவி வழியனுப்பினர்.

## பரீட்சித்து பிறப்பு

உத்தரையின் கருப்பத்தில் வளர்ந்துவந்த சிசு சுபயோகம் கூடிய ஒரு நல்ல நாளில் பிறந்தது. தருமர் குதூகலம் அடைந்தார். முனிவர்களை வரவழைத்துப் புண்ணியா வசனம் செய்தார். அந்தணர்களுக்குத் தானதருமங்களைச் செய்தார். இக்குழந்தை விஷ்ணுவால் காப்பாற்றப்பட்ட தால் விஷ்ணுராதன் என்று பெயரிட்டனர்.

''இவன் சிறந்த சத்திய சந்தனாக விளங்குவான்; தட்சகன் என்னும் நாகத்தால் மரணமடைவான்; அந்த மரணத்தை முன்னால் அறிந்து சுகர் மூலம் பகவானுடைய திவ்விய சரித்திரங்களைக் கேட்டுக் கங்கைக் கரையில் தன் சரீரத்தைவிட்டு மோட்சத்தை அடைவான்'' என்று ஜோதிடர்கள் கூறினார்.

அபிமன்யுவுக்கும் உத்தரைக்கும் பிறந்த விஷ்ணுராதன் என்னும் இந்தக் குழந்தை நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து வரலானான். தாயின் கருப்பத்தில் இருக்கையில் தான் கண்ட விஷ்ணுவின் சொரூ

பத்தைத் தான் பார்க்கும் மனிதர்களிடையே அவன் தேடி வந்தான். அதன் காரணமாக அவனுக்குப் ''பரீட்சித்து'' என்ற பெயர் விளங்கலாயிற்று.

ஆண்டுகள் பல கடந்தன. துவாரகையில் கண்ணன் வைகுந்த பதவியடைந்த செய்தியைத் தரும புத்திரர் கேள்வியுற்று, துக்கத்தில் மூழ்கினார். கலியின் ஆதிக்கத்தை மக்களிடம் கண்டார். ஆகவே அவர்தம் உலக வாழ்வை முடித்துக் கொள்ள எண்ணம் கொண்டார். பௌத்திரன் விஷ்ணுராதனான பரீட்சித்துக்கு அஸ்தினாபுரத்தில் முடி சூட்டினார்.

அருச்சுனன் மகன் அபிமன்யு. அபிமன்யுவின் மகன் பரீட்சித்து. ஆகவே பரீட்சித்து தருமருக்குப் பௌத்திரன் முறை என்பதை வாசகர்களுக்கு ஞாபகப்படுத்துகிறோம்.

பின்னர், அனைத்தையும் துறந்து, மரவுரிதரித்து ஒருவரிடமும் பேசாமல், பரப்பிரமத்தைத் தியானித்தவராய் வடக்கு நோக்கிப் புறப்பட்டார் தருமர். அவரைப் பின் தொடர்ந்து பாண்டவர்களும் திரௌபதியும் சென்றனர்.

## பரீட்சித்து ஆட்சி செய்தல்

தருமபுத்திரரால் முடிசூட்டப்பட்ட பரீட்சித்து, சிறந்த முறையில் ஆட்சி செய்து வந்தான். தன் அம்மான் உத்தரனுடைய மகள் இராவதியை மணந்து கொண்டான். அவளுக்கு ஜனமேஜயன் முதலான நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். குரு கிருபாசாரியாரை வணங்கி அவர் ஆசியுடன் மூன்று அசுவமேத யாகங்கள் செய்தான்.

கலியுகம் பிறந்து விட்டது. எனினும் பரீட்சித்து மன்னனின் நல்லாட்சியின் காரணமாக கலிபுருஷன் ஒதுங்கியிருந்தான். ஒரு சமயம் பரீட்சித்து மன்னன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். துஷ்ட மிருகங்களை வெகு நேரம் துரத்தி வேட்டையாடியபின் பசி, தாகம் முதலியவற்றால் மிகவும் களைப்படைந்தான். நீர் தேடிச் சென்றான். இறுதியில் ஓர் ஆசிரமத்தை அடைந்தான்.

# 7

அங்கே சமீகர் என்னும் முனிவர் தவம் செய்து கொண் டிருந்தார். அரசன் அவரை அணுகி நீர் கேட்டான். அவர் தியானத்தில் ஈடுபட்டிருந்தமையால் அரசனுடைய வேண்டு கோள் அவர் செவியில் புகவில்லை. முனிவர் தன்னை அவமதிப்பதாக மன்னன் கருதினான். கோபங்கொண்டான்

நாலா புறமும் பார்த்தான். ஓரிடத்தில் பாம்பு ஒன்று செத்துக் கிடந்தது. அருகில் சென்று அதை வில்லினால் எடுத்து அவர் கழுத்தில் மாலையாகப் போட்டான். இதனால் நேரப் போகும் பின் விளைவை அவன் கருத வில்லை. ஆசிரமத்தைவிட்டு வெளியேறினான். இது சமீகருக்குத் தெரியாது.

சற்று நேரம் கழித்து, முனிவருடைய குமாரன் சிருங்கி என்பவன் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தான்; திடுக் கிட்டான். தந்தையின் கழுத்தில் செத்த பாம்பை மன்னன் மாலையாகப் போட்டுச் சென்றதை ஆசிரமத்துப் பிள்ளை கள் கூறக் கேட்டான். தந்தையிடம் ஓடிச் சென்று அவரை எழுப்பினான். கோபத்தால் குமுறினான்.

''ஒரு தவறும் செய்யாத என் தந்தையை அவமதித்த அரசனை இன்றைக்கு ஏழாவது நாள் தட்சகன் தீண்டட்டும்'' என்று கமண்டலத்திலிருந்து நீரைக் கையில் எடுத்து மந்திரித்துத் தெளித்தான்.

முனிவர் கண் விழித்துப் பார்த்தார். மகன் கதறுவதைக் கண்டார். அவன் சாபங் கொடுத்ததை அறிந்து பதறினார். ''மகனே, பரீட்சித்து மன்னன் சாதாரணமானவன் அல்லன். கருவில் இருக்கும் போதே பகவானைக் கண்டிருக்கிறான் அத்தகையவனுக்குச் சாபம் கொடுத்து விட்டாயே பிராமண சாபம் கட்டாயம் பலிக்குமே'' என்று சமீகர் மன வருத்தமடைந்தார்.

''நடந்தது நடந்து விட்டது. இனி அதை மாற்ற முடியாது. அரசன் தட்சகனால் தீண்டப் படுவான். இருப் பினும் நம் சாபமே அவனுக்கு நற்கதியைக் கொடுப்பதா

இருக்கட்டும். உன் சாபத்தைப் பற்றி சிஷ்யன் ஒருவன் மூலம் அரசனுக்கு உடனடியாகச் சொல்லியனுப்பு'' என்றார் முனிவர்.

பரீட்சித்து மன்னன் அரண்மனைக்குத் திரும்பி தான் செய்தது தவறு என்பதை எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான். அச்சமயத்தில் ஆசிரமத்திலிருந்து வந்த சிஷ்யன் முனிபுத்திரன் சாபம் அளித்திருப்பதைப் பற்றிக் கூறினான். இந்தப் புவியில் வாழப் போவது இனி ஏழு நாட்களே! அதற்குள்ளாக பகவானுடைய பிரீதியைத் தான் பெற்று நல்ல கதியை அடைய விரும்பினான், பரீட்சித்து.

ஏழாவது நாள் அவனுக்கு வர இருக்கும் மரணத்தை எதிர்நோக்கி ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரணாரவிந்தத்தையே தியானித்துக் கொண்டிருக்க விரும்பினான். ஆட்சியைப் புத்திரனாகிய ஜனமேஜயனிடம் ஒப்புவித்துவிட்டு, அப்போதே அனைவரிடமும் விடை பெற்றுக் கொண்டான். இவ்வுலக பந்தங்களைத் துறந்து, கங்கைக் கரையை அடைந்தான்.

தர்ப்பை நுனிகள் கிழக்கு முகமாக இருக்குமாறு பரப்பப் பட்டது. அதன் மீது மன்னன் வடக்கு நோக்கி அமர்ந்தான். கிருஷ்ண பரமாத்மாவைத் தியானித்தான். இச் செய்தி நாடெங்கும் பரவியது. முனிவர்கள் பலர் அங்கு வந்து சேர்ந் தனர். மன்னன் முனிவர்களை வணங்கி, ''மகா புருஷர் களே! சிருங்கியின் சாபப்படி தட்சகன் என்னைத் தீண்டப் போகிறான். அதைத் தடுக்க நான் விரும்பவில்லை. என் உயிர் பிரியும்வரை ஸ்ரீமன் நாராயணனுடைய அவதார மகிமைகளை எடுத்துக் கூறுங்கள். என் ஐம்புலன்களும் பரமாத்மாவான விஷ்ணுவையே சரண் அடையட்டும். எந்தப் பிறவி எடுத்தாலும் அப்பிறவிகளில் பகவானிடம் இடையறாத பக்தியும், உங்களைப் போன்ற மகான்களை ஆதரிக்க விருப்பமும் எனக்கு உண்டாகட்டும்'' என்று பிரார்த்தித்தான். அப்போது வேததுந்துபிகள் முழங்கின மலர் மாரி பொழிந்தது.

## சுகப் பிரம்ம ரிஷி :

அப்போது வியாச பகவானுடைய புத்திரரான சுக்ர் வந்து கொண்டிருந்தார். அவர் எதிலும் விருப்பம் இல்லாதவர்; ஓரிடத்தில் நிலையாகத் தங்காதவர். சஞ்சரித்துக் கொண்டே இருப்பவர்; பகவத் தியானத்தில் திளைப்பவர்; அவரைக் கண்டதும் அனைவரும் எழுந்து வரவேற்றனர்.

பரீட்சித்து, அம்மகானுடைய பாதங்களில் விழுந்து வணங்கினான். இரு கைகளையும் கூப்பி, "சுவாமி, நான் மரணத்தை எதிர்நோக்கியிருக்கிறேன். எனக்கு எது அவசியமோ அதைக் கூறுங்கள்" என்று வேண்டினான். சுகர் மனமகிழ்ந்து அரசன் அருகில் அமர்ந்தார்.

கங்கைக் கரையில் கூடியிருக்கிற பல முனிவர்களுக்கு மத்தியில் சுகப் பிரம்மரிஷி, பரீட்சித்து மன்னனுடைய வேண்டுதலைக் கேட்டு, பெரிதும் மகிழ்ந்தார். "மன்னா! மிகவும் சிறந்த கேள்வியைத்தான் கேட்டாய். மோட்சத்தை அடைய விரும்புகிறவன் பந்தத்தைப் போக்கி, பிறவாப் பேரின்பத்தை அளிக்க சர்வாத்மாவான ஸ்ரீமன் நாராயணனைத் தியானிக்க வேண்டும். மரண சமயத்தில் இதைத் தவிர வேறு ஒன்றும் மேன்மையாகச் சொல்லப்படவில்லை. துவாபர யுகத்தின் முடிவில் என் பிதாவான வியாச பகவானிடமிருந்து அத்தியயனம் செய்த பாகவத புராணத்தை உனக்குச் சொல்லுகிறேன். மனிதர்களால் எல்லா இடங்களிலும் எல்லா விதத்திலும் வணங்கத்தக்கவர் நாராயணனே ஆவர். அவருடைய திவ்விய சரித்திரங்களைக் கேட்டவர்கள் பகவானுடைய பாதாரவிந்தங்களை அடைகின்றனர்.

இவ்வாறு சுகப் பிரம்ம ரிஷி பரீட்சித்து மன்னனுக்கு ஸ்ரீமத் பாகவத புராணத்தை உபதேசித்தார். இதன் விளக்கத்தைப் பின்வரும் அத்தியாயங்களில் காணலாம்.

பரீட்சித்து சுகாசாரியரை வலம் வந்து நமஸ்கரித்தான். ''பரம புருஷரே! தங்களால் உபதேசிக்கப்பட்ட நான் மரணத்தைக் கண்டு பயப்படவில்லை. எத்தனையோ நல்ல தத்துவங்களை எடுத்துக் கூறி எனக்கு நல்ல மார்க்கத்தைக் காட்டினீர்கள். பிறப்பும் இறப்பும் மாறி மாறி வரும் இந்த சம்சாரத்தில் கிடந்து உழலாதிருக்கும் உன்னத வழியை உனக்கு உபதேசித்தீர்கள். சர்வ ஜன்மத்தில் நான் செய்த நல்ல காரியமே இந்த ஜன்மத்தில் தங்களைத் தரிசிக்கும் பாக்கியத்தை அடியேனுக்கு அளித்தது'' என்று கூறி ஆனந்தக் கண்ணீர் பெருக்கினான்.

பின்னர் சுகப் பிரம்ம ரிஷி அங்கிருந்த முனிவர்களிடமும் விடை பெற்றுச் சென்றார்.

## தட்சகன்

சிருங்கி கொடுத்த சாபப்படி, பரீட்சித்து மன்னனைக் கடிக்க, தட்சகன் என்னும் பாம்பு பிராமணனாக வேடம் கொண்டு புறப்பட்டு வந்தான். அந்தச் சமயத்தில் பரீட்சித்து மன்னனைக் காண காசியபன் என்ற பிராமணனும் வந்து கொண்டிருந்தான். இருவரும் சந்தித்து உரையாடினர்.

''நீ எங்கு செல்கிறாய்?'' என்று தட்சகன் கேட்டான்.

''ஐயா, பரீட்சித்து மன்னனை இன்று தட்சகன் கடிக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். விஷம் இறக்கு வதில் நான் சக்தி வாய்ந்தவன். ஆகவே தட்சனால் கடிக்கப் பட்ட அரசன் உடலில் இருந்து விஷத்தை இறக்கி, அவனைக் காப்பாற்றி நிறைய பொருள் பெறலாம் என்று செல்கிறேன்'' என்றான் அந்தப் பிராமணன்.

''அப்படியா? தட்சகன் விஷத்தை உன்னால் இறக்க முடியுமா?'' இது தட்சகன் கேள்வி.

''இதில் என்ன சந்தேகம்? ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனையே அழைத்து வாரும். அவனுடைய விஷத்தை இறக்கிக் காட்டுகிறேன்.'' இது அந்த அந்தணனின் பதில்.

''நான்தான் தட்சகன். இந்த ஆலமரத்தை நான் என் விஷத்தால் பஸ்பமாகச் செய்கிறேன். தாங்கள் இந்த மரத்தை முன்போல் நிலை பெறச்செய்யுங்கள் பார்ப்போம். அது உங்களால் முடிந்தால் நீங்கள் அரசனிடம் எதிர் பார்க்கும் தொகையைவிட அதிகமாகவே தருகிறேன்'' என்பது தட்சகனின் சவால்.

காசியபன் அதற்கு இணங்கினான். தட்சகன் சர்ப்ப ரூபத்தை ஏற்று ஆலமரத்தைத் தீண்டினான். நொடிப் பொழுதில் விஷ வேகத்தால் ஆலமரம் சாம்பலாயிற்று, காசியபன் நீராடி மந்திரம் ஜபித்து ஒரு கை நீரை எடுத்து சாம்பலில் தெளித்தான். உடனே ஆலமரம் முன் போல் தளிர்த்து நின்றது.

தட்சகன் அந்தணனை வலம் வந்து வணங்கினான். ''ஐயா, தாங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவர்'' என்று பாராட்டி நிறைய பொன்னும் பொருளும் குவித்தான். காசியபன் அவைகளை எடுத்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு வந்த வழியே திரும்பிச் சென்றான்.

அதன் பிறகு தட்சகன் அந்தண வடிவந்தாங்கி பரீட்சித்து தங்கியிருக்கும் கங்கைக் கரையை அடைந்தான். பரீட்சித்து தியானத்தில் அமர்ந்திருந்தான். தட்சகன் அவனை நெருங்கி பாம்புருவங் கொண்டு அவன் உடலைத் தீண்டினான். பரீட்சித்தின் உடல் விஷத்தால் சாம்பலா கியது. அருகிலிருந்தவர்கள் திடுக்கிட்டனர். அந்தச் சாம்பலில் இருந்து ஒரு திவ்விய தேஜஸ் புறப்பட்டு வானில் சென்று மறைந்தது. தேவர்கள் மலர்மாரி பெய்தனர்; மங்கல வாத்தியங்கள் முழங்கின.

## ஜனமேஜயன்

தன் தந்தை தட்சகனால் மரணமடைந்தார் என்பதை அறிந்து, ஜனமேஜயன் கடுங்கோபங் கொண்டான். வேதங் கற்ற வேதியர்களை அழைத்து, சர்ப்ப யாகம் செய்தான். மந்திர சக்தியால் பல இடங்களில் இருந்த விஷப் பாம்புகள் ஈர்க்கப்பட்டு ஓமகுண்டத்தில் விழுந்து மாண்டன. தட்சகன் மட்டும் வரவில்லை. அதற்கு என்ன காரணம் என்று வினவினான்.

''மன்னா! தட்சகன் இந்திரனிடம் சரண் அடைந் திருக்கிறான்'' என்றனர்.

பின்னர் இந்திரனையும் சேர்த்து இழுக்க மந்திர உச்சாடனம் செய்யப்பட்டது. நிலைமை கட்டுக்கடங்காமல் போனதை அறிந்து தேவ குருவாகிய பிரகஸ்பதி ஜனமே ஜயனிடம் ஓடி வந்தார்.

''மன்னா! தட்சகனுக்கு உன் தந்தையிடம் பகையில்லை. முனி குமாரன் சாபமே அதற்குக் காரணம். அதை அவன் நிறைவேற்றினான். மேலும் தட்சகன் அமிர்தம் உண்டவன். அமிர்தம் உண்டவர்களுக்கு அழிவு இல்லை. விதிவசத்தால் நேர்ந்ததற்காக ஒரு பாவமும் அறியாத பாம்புகளை அழித்தது போதும். யாகத்தை இதோடு நிறுத்து'' என்று வேண்டினார்.

ஜனமேஜயன் வியாழ பகவான் அறிவுரையைக் கேட்டு, சாந்தமடைந்தான். யாகத்தை நிறுத்தினான். தட்சகன் யாக குண்டத்தில் விழாமல் தப்பினான்.

ஸ்ரீமத் பாகவத புராணம் நமக்குக் கிடைப்பதற்குக் காரணமாயிருந்த பரீட்சித்து மன்னனின் வரலாறு இதோடு நிறைவு பெறுகிறது.

# 2. ஜய விஜயர்

ஒரு சமயம் பிரம்மாவின் புத்திரர்களான சனகர், சனந்தர், சனத்குமாரர், சனத் சுஜாதர் எனப்படும் நால்வரும் வைகுண்ட நாதனை தரிசிக்கச் சென்றார்கள். பரம பக்தர்களாகிய அவர்கள் தங்கள் யோக பலத்தினால் எங்கும் செல்லும் சக்தி பெற்றிருந்தனர். வைகுண்டத்தின் அழகிய ஆறு வாயில்களையும் கடந்து பகவான் பள்ளி கொள்ளும் ஏழாவது வாயிலை நெருங்கினர்.

வாயிலின் இருபுறமும் ஜயன் விஜயன் என்னும் இருவரும் காவல் புரிந்து வந்தனர். ஆடையின்றி வரும் நான்கு பாலர்களைக் கண்டதும் துவாரபாலகர்கள் கோபங் கொண்டனர். அருகில் வந்ததும் கைப்பிரம்பை நீட்டி அவர்கள் உள்ளே நுழையாதபடி தடுத்தனர். நால்வரும் திடுக்கிட்டனர். எம்பெருமானைத் தரிசிக்க உள்ளே செல்ல அனுமதி கிடைக்காததைக் கண்டு வெகுண்டனர்.

''அட அறிவிலிகளே! என்ன காரியம் செய்தீர்கள்? எங்களை ஏன் தடுத்து நிறுத்தினீர்கள்? பகவானைத் தரிசிக்கச் செல்வதில் பேதம் இல்லை என்பது உங்களுக்குத் தெரியாதா? பகவானுக்குச் சேவை செய்யும் பாக்கியம் பெற்றிருந்தும் உங்கள் உள்ளத்தில் இந்த பேதம் தோன்றலாமா? நீங்கள் செய்தது பெரும் தவறு. பாகவதர்களான எங்களுக்கு பகவத்தரிசனம் கிடைக்காமல் தடுத்து நிறுத்தி விட்டீர்கள். அதற்குப் பிராயச்சித்தமாக காமம், குரோதம், லோபம் எனப்படும் மூன்று சத்துருக்கள் நிறைந்துள்ள பூலோகத்தில் போய் பிறப்பீர்களாக. உங்களுக்கு இந்த இடம் தகாது'' என்று விரைந்து கூறினார்கள்.

நால்வருடைய கோபச் சொற்களைக் கேட்ட அவ்விருவரும் நடுநடுங்கினர். அவர்களுடைய பாதங்களில் விழுந்து வணங்கினர். ''முனிவர்களே! எங்கள் அறியாமை

யினால் இத்தவறு நேர்ந்துவிட்டது. உங்களுடைய சிறப்பை அறியாமல் இந்த அபசாரம் செய்துவிட்டோம். பெரியோர்களே! எங்களிடம் கருணை காட்டுங்கள். பகவானைப் பிரிந்து வாழுமாறு செய்து விட்டீர்களே. பகவானுடைய நினைப்பை மறக்காமல் இருக்க அனுமதி அளியுங்கள்'' என்று கதறினர்.

வெளியே நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கேட்டு பதறியபடி பகவான் அங்கு வந்து சேர்ந்தார். லட்சுமி தேவியாரும் பின் தொடர்ந்தார். சனகாதியர் நால்வரும் லட்சுமி சமேதராய் பகவானைக் கண்டு களி கூர்ந்தனர். துதி பாடினர். எம்பெருமான் அவர்களைப் பார்த்து ''அன்பர்களே! உங்கள் பக்திப் பாடல்கள் என்னை மகிழ்வித்தன. என்னுடைய வாயிற்காவலர்கள் தங்களுக்குச் செய்த அபசாரத்துக்காக வருந்துகிறேன். அவர்களுக்கு நீங்கள் கொடுத்த தண்டனையை நான் அங்கீகரிக்கிறேன்'' என்றார்.

பகவானுடைய வார்த்தைகளைக் கேட்ட நால்வரும் திடுக்கிட்டனர். ''வாயிற் காவலர்கள் செய்த தவற்றைத் தான் செய்த தவறாக இவர் ஏன் ஏற்றுக் கொள்ள வேண்டும்? இதற்கு என்ன காரணம்'' என்று திகைத்து நின்றனர்.

''பரந்தாமா! எங்களை மன்னித்து விடுங்கள். நாங்கள் அவசரப்பட்டு இந்த சாபத்தைக் கொடுத்து விட்டோம். தங்கள் விருப்பம் போல் எங்களைத் தண்டிக்கலாம்'' என்று கண்ணீர் விட்டனர்.

பகவான் புன்முறுவல் செய்து, ''முனிபுங்கவர்களே! நீங்கள் வருந்த வேண்டாம். எல்லாம் நன்மைக்கே. இவர்கள் முன்பொரு சமயம் மகாலட்சுமியையும் தடுத்து நிறுத்தி அவளால் சபிக்கப்பட்டார்கள். இவர்கள் விரைவிலேயே தண்டனையை அனுபவித்துவிட்டு என்னிடம் திரும்பி விடுவார்கள்'' என்று ஆறுதல் கூறினார்.

சனகாதி முனிவர்கள் நால்வரும் மகிழ்ச்சியோடு இருப்பிடம் திரும்பினர். பகவானும் ஜய விஜயர்களை அழைத்து அவர்களைப் பூலோகத்தில் போய் அசுரர்களாகப் பிறக்குமாறு தாமே வந்து அவர்களுக்கு அனுக்கிரகம் செய்து அழைத்துக் கொள்வதாகவும் கூறினார்.

அதன்படியே இவ்விருவரும் திரேதாயுகத்தில் இரணிய கசிபு, இரண்யாட்சனாகவும், திரேதாயுகத்தில் இராவணன், கும்பகர்ணனாகவும், துவாபரயுகத்தில் சிசுபாலன் தந்த விக்ரமனாகவும் தோன்றினார்கள் என்று பின்வரும் அத்தியாயங்களில் காண்பீர்கள்.

பல பிறவிகள் எடுத்து, பகவானுக்குப் பக்தர்களாக இருப்பதைவிட; மூன்றே பிறவிகளில் பகவானுக்குப் பகைவர்களாக இருந்து விரைவில் தங்களுடைய பழைய இடத்திற்கு வர அவர்கள் விரும்பினர் என்று காரணம் கூறுகின்றனர்.

# 3. மச்சாவதாரம்

## அயக்கிரீவன்

முந்தைய கல்பத்தின் முடிவில் நைமித்திகம் என்னும் பிரளயம் உண்டாயிற்று. பிரளய வெள்ளத்தில் எல்லா உலகங்களும் மூழ்கின. பிரமதேவனுடைய நித்திரைக் காலம் அது. அப்போது அவர் முகத்திலிருந்து வேதங்கள் வெளிப்பட்டன. அருகிலிருந்த அயக்கிரீவன் என்னும் அசுரன் அதைக் கண்டு வேதங்களை அபகரித்துச் சென்றான். அதைக் கண்ட பகவான் மச்ச பேதத்தை எடுத்து அவனைச் சம்சரித்து வேதங்களை மீட்டு வந்தார். அச்செய்தி கீழே கூறப்படுகிறது.

## சத்தியவிரதன்

சத்திய விரதன் என்னும் ராஜரிஷி நீரையே உணவாகக் கொண்டு, பகவானைக் குறித்து தவஞ் செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் நதியில் இறங்கி, தர்ப்பண நீரில் மீன் குஞ்சு ஒன்று நீந்திவர, அதை நதியில் விட்டு விட்டான். மீன் பேசத் தொடங்கியது! "முனி சிரேஷ்டரே! இந்நதியில் தன் இனத்தையே விழுங்கும் எதிரிகளிடமிருந்து என்னைக் காப்பாற்றுவாயாக" என்றது.

முனிவன் ஆச்சரியப்பட்டு, அம்மீனைத் தன் கமண்டல நீரில் எடுத்துப் போட்டுக் கொண்டு, ஆசிரமம் திரும்பினான். மறுநாள் காலை பார்த்தபோது அந்த மீன் கமண்டல அளவுக்குப் பெரிதாகி விட்டிருந்தது. "எனக்கு இந்த இடம் போதவில்லை. பெரிய நீர் நிலையில் கொண்டு போய் விடுவாயா?" என்று வேண்டியது அந்த மீன்.

இவ்வாறே குளம், மடுவு முதலிய நீர் நிலைகளும் போதாமல் கடலில் கொண்டுபோய் விட வேண்டியதாயிற்று. "ராஜ ரிஷியே! இக் கடலில் திமிங்கலங்கள் உள்ளனவே; அவைகளால் எனக்கு ஆபத்து வருமே" என்றது.

சத்திய விரதன் இருகரங்களையும் கூப்பி, "தாங்கள் என்னைச் சோதிக்கிறீர்களோ? தாங்கள் சாதாரண மீன் அல்ல. பாற்கடலில் துயிலும் பரந்தாமனாகவே காண்கிறேன். இல்லையேல் சிறுமச்சமாக இருந்த தாங்கள் இப்பெரும் உருவத்தைத் தரிக்க முடியாது. தாங்கள் இப்பேருருவத்தை எடுக்க வேண்டிய காரணம் என்ன?" என்று பிரார்த்தித்தான்.

"சத்தியவிரதா, இன்றைக்கு ஏழாம் நாள் பெரும் பிரளயத்தால் பூமண்டலம் முழுமையும் நீரில் அழுந்தி அழியப் போகிறது. அப்போது நீரில் ஓர் ஓடம் மிதந்து வரும். அதில் சப்த ரிஷிகளும் வீற்றிருப்பர். சகல மூலிகை

களுடன் நீயும் அந்த ஓடத்தில் ஏறி என்னைத் தியானித்துக் கொண்டு சஞ்சரித்து வரவும்.

''பயங்கரமான காற்றினால் ஓடம் இங்குமங்கும் அலைக்கழியும். அப்போது மீன் உருவில் என்னைக் கண்டு என் கொம்பொன்றில் படகை இழுத்துக் கட்டு. அப்படகை இழுத்துக் கொண்டு பிரளய காலம் முழுவதும் நீரில் சஞ்சரிக்கப் போகிறேன்'' என்று கூறி நீரில் மறைந்தார்.

சத்தியவிரதன் அந்த நல்ல நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஏழு நாட்களும் கழிந்தன. பெருமழை பெய்யத் தொடங்கியது. எங்கும் வெள்ளக்காடாய் காட்சியளித்தது. அந்தப் பயங்கர வெள்ளம் பூமியை விழுங்கி விட்டது. எங்கும் நீர்மயம். பகவானைத் தியானித்துக் கொண்டிருந்த சத்தியவிரதனை நோக்கி ஓடம் ஒன்று நீரில் மிதந்து வந்தது. முன் அறிவித்தபடி சப்த ரிஷிகளும் அதில் இருந்தனர். மூலிகைகளுடன் சத்திய விரதன் அதில் ஏறிக் கொண்டான்.

பெருங்காற்றால் ஓடம் இங்குமங்கும் அலைக் கழிக்கப்பட்டது. பகவான் முன்பு கூறியபடி மீனாக நீரில் தோன்றினார். சத்திய விரதன் ஓடத்தை இழுத்து மீன் கொம்பில் கட்டினான். துதிப் பாடல்களைப் பாடினான். பிரளய காலம் முழுவதும் ஓடம் நீரில் மிதந்தது. அப்போது மச்ச உருவில் இருந்த பகவான் சத்திய விரதனுக்கு ஆத்ம உபதேசம் செய்தார். மச்ச புராணத் தையும் உபதேசித்தார்.

பகவானின் அருள் பெற்ற சத்தியவிரதனே இந்த மனுவுக்கு அதிபதியாக வைவசுத மனு ஆனான். தம்மை வணங்கியவர்களை ரட்சிக்க அந்தந்தக் காலங்களில் பகவான் அவதரித்து அவர்களுக்கு அனுக்கிரகம் செய்து வந்தார்.

டார்வின் என்ற ஆராய்ச்சியாளது 'உள்ளரது சிறத்தல்' (evolution Theory) என்ற உண்மையை விளக்குகிறார். பகவானின் மச்ச. கூர்ம, வராக, நரசிம்ம, வாமன அவதாரங்கள் ஒன்றிலிருந்து ஒன்று சிறந்து காணப்படுவது அவரது சித்தாந்தத்திற்கு ஏற்ப இருக்கின்றது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இதன் முடிவை வாசகர் களின் சிந்தனைக்கே விட்டு விடுகிறேன்.

பகவான் எடுத்த பத்து அவதாரங்களைப் பற்றிய பாடல் வருமாறு:

பகவான் எடுத்த பத்து அவதாரங்களையும் ஒரே பாட்டில் விவரித்து திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

**'மீனோ (டு) ஆமை கேழலரி**
**குறளாய் முன்னும் இராமனாய்த்**
**தானாய் பின்னும் இராமனாய்த்**
**தாமோ தரனாய்க் கற்கியும்**
**ஆனான் தன்னை கண்ண புரத்(து)**
**அடியன் கலியன் ஒலி செய்த**
**தேனார் இன் சொல் தமிழ் மாலை**
**செப்பப் பாவம் நில்லாவே'**

—திருமங்கையாழ்வார்
பெரிய திருமொழி

1. மீன் — மச்சாவதாரம்
2. ஆமை — கூர்மாவதாரம்.
3. கேழல் — வராக அவதாரம்
4. அரி — நரசிம்ம அவதாரம்.
5. குறள் — வாமனாவதாரம்.
6. முன் இராமன் — பரசுராமன்.
7. தானாய் — தசரதராமன்.
8. தாமோதரன் — கிருஷ்ணன்.
9. பின் இராமன் — பலராமன்.
10. கற்கி — கல்கி அவதாரம்.

மேற்கண்ட பத்து அவதாரங்களை எடுத்தவனும் திருக்கண்ணபுரத்து எழுந்தருளியிருப்பவனுமாகிய இறைவனைப் பற்றி திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய தேன் பொருந்திய இனிய சொற்களால் ஆகிய இந்தத் தமிழ் மாலையைப் பாராயணஞ் செய்து துதிப்பவர்களின் பாவம் விலகிப் போகும் என்பதாம்.

# 4. கூர்மாவதாரம்

## அறிமுகம்

கூர்மம் என்றால் ஆமை. தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையை மத்தாகக் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்தபோது அம் மலை நீரில் நிலைத்து நிற்காமல் இங்கு மங்கும் சாயத் தொடங்கியது. தேவர்களும், அசுரர்களும் என்ன செய்வதென்று தோன்றாமல் திகைப்படைந்தனர். பகவான் கூர்மமாக உருவெடுத்து நீரில் மூழ்கி அடிப்பாகத்தில் சென்று மந்தர பர்வதத்தைத் தம் முதுகில் தாங்கிக் கொண்டார். மலை நிலைத்து நின்றது. தேவர்களும் அசுரர்களும் உற்சாகத்துடன் திருப்பாற்கடலைக் கடையத் தொடங்கினர். அச்செய்தி வருமாறு :

தேவர்கள் அசுரர்களின் கொடுமைகளுக்கு ஆளாகித் துன்புற்றனர். அவர்கள் இதுபற்றி பிரமதேவனிடம் முறையிட்டனர். பிரமதேவன் அவர்களை அழைத்துக் கொண்டு பரந்தாமனிடம் சென்றார். அனைவரும் பகவானுடைய கல்யாண குணங்களைப் பலவாறாகக் கூறி ஸ்தோத்திரம் செய்தனர். பரந்தாமன் அவர்கள்பால் அன்பு கொண்டு அவர்கள் முன் தோன்றினார்.

பிரமதேவன் அவர் பாதங்களில் விழுந்து வணங்கி, "பரந்தாமா! தேவர்களின் துன்பம் தங்களுக்குத் தெரியாததா? அவர்கள் ஆறுதல் பெறத் தாங்கள்தான் அருள் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தார். தேவர்களும் அவ்வாறே கோரினர்.

## திருப்பாற்கடல்

"தேவர்களே! அசுரர்களோடு கொண்டிருக்கும் பகையை விட்டு நட்புக் கொள்ளுங்கள். இருதரப்பாரும் சேர்ந்து மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவும் கொண்டு திருப்பாற்கடலைக் கடையுங்கள். அதிலிருந்து அமிர்தம் கிடைக்கும். அதனால் உங்களுக்கு நன்மை உண்டாகும்படி நான் கவனித்துக் கொள்ளுகிறேன்" என்று கூறி, பகவான் மறைந்தார்.

தேவர்கள், அரசர் தலைவனான பலியைச் சந்தித்து, அவனுடைய சம்மதத்தைப் பெற்றுக் கொண்டனர். பின்னர் இருதிறத்தாரும் மந்தர மலையை அடியோடு பெயர்த்துப் பாற்கடலுக்குத் தூக்கிச் சென்றனர். வாசுகியும் தேவ அசுரர்களின் வேண்டுகோளின்படி கயிறாக இருக்கச் சம்மதித்தான். அவ்வாறே வாசுகியை மந்தர மலையைச் சுற்றிக் கட்டி, கடைவதற்குத் தயாரானார்கள். வால் பக்கம் பிடித்தால் கேவலம் என்று கருதி, அசுரர்கள் வாசுகியின் தலைப் பக்கம் பிடித்துக் கொண்டனர். தேவர்களும் பகவானும் பாம்பின் வால் பக்கம் பிடித்துக் கொண்டனர். இருசாராரும் மலையைக் கொண்டு கடலைக் கடைந்தார்கள். இந்நிகழ்ச்சியை இளங்கோவடிகள் கூறும் திறம் காண்மின் :

**'வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல் வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே**

—முன்னிலைப் பரவல் (சிலப்பதிகாரம்)

மந்தர மலை நீரில் நிலைத்து நிற்காமல் இங்குமங்கும் சாயத் தொடங்கியது. எடுத்த முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. பகவான் கூர்மமாக உருவெடுத்து நீரில் மூழ்கி அடிப்பாகத்தில் சென்று மந்தர பர்வதத்தைத்

தம் முதுகில் தாங்கிக் கொண்டார். மலை நிலைத்து நின்றது. தேவர்களும் அசுரர்களும் உற்சாகத்துடன் கடையத் தொடங்கினர்.

## ஆலகாலம்

ஒரு பக்கம் அசுரர்களும், மறுபக்கம் தேவர்களும் இழுத்த தால் வாசுகி திணறினான். நெருப்புப் போல மூச்சுக் காற்று வெளிப்பட்டது. அதன் கடுமையால் அரக்கர்கள் தவித்தார் கள். கடலில் இருந்து முதலில் ஆலகாலம் என்னும் கொடிய விஷம் வெளிப்பட்டது. அதைக் கண்டு அனைவரும் சிதறி ஓடினர். விஷம், அண்டசராசரங்களைத் தகித்தது. தேவர் கள் கைலாயம் சென்று ஈஸ்வரனைச் சரண் அடைந்தனர்.

"தேவதேவா! எங்களைக் காப்பாற்ற வேண்டும். கொடிய விஷத்திலிருந்து உலகத்தை ரட்சிக்க வேண்டும்" என்று வேண்டினர். இச்செய்தியை இறைவன் இறைவி யிடம் கூறிவிட்டு, "நான் விஷத்தைப் பானஞ் செய்யப் போகிறேன்" என்றார். தேவர்களைப் பார்த்து, "அஞ்சா தீர்கள்" என்று அபயம் அளித்தார்.

எங்கும் பரவி வரும் ஆலகால விஷத்தை இறைவன் தம்முடைய சக்தியால் கிரகித்து வாயில் போட்டு விழுங்கி னார். அது அவருடைய கழுத்திலேயே தங்கிவிட்டது. விஷத்தின் உக்கிரம் காரணமாக ஈசுவரனுடைய கழுத்து கருமை நிறம் அடைந்தது. நீலகண்டன் என்று அவரை அழைப்பது அதன் காரணமாகத்தான். விஷத்தை உண்ட போது சிதறிய துளிகளைத் தேள் முதலிய உயிரினங்கள் கிரகித்துக் கொண்டன.

விஷ பயம் நீங்கியதும், முன்போல் திருப்பாற்கடல் கடையப்பட்டது.

## திருப்பாற்கடல் அளித்த செல்வங்கள்

மந்திர மலையால் கடையப்பட்ட திருப்பாற்கடலில் இருந்து முதலில் காமதேனு வெளிப்பட்டது. மகரிஷிகளும் முனிவர்களும் யாகத்துக்குப் பரிசுத்தமாக விளங்கும் பொருட்டு அந்தப் பசுவைத் தாங்கள் ஏற்றுக் கொண்டனர்.

அதன் பின்னர் உச்சைச் சிரவம் என்னும் வெள்ளைக் குதிரை எழுந்தது. அசுரத் தலைவனான பலிச் சக்கரவர்த்தி அதைத் தனக்கு வேண்டுமென்று எடுத்துக் கொண்டான்.

பின்னர் ஐராவதம் என்னும் வெள்ளை யானையும், விரும்பியதைக் கொடுக்கும் கற்பக விருட்சமும் வெளி வந்தன. தேவேந்திரன் அவைகளை எடுத்துக் கொண்டான்.

பாற்கடலைக் கடைந்து கொண்டே இருந்தனர். தேவ மாதர்கள் தோன்றினார்கள். அதன் பின்னர் மகாலட்சுமி தோன்றினாள். மகாலட்சுமிக்கு அனைவரும் உபசாரம் செய்தனர். லட்சுமி கையில் மாலையை எடுத்துக் கொண்டு தனக்குரிய நாயகனைத் தேர்ந்தெடுக்க முற்பட்டாள். தன்னையே வரிப்பாள் என்று ஒவ்வொருவரும் எதிர்பார்த் தனர். அவள் எல்லோரையும் புறக்கணித்துவிட்டு,நாராயண னுக்கே மாலையிட்டாள். தன்னைப் பிரியாமல் இருக்க வேண்டுமென்று வேண்டினாள். பகவானும் அவளை அன்புடன் ஏற்று, தம் மார்பில் வாசம் செய்ய அருள் செய்தார்.

பாற்கடலை மேலும் கடைந்தனர். அமிர்தத்தை எதிர் பார்த்து முன்னிலும் ஆர்வத்துடன் கடைந்தனர். வாருணி தேவி வெளிப்பட்டாள். அவளை அசுரர்கள் ஏற்றுக் கொண்டனர். அதன் பின்னர் அமிர்தம் நிரம்பிய தங்கக் கலசத்தைக் கைகளில் ஏந்திக் கொண்டு மகாவிஷ்ணுவின் அம்சமாக, தன்வந்திரி பாடற்களில் இருந்து வெளிவந்தார்.

## மோகினி உருவம்

அசுரர்கள் உடனே விரைந்து சென்று அமுத கலசத்தைக் கவர்ந்து சென்றனர். தேவர்கள் திகைத்தனர்; கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போய்விட்டதே என்று கலங்கினர். நாராயணன் தேவர்களுக்கு ஆறுதல் கூறினார். அழகிய பெண் உருவம் தாங்கி அசுரர்களைத் தேடிச் சென்றார்.

மோகினி ரூபத்தைக் கண்டு அசுரர்கள் மயங்கி நின்றனர். "பெண்ணே! அற்புதத் தோற்றத்தோடு விளங்கும் நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? உன்னை யார் இங்கு அனுப்பியது?" என்று பலவாறாகக் கேள்விகள் கேட்டனர். அசுரர்களைத் தன் மாயையால் மயக்கி, அவர்களைத் தன் ஏவல் வழி நிற்கச் செய்தாள் மோகினி.

"அமிர்தத்துக்காகச் சண்டை வேண்டாம். அதை என்னிடம் கொடுங்கள். உங்கள் அனைவருக்கும் சமமாகப் பங்கிட்டுத் தருகிறேன்" என்றாள். மாயையால் தங்கள் அறிவை இழந்தார்கள் அசுரர்கள். அமிர்த கலசம் கை மாறியது.

மறுநாட் காலையில் அனைவரும் நீராடி, பரிசுத்தமாய் கிழக்கு நோக்கி அமர்ந்தனர். தேவர்கள் ஒரு பந்தியாகவும், அசுரர்கள் மற்றொரு பந்தியாகவும் அமர்ந்தனர். மோகினி உருவில் இருந்த பகவான் அமுதத்தைத் தேவர்களுக்கு முதலில் பரிமாற ஆரம்பித்தார். பின்னால் அமுதம் தமக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ என்பதைப் பற்றிச் சிந்தியாமல் அசுரர்கள் மோகினியின் அழகில் ஈடுபட்டு மயங்கினர். மோகினியின் நடை உடை பாவனையில் சொக்கிப் போயினர்.

ராகுவும் கேதுவும் அசுரர் பக்தியில் இருந்த போதிலும் ஒருதலைபட்சமாகப் பங்கீடு நடப்பதை உணர்ந்தனர்,

அவர்கள் இருவரும் அமைதியாய் தேவ உருவம் தாங்கி தேவர்கள் பந்தியில் சேர்ந்து கொண்டனர். பகவானுக்கு இந்த ஏற்பாடு தெரியாதாகையால் ராகு கேது இருவருக்கும் அமுதம் கிடைத்தது. உண்டு மகிழ்ந்தனர்.

சூரியன் சந்திரன் இருவரும் பகவானிடம் இந்த இரகசியத்தை வெளிப்படுத்தினர்; பகவான் கோபங் கொண்டு தம் சக்கரத்தை ஏவினார். இருவர் தலைகளும் அறுபட்டன. அமுதம் உண்டமையால் உயிர் பெற்றெழுந் தனர். பிரமதேவன் அவர்களுடைய சிரசுகளைக் கிரகங் களாகச் செய்தார். அவர்கள் இருவரும் தம்மைக் காட்டிக் கொடுத்த சூரிய சந்திரர்களைப் பழிவாங்கு வதற்காக விழுங்கினர் என்றும் அதையே கிரகணம் என்றும் புராணங்கள் கூறுகின்றன. அவையிரண்டும் சாயா கிரகங்கள் எனப்படும். மனித உடலும் பாம்புத் தலையுமாக உள்ளவர் கேது. மனித தலையும் பாம்பு உடலுமாக இருப்பவர் ராகு. இவ்வாறு பஞ்சாங்கத்தில் உருவம் அமைக்கப்பட்டு இருப் பதைக் காணலாம்.

அமுதம் பங்கிட்டானதும் மோகினி உருவம் மறைந்தது. அப்போதுதான், தாம் மோசம் போய் விட்டோம் என்பதை அசுரர்கள் அறிந்தார்கள்; தேவர்கள்மீது வெகுண்டெழுந் தனர். போர் மூண்டது; பெரும் யுத்தமாக நீண்டது பலர் மாண்டனர்.

நாரதர் வந்தார். இரு திறத்தாரையும் சமாதானம் செய்தார். அசுரர்களில் நேர்ந்த அழிவுபாட்டை சுக்ராச் சாரியர் தம்முடைய அமிர்த சஞ்சீவினி வித்தையால் குணப் படுத்தினார். அமைதி நிலவியது.

**விண்ணு மாயை :**

விஷ்ணு மோகினி ரூபம் எடுத்து அமுதத்தைப் பங்கிட்டுக் கொடுத்த செய்தி கைலாயத்திற்குச் சென்றது.

அந்த ரூபத்தைக் காண வேண்டுமென்று கைலாயநாதனுக்குச் சபலம் தட்டியது. பார்வதி தேவியுடன் புறப்பட்டு வந்தார். விஷ்ணுவைப் பிரார்த்தித்தார்.

அருகிலிருந்த ஒரு சோலையில் மோகினி வந்திருப்பதை ஈசுவரன் கண்டார். பக்கத்திலிருந்த பார்வதியை மறந்து அப்பெண்ணை நோக்கி நடந்தார். இருவரும் சந்தித்தனர். அந்த அழகில் ஈசுவரன் சற்றுநேரம் மெய் மறந்தார். பின்னர், தான் மாயையில் சிக்கி ஆசைக்கு அடிபணிய நேரிட்டதே என்று வருந்தினார். மோகினி உருவம் மறைந்தது. சக்கரதாரியாய் விஷ்ணு எதிரில் வந்தார். ''பரமேஸ்சுவரா! நீர் ஒருவர்தாம் என் மாயையில் சிக்கினாலும் அதனின்று மீளும் சக்தி படைத்துள்ளாய்'' என்று பாராட்டினார்.

பின்னர் பரமேஸ்சுவரனும் பார்வதியும் கைலாயம் சேர்ந்தனர்.

# 5. வராக அவதாரம்

## அறிமுகம் :

வராகம் என்றால் பன்றி. பகவான் வராக அவதாரம் தாங்கி பாதாளத்தில் அழுந்திக் கிடந்த பூமியை வெளியே கொணர்ந்தார். அப்போது எதிர்ப்பட்டு இவருடன் சண்டையிட்ட இரண்யாட்சன் என்ற அரக்கனை அழித்த செய்தி இப்பகுதியில் சொல்லப்படுகிறது.

இரண்ய கசிபு, இரண்யாட்சன் இருவரும் காசிபருக்கும் திதிக்கும் பிறந்தவர்கள். சந்தியா கால வேளையில் திதி கருப்பமுற்றபடியால் இவர்கள் அரக்கர்களாகப் பிறந்தவர்கள் என்று புராணம் சொல்கிறது. விஜயர்கள் கிரேதாயுகத்தில் தாம் பெற்ற சாபத்தால் இவ்வாறு இங்கு பிறந்துள்ளனர்.

இரண்ய கசிபு நரசிம்ம அவதாரத்திலும், இரண்யாட்சன் வராக அவதாரத்திலும் செய்யப்பட்டனர். இவர்கள் இருவரும் இரட்டையர்கள்.

## உற்பாதங்கள்

இந்தக் குழந்தைகள் பிறந்தபோது உலகம் அந்தகாரத்தில் மூழ்கியிருந்தது. பயங்கரக் காற்று வீசியது. பூமி நடுங்கியது. திசைகள் அதிர்ந்தன. பெருஞ்சப்தங்கள் எழுந்தன: ஊர் நடுவே நரிகள் ஊளையிட்டன.

முதலில் பிறந்த பிள்ளைக்கு இரண்ய கசிபு என்றும் இரண்டாவதாகப் பிறந்த பிள்ளைக்கு இரண்யாட்சன் என்றும் காசிபர் பெயரிட்டார். அசுரத்தன்மை வாய்ந்த அக்குமாரர்கள் இருவரும் விரைவிலேயே மலையைப் போன்ற பூதாகாரமான சரீரத்தை அடைந்தனர்; அவர்களுடைய அட்டகாசங்களைத் தாங்க முடியாது மூன்று உலகங்களும் தவித்தன. இவர்கள் இருவரும் பிரமதேவனை நோக்கி, கடுந்தவஞ் செய்து அளவற்ற பாராக்கிரமங்களைப் பெற்றனர். பிரமதேவனிடம் பெற்ற வரத்தால் இருவரும் ஆணவம் கொண்டனர். தேவர்களைத் துன்புறுத்தினர்.

## பாதாளம்

இரண்யாட்சன் கையில் கதையைச் சுழற்றிக் கொண்டு பாதாளம் வரையில் தேவர்களைத் தேடிச் சென்றான். வருணனுடைய பட்டணமான விபாவரிக்கு வந்து சேர்ந்தான். வருணனைக் கண்டு கர்ஜித்தான்.

"என்னுடன் யுத்தத்துக்கு வா" என்று அறை கூவினான்.

பராக்கிரமம் பொருந்திய அரக்கனுடன் போரிட வருணன் விரும்பவில்லை. ஆகவே ஒரு தந்திரம் செய்தான்.

''அசுரசிரேஷ்டனே! உன் விருப்பம் நிறைவேற நான் ஒரு வழி கூறுகிறேன் கேள். தினவெடுத்திருக்கும் உன் தோள் களுக்குச் சிறந்த உணவு அளிக்கக் கூடியவர் பரந்தாம னாகிய நாராயணன் ஒருவரே. சீக்கிரமாக அவரிடம் சென்று உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்'' என்றான் வருணன்.

## நாரதர்

வருணன் கூறியது தேனாக இனித்தது அவனுக்கு. கதை யைச் சுழற்றியவாறு நாராயணனைத் தேடிச் சென்றான். வைகுண்டம் செல்லும் வழியில் நாரதரைச் சந்தித்தான். ''அசுர சிரேஷ்டனே! எங்கே புறப்பட்டாய்?'' என்று விசாரித்தார்.

''சுவாமி! தினவெடுக்கும் தோள்களுக்குத் தகுந்த உணவு பெற அரியை நோக்கிச் செல்கின்றேன்'' என்று பெருமிதத்துடன் பதிலளித்தான் இரண்யாட்சன்.

''நல்லது. நாராயணன் தற்போது வைகுண்டத்தில் இல்லை. பாதாளத்தில் அழுந்திக் கிடக்கும் பூமியை வெளிக் கொணரச் சென்றிருக்கிறார்'' என்றார் நாரதர்.

## வராகமூர்த்தி

இரண்யாட்சன் நாரதரிடம் விடை பெற்றுக் கொண்டு பாதாள உலகிற்குச் சென்றான். பகவான் வராக மூர்த்தி யாக எழுந்தருளி நீரில் அழுந்திக் கிடந்த பூமியைத் தம் கோரப் பற்களால் தாங்கியவாறு மேலே எழும்பிக் கொண் டிருந்தார். அதைக் கண்ட அரக்கன் கலகலவென்று நகைத் தான்.

''ஏ பன்றியே! உனக்கு இந்தச் சிரமம் வேண்டாம். இந்தப் பூமி பாதாளவாசிகளாகிய எங்களுக்குப் பிரமனால் அளிக்கப்பட்டதல்லவா? இதை என்னிடம் கொடுத்து உன் வேலையைப் பார்'' என்று கர்ஜித்தான்.

"ஏ அசுரப் பதரே! என்னைப் பன்றி என்று அழைத்தது இருக்கட்டும். உன்னைப் போன்ற நாயைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கு அழிவு காலம் வந்து விட்டது" என்றார் பகவான்.

அசுரன் ஏளனமாகச் சிரித்து அவர்மீது பாய்ந்தான். அதை அவர் லேசாகத் தட்டிவிட்டார். அசுரன் கண்கள் சிவந்தன. மறுபடியும் பாய்ந்து அடித்தான். அதைத் தம் கதையால் தடுத்து விட்டார். அசுரன் உடல் பதறியது. மீண்டும் மோதினான்; தோல்வியே கண்டான்.

இரு மலைகள் போல இருவரும் மோதினர். அண்ட சராசரங்களும் கிடுகிடுத்தன. காசிபர் ஆசிரமத்தில் இருந்த திதி தன் மகனுக்கு ஏதோ ஆபத்து என்று நடுங்கி னார். யுத்தம் நீடித்தது; இதைக் காண அந்தரத்தில் தேவர் கள் குழுமினர்; ஆவலோடு கவனித்தனர்.

பகவான் கையிலிருந்த கதை நழுவிக் கீழே விழுந்தது. சக்கராயுதத்தைப் பற்றி எண்ணினார். அது உடனே அவர் கைக்கு வந்து சேர்ந்தது. அசுரன் சூலாயுத்தைப் பிரயோகித்தான். பரந்தாமன் சுதர்சனத்தை ஏவி அதைத் தவிடு பொடியாக்கினார். அசுரன் மாயப் போரில் இறங்கினான். சந்தியா காலம் நெருங்கியதைப் பிரமன் நினைவுபடுத்தினார். சுதர்சனம் மாயையை வென்றது. இறைவனுடைய பஞ்சாயுதங்களின் பெயர்கள் வாசகர் களுக்குத் தெரிந்திருப்பது நல்லது.

சங்கு — பாஞ்ச சன்யம்
சக்கரம் — சுதர்சனம்
வில் — சாரங்கம்
வாள் — நாந்தகம்
கதை — கௌமோதகி

அசுரன் பாய்ந்து பகவானுடைய மார்பில் முஷ்டியால் குத்தினான். இனியும் அவனுடன் விளையாடுவதில் பயனில்லை என்று பகவான் அசுரனுடைய தலையில்

ஓங்கி அடித்தார். அந்த அடியைத் தாங்க மாட்டாது அசுரன் அடியற்ற நெடுமரம் போல் சாய்ந்தான்; உயிர் பிரிந்தது.

தேவர்கள் மகிழ்ந்தனர். பகவானைத் தோத்திரம் செய்தனர். பகவான் சாந்தமடைந்தவராய் பூமியை அதன் இடத்தில் நிறுத்தி விட்டு, வைகுண்டத்தை அடைந்தார். சுவாயம்பு மனு அது முதல் பூமியை ஆளத்தொடங்கினான்.

## ஸ்ரீமுஷ்ணம்

இத்தலம் விருத்தாசலத்திற்கு அருகில் உள்ளது. வராகமூர்த்தி ஸ்ரீ பூவராகவன் என்னும் பெயரோடு கோயில் கொண்டுள்ளார். இப்பகுதியில் பலருக்கும் பூவராகன் என்ற பெயருண்டு.

ஸ்ரீமன் நாராயணன் ஸ்ரீவராக அவதாரம் எடுத்து, பூமியைக் கவர்ந்து சென்ற இரண்யாட்சன் என்னும் அசுரனைக் கொன்று அப்பூமியைத் தனது கோரைப் பற்களால் சுமந்து வந்து, ஆதிசேஷன் மேல் முன்னிருந்த நிலையில் நிற்கச் செய்தார் என்ற செய்தியை மேலே கண்டோம்.

அப்போது தனது இரு கண்களிலிருந்தும் அரச மரத்தையும் துளசிச் செடியையும் உண்டாக்கி, தனது வியர்வை நீரின் பெருக்கைக் கொண்டு நித்திய புஷ்கரணி என்னும் தீர்த்தத்தையும் ஏற்படுத்தி ஸ்ரீ முஷ்ணம் என்னும் இத்தலத்தை இருப்பிடமாக ஏற்றுக் கொண்டார். பிரமன் முதலானோர் வழிபட, ஸ்ரீ பூவராகவன் என்னும் திருநாமத்துடன் பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார். இத்தலத்தைப்பற்றி ஸ்ரீவராக புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

கோவிலின் முக்கிய சன்னதி ஸ்ரீபூவராக சன்னதி சுவாமி மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். முகம் தெற்கு நோக்கி உள்ளது; அசுரர்களை

வென்றதால் ஏற்பட்ட வெற்றிப் பெருமித உணர்வு பொங்க இருகைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு முகத்தை நிமிர்த்திக் கம்பீரமாகப் பார்க்கிறார். மூலவர் சாளக்ராம மூர்த்தி. மேலே உள்ள விமானம் சாதானந்த விமானம்.

**தல விருட்சம்:-**

தலவிருட்சம் அரசமரம். பிரளயத்திற்குப் பின் பூமி மேலே கொண்டு வரப்பட்ட உடன் முதலில் தோன்றிய இம் மரத்தை ஆதிவிருட்சம் என்று அழைப்பார்கள். 'மரங்களுக் குள்ளே நான் அரச மரமாக இருக்கிறேன்' என்று பகவான் கீதையில் குறிப்பிட்டுள்ளார். இம்மரத்தை வழிபடுவோர் சகல சம்பத்துக்களையும் பெறுவர்.

இதே போல் துளசியும் தெய்வமாக வைத்து வீடுகளில் பூசிக்கப்படுவதைக் காண்கிறோம். இதைச் சகலரோக நிவாரணியாகப் போற்றுகிறோம். வைணவ ஆலயங்களில் தீர்த்தமும் துளசியும் பிரசாதமாக அளிக்கப்படுகின்றன.

# 6. நரசிம்ம அவதாரம்

பரந்தாமனை பகவானுக்குச் சகல ஜீவராசிகளும் சமமானவர்களே. அப்படியிருக்க அவருக்குத் தேவர்களிடம் அதிகபிரியமும் அசுரர்களிடம் துவேஷமும் ஏற்படக் காரண மென்ன? அசுரர்கள் பகவானைத் துவேஷிக்கக் காரணம் என்ன? என்ற சந்தேகங்கள் வாசகர்களுக்கு ஏற்படக் கூடும்.

சந்தேகம் நியாயமானதே. முன்பு தரும புத்திரருக்கும் இப்படித்தான் சந்தேகம் எழுந்தது. இராசசூய யாகத்தில் சிசுபாலன் பகவானால் வதம் செய்யப்பட்டபோது அவர் இந்தச் சந்தேகத்தை வெளியிட்டார். நாரதர் அதற்குக் கூறிய விளக்கம் வருமாறு:

''பரந்தாமனுக்குச் சகல ஜீவராசிகளும் சமம்தான்; ஆனால் எவனிடமாவது ''நான்'' என்ற அகங்காரம் எழும்போது அவனைத் தண்டிக்க முற்படுகிறார். அசுரர் களிடையே இந்த அகம்பாவம் அதிகம் காணப்பட்டதால் அவர்கள் தேவர்களைத் துன்புறுத்தினார்கள். அசுரர் களுடைய கொடுமைகளுக்குப் பயந்து தேவர்கள் பகவானைச் சரண் அடைந்தனர். ஆகவே தேவர்களின் துன்பங்களைக் களைவது இறைவனது கடமையாகிறது'' என்று நாரதர் கூறியதை வாசகர்களுக்குத் தெரிவிக்க வேண்டியுள்ளது.

இந்த அவதாரத்தில் இரண்ய கசிபுவின் அகங்காரம் எவ்வாறு அடக்கப்பட்டது என்பதைக் காணலாம்.

## இரண்ய கசிபு

சகோதரனின் மரணம் இரணியகசிபுவை அளவற்ற கோபம் கொள்ளச் செய்தது. பழிக்குப்பழி வாங்கத் துடித்தான். இரண்யாட்சனைக் கொன்ற நாராயணனு டைய சிரத்தைக் கொய்து அதிலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகினால்தான் சகோதரனின் ஆன்மா சாந்தி அடையும் என்று சீறினான். எல்லா அரக்கர்களையும் ஒன்று திரட்டினான்.

''அன்புமிக்க தானவர்களே! பூமியில் நடந்து வரும் யாகம் முதலிய கர்மாக்களில் அளிக்கப்படும் அவிர்ப் பாகங் களே தேவர்களுக்கு ஆதாரமாகும். ஆகவே பூலோகத்தில் யாகம் முதலான கர்மாக்கள் நடைபொறமல் செய்யுங்கள். அவற்றைச் செய்யும் பிராமணர்களைத் துன்புறுத்தி நமக்கு அடங்கியிருக்கச் செய்யுங்கள், ஓம குண்டங்கள் முதலிய புண்ணிய இடங்களை நாசஞ் செய்யுங்கள். வர்ணாசிரம தர்மங்கள் நடைபெறாது தடுத்து விடுங்கள். தேவர்கள் பலமிழந்து விடுவார்கள். அதன் பின்னர் அவர் களை அழிப்பது எளிது'' என்று உத்திரவிட்டான்.

## தவம் :

இரணிய கசிபு பிரமனைக் குறித்துத் தவஞ் செய்தான். நாட்கள் பல கடந்தன. தவம் கடுமையாயிற்று. அசுரன் முன் பிரமன் தோன்றினார். "அசுர சிரேஷ்டனே! உன் விருப்பம் யாது? எழுந்திரு. உனக்கு விருப்பமானவற்றைக் கேள்" என்றார். அசுரன் தவத்திலிருந்து தெளிந்து நான் முகனை வலம் வந்து வணங்கினான்.

"சுவாமி வணங்குகிறேன், உம்முடைய சிருஷ்டிகளால் எனக்கு மரணம் ஏற்படக் கூடாது. அது மட்டுமல்ல; உள்ளேயும், வெளியேயும்—பகலிலும், இரவிலும்—பூமியிலும் ஆகாயத்திலும்—எனக்கு மரணம் சம்பவிக்கக் கூடாது. ஆயுதங்களாலும், மனிதர்களாலும்—பிராணி களாலும், மிருகங்களாலும்,—அசுரர்களாலும் தேவர் களாலும்—எனக்கு மரணம் ஏற்படக் கூடாது. தேவர் களால் ஜயிக்க முடியாத பராக்கிரமத்தை எனக்கு அருள வேண்டும்" என்று வேண்டினான்.

பிரமதேவன், "அப்படியே ஆகுக" என்று வரமளித்தார். இரண்யகசிபுவின் ஆர்பாட்டம் அதிகரித்தது. அதுவரை தேவர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த அவிர்பாகம் தனக்கே அளிக்கப்பட வேண்டுமென்றான். தேவர்களின் துன்பம் மேலும் அதிகரித்தது. பரந்தாமனிடம் முறையிட்டனர். தங்கள் இன்னல்களுக்கு ஒரு முடிவு கட்டும்படி வேண்டினர்.

## பிரகலாதன் :

இரணிய கசிபுவுக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தனர். அவர்களுள் பிரகலாதன், பகவான் நாராயணனிடம் அத்யந்த பக்தி கொண்டிருந்தான். எப்போதும் அவன் நினைவாகவே இருந்தான். அசுர குருவான சுக்கிராச்சாரி யாருடைய குமாரர்களான சண்டன், மார்க்கன் என்ற

இருவரும் இரணிய கசிபுவின் அரண்மனையில் தங்கி, அரச குமாரர்களுக்கும் மற்றும் உயர்தர அதிகாரிகளின் மக்களுக்கும் கல்வி போதித்து வந்தனர்.

ஒரு நாள் இரணியன் பிரகாலாதனுடைய கல்வித் தரத்தை அறிய விரும்பினான். ''மகனே! இத்தனை நாட்களாக நீ என்ன கற்றுக் கொண்டாய்; சொல் பார்ப்போம்'' என்றான்.

பிரகலாதன் தந்தையை வணங்கி, ''தந்தையே! நான், எனது என்ற அகங்காரத்திற்கு இடமான இந்த சம்சார சாகரத்தைத் தாண்ட ஜீவன்களுக்கு, பரந்தாமனான ஸ்ரீமந் நாராயணனைப் பக்தியோடு தியானிப்பது ஒன்றே மார்க்கமாக விதிக்கப்பட்டுள்ளது'' என்றான்.

மகனின் வார்த்தைகளைக் கேட்டு இரணியன் கடுங் கோபங் கொண்டான். கண்கள் சிவந்தன. ஆசிரியர்களை நோக்கி,

''நன்றாயிருக்கிறது. என் சகோதரனைக் கொன்றவனைப் பழி வாங்க வேண்டுமென்று நான் துடித்துக் கொண்டிருக்கையில் நீங்கள் இருவரும் அவனுக்கு இதையா போதித்தீர்கள்'' என்று சீற்றத்துடன் கேட்டான்.

சண்டன், மார்க்கன் இருவரும் அவனுடைய பாதங்களில் விழுந்து வணங்கி, ''பிரபு! எங்கள்மீது தவறு ஏதும் இல்லை. நாங்கள் என்ன சொல்லிக் கொடுத்தாலும் குழந்தை அந்த விஷயத்தைப் பற்றியேதான் பேசுகிறான். நாங்கள் என்ன செய்வது என்று தோன்றாமல் தவிக்கிறோம்'' என்றார்கள்.

''எதிரியின் கையாட்கள் யாரோ இவனுக்குத் துர்ப்போதனை செய்திருக்கிறார்கள். ஆதலால் இவனுக்குத் தனியாகப் போதியுங்கள்'' என்று உத்திரவிட்டான்.

அவ்வாறே ஆசிரியர்கள் அவனுக்குத் தனியாகப் போதித்தார்கள்.

இரணியன் மற்றொரு நாள் மகனை அழைத்து படித்த வற்றைச் சொல்லுமாறு கேட்டான்.

"அப்பா, இந்தப் பிறவி வீண் போகலாமா? பரந்தாமனுடைய கல்யாண குணங்களைக் கேட்கவும் அவனுடைய நாமங்களைச் சொல்லவும், பகவானுடைய பாதார விந்தங்களில் மணமுள்ள மலர்களைக் கொண்டு அருச்சிக்கவும் அல்லாது இதர சுகங்களில் ஈடுபடுவதால் என்ன பிரயோசனம்?" என்றான் பிரகலாதன்.

இரணியன் கடுங்கோபங் கொண்டான். ஆசிரியர்களை வைதான். அவர்கள், "ஐயனே! எங்கள் மீது யாதொரு தவறும் இல்லை. அவன் சுயமாகவே இவ்வாறு பேசுகிறான்" என்று பயந்தவாறு கூறினார்கள்.

மகனைக் கடிந்து, "அடே, குருவால் போதிக்கப்படாத இந்த துற்புத்தி உனக்கு எப்படி உண்டாயிற்று?" என்று கேட்டான்.

"தந்தையே, அல்ப சுகங்களில் ஈடுபட்டு, சம்சார சாகரத்தில் மூழ்கிக் கிடப்பவனுக்குப் பகவானிடம் பக்தி தானே வந்து அடைவதில்லை. குருடனால் அழைத்துச் செல்லப்படும் குருடர்கள் வழியை எவ்வாறு அறிவார்கள்?" என்றான் பிரகலாதன்.

மைந்தனுடைய வார்த்தைகள் இரணியனுக்குத் தன்னையே ஏளனம் செய்வது போலிருந்தன. அசுரர்களை அழைத்தான். "இவன் நம்முடைய பகைவனிடம் பிரீதி வைத்திருக்கிறான். ஆகவே இவனை எந்த உபாயத் தாலாவது கொன்று போடுங்கள்" என்று உத்திரவிட்டான்.

அசுரர்கள் பிரகலாதனைக் கொல்ல முயன்றார்கள்; பயன்படவில்லை. பாம்பின் விஷம் கொடுத்தனர்; மலை

மீதிருந்து உருட்டினர்; யானையின் காலால் மிதிக்கச் செய்தனர்; கடலில் தள்ளினர்; எதிலும் மரணம் நேரவில்லை.

இரண்யன் தோல்வி அடைந்தான். மகனை நோக்கி, 'சகல லோகங்களும் எனக்கு அடங்கி நடக்கின்றன. அப்படியிருக்க என்னைவிட அந்தப் பரம வைரிஉனக்கு எவ்வாறு மேன்மையானவன் ஆகிவிட்டான்?' என்று இடி முழக்கம் செய்தான் இரணியன்.

பிரகலாதன் தந்தையை வணங்கி, ''அப்பா, இந்த மூன்று உலகங்களும் உனக்குக் கட்டுபட்டு இருக்கலாம். ஆனால் அண்டசராசரங்களுக்கு பகவானே ஆதி காரணமா யிருக்கின்றார். இவரே ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்கின்றார். அவரை விடத் தாங்கள் உயர்ந்தவரல்லர். காமக் குரோதங்களை ஜெயிக்காமல் மூன்று உலங்களையும் ஜெயிப்பதால் என்ன பயன்?'' என்று அறிவுறுத்தினான்.

''அடே மூடா! போதும் நிறுத்து. உன் உபதேசம் எனக்குத் தேவையில்லை. மரணத்தின் வாயிலில் நின்று கொண்டு ஏதேதோ உளறுகிறாய். நீ சொல்லும் அந்த பகவான் எங்கே இருக்கிறான்? சொல்'' என்று கர்ஜித்தான் இரணியன்.

''தந்தையே! சகல ஜீவராசிகளிலும் ஆத்மாவாக அந்த பகவான் வியாபித்திருப்பதைத் தாங்கள் உணரவில்லை. காற்றைப் போல் அவர் எங்கும் வியாபித்திருக்கிறார்!'' என்றான் பிரகலாதன்.

இரணியன் கலகல வென்று சிரித்து, ''அடே! உன்னால் சொல்லப்படுபவன் எங்கும் இருக்கிறான் என்றால், இதோ இந்தத் தூணிலும் இருக்கிறான் அல்லவா? அவனைப் பார்ப்போம்'' என்று கர்ஜித்து, உடைவாளை உருவி தூணில் ஓங்கி அடித்தான்.

**நரசிம்மம்:**

இடி இடித்ததைப் போல பெருஞ்சப்தத்துடன் தூண் இரண்டாகப் பிளந்தது. திக்குகள் நடுங்கின. தம் பக்தனாகிய பிரகலாதனுடைய வார்த்தை சத்தியமானது என்பதை நிரூபிக்கப் பகவான் நாராயணன் அங்கே அற்புதமான உருவத்தோடு தோன்றினார். அவ்வுருவத்தைக் கண்டு இரணியன் ஒரு கணம் திகைத்து நின்றான்.

மனித உடல், சிங்கமுகம்; விசால மார்பு; கைகளில் கூரிய நகங்கள். மனிதனுமல்லாது மிருகமும் அல்லாது தோன்றிய அந்த உருவம் தூணிலிருந்து வெளிப்பட்டது. இரணியன் அதன்மீது பாய்ந்தான். பகவான் நரசிம்ம மூர்த்தி அவனைக் கையினால் எட்டிப் பிடித்துக் கொண்டார். வாயிற்படிக்கு இழுத்துச் சென்றார். தமது மடிமீது மல்லாக்கப் போட்டுக் கொண்டார். சந்தியா காலத்தில் கை நகங்களினால் அவன் மார்பைக் கீறிப் பிளந்தார். அவன் உடலில் இருந்து பெருகிய இரத்தத்தைப் பருகினார். அவன் உடலை மாலையாக அணிந்து கொண்டு கர்ஜித்தார். அரசனுக்கு உதவியாக வந்த அனைவரையும் அடித்தும் மிதித்தும் நாசப்படுத்தினார்.

அவருடைய உக்கிரமான தோற்றத்தைக் கண்டு எவரும் அவர் அருகில் செல்ல பயந்தனர். தேவர்கள் லட்சுமியைத் தியானித்து, பகவானை நெருங்கி அவரைச் சாந்தப் படுத்துமாறு வேண்டினர். லட்சுமி தேவியும் அருகில் செல்ல அஞ்சினாள். பிரமதேவன் பிரகலாதனைப் பார்த்து, "நீ பகவானை நெருங்கி, சாந்தம் கொள்ளுமாறு வேண்டுவாயாக" என்றார்.

பிரகலாதன் நரசிம்ம மூர்த்தியை வலம் வந்து, "பிரபு, தயாநிதியே! சாந்தம் கொள்ள வேண்டும். தங்கள் தோற்றத்தைக் கண்டு தேவர்களும் நடுங்குகின்றனர்; கோபம் தணிந்து அருள் புரிய வேண்டும்" என்று வேண்டினான்.

அவ்வாறே பகவான் கோபம் தணிந்து, பிரகலாதனை அருகில் அழைத்து, ''குழந்தாய்! உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்'' என்றார்.

''பிரபு! தரிசன பாக்கியமே போதும்: தங்களிடமுள்ள பக்தி மாறாதிருக்க வேண்டும்'' என்றான் பிரகலாதன்.

''பிரகலாதா! இந்த மனுவந்தரம் வரையில் நீ அசுரர் களுக்கு எல்லாம் அரசனாக இருந்து சகல போகங்களையும் அனுபவித்து வருவாயாக. உன் பக்தி நிலைத்திருப்பதாக'' என்று அருள் செய்தார் நரசிம்மமூர்த்தி.

''குழந்தாய்! கவலைப்பட வேண்டாம். நீ பிறந்த காரணத்தால் உன் தந்தை முதல் இருபத்தொரு தலைமுறை வரையில் இந்த வம்சத்தில் பிறப்பவர்கள் பாவிகளாய் இருந்தாலும் பரிசுத்தர்களாகி நற்கதி பெறுவார்கள். உன் தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்தரகிரியைகளைச் செய்து முடித்து முடிசூடிக் கொள்வாயாக'' என்று ஆசீர்வதித்து மறைந்தருளினார்.

பிரகலாதன் தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமச் சடங்குகளைச் செய்து முடித்தான், தேவர்களும் முனிவர் களும் உடனிருந்து ஆசீர்வதிக்கச் சுக்கிரசாரியார் பிரகலாத னுக்கு முடிசூட்டினார்.

## குறிப்பு :

இரணியன் தான் சாகாமல் இருப்பதற்காகப் பிரம தேவனிடம் பல பாதுகாப்புகளை வேண்டிப் பெற்றான். பகவான் இவைகளுக்கெல்லாம் விதிவிலக்காக அவனைக் கொன்ற திறம் காண்மின்.

## திரு அரி மேய விண்ணகரம்

**ஓடாத வாளரியின் உருவமது கொண்டு (அன்று)**
**உலப்பில்மிகு பெருவரத்த இரணியனைப் பற்றி**
**வாடாத வள்ளுகிரால் பிளந்தவன் தன் மகனுக்(கு)**
**அருள் செய்தான் வாழுமிடம் மல்லிகை செங்கழுநீர்**

**சேடேறு மலர்ச் செருந்தி செங்கமுகம் பாளை**
**செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே**
**ஆடேறு வயலாலைப் புகைகமழும் நாங்கூர்**
**அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே!**

*—திருமங்கையாழ்வார்*

*நாங்கூரின் வேறு பெயர் திரு அரி மேய விண்ணகரம்.*

**நாமக்கல் :**

*இது சிறந்த வைணவத் தலம். சேலம் மாவட்டத்தில் உள்ளது. இங்கு நரசிம்மசுவாமி குன்றின்மீது கோயில் கொண்டுள்ளார். இங்கு ஆஞ்சநேயர் பெரிய உருவில் காட்சி தருகிறார்.*

# 7. வாமனாவதாரம்

**தோற்றுவாய் :**

*வாமனன் என்றால் குள்ளமானவன் என்பது பொருள். அதாவது பரந்தாமன் குறுகிய வடிவில் சென்று, மகாபலி சக்கரவர்த்தியினிடம் மூன்றடி நிலம் தானமாகப் பெற்று, பெரிய உருவெடுத்து உலகம் முழுவதையும் அளந்தான் என்ற செய்தி இதில் கூறப்படுகிறது. இதைத் திருவிக்கிரம அவதாரம் என்றும் கூறுவர்.*

**''மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகை முடியத்**
**தாவியசே வடி சேப்பத் தம்பியொடுங் கான்போந்து**
**சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த**
**சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே**
**திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே!**

*—படர்க்கைப் பரவல் (சிலப்பதிகாரம்)*

என்று இந்த அவதார மகிமையை இளங்கோவடிகள் நடு நிலையில் இருந்து போற்றுவதைக் காணலாம்.

## மகாபலிச் சக்கரவர்த்தி :

பலிச் சக்கரவர்த்தி மகாபக்தனான பிரகலாதனுடைய பேரன். அவன் இந்திரனை வெற்றி கொள்வதற்காக முனிவர்களை அழைத்து விசுவஜித் என்ற யாகத்தைச் செய்தான். நியம நிஷ்டை தவறாமல் யாகம் நடந்து வந்தது.

யாக குண்டத்திலிருந்து பொன்மயமான ரதம் ஒன்று வெளிப்பட்டது. பிரகலாதன் தோன்றி, தன் பேரனுக்கு வாடாத தாமரை மாலையை அணிவித்தான். சுக்கிரன் சங்கம் அளித்தான். பலிச் சக்கரவர்த்தி மகரிஷிகளை வணங்கி, அவர்கள் ஆசியைப் பெற்று, அசுர சேனையுடன் தேவலோகத்தை நோக்கிப் புறப்பட்டான். நகரை முற்றுகை யிட்டான். சங்கத்தை ஒலி செய்தான்.

பலி,புது பலத்துடன் வந்திருக்கின்றான்! தான் அவனை வெற்றி கொள்ள முடியாது என்பதை அறிந்து கொண்ட இந்திரன் வியாழ பகவானிடம் சரணடைந்தான். அவர் அவனுக்கு ஆறுதல் கூறினார். ''தேவராஜனே! அஞ்சாதே: இப்போது யாக பலத்தைக் கொண்டு பலி வந்திருக்கிறான் அவனை வெல்ல முடியாது. நீங்கள் கொஞ்ச காலம் தேவ லோகத்தை விட்டு வெளியேறி, மறைந்து வாழ்வதுதான் நல்லது. பகவான் நாராயணன் இவனது அழிவுக்கு ஆவன செய்வார்'' என்று புத்திமதி கூறினார்.

அவ்வாறே இந்திரன் தன் துணைவர்களுடன் தேவ லோகத்தை விட்டு வெளியேறி மறைந்து வாழ்ந்தான். மகா பலிச் சக்கரவர்த்தி அமராவதியைக் கைப்பற்றி, அங்கு ஆட்சி நடத்தினான். மூன்று உலகங்களும் அவன் ஆட்சிக்கு உட்பட்டன. முனிவர்கள் தங்கள் கர்மாக்களை வழக்கம் போல் செய்து வந்தனர். எல்லா உயிர்களும், மகிழ்ச்சி யுடன் வாழ்ந்தன.

## அதிதியின் விரதம் :

தேவர்கள் தேவ லோகத்தை விட்டு மறைந்து வாழ்வதை எண்ணி தேவமாதா அதிதிதேவி மனம் வருந்தினாள். கணவரிடம் தன் குறையை முறையிட்டாள். "கமலக் கண்ணனை நோக்கி, பங்குனி மாதம் சுக்கில பட்சத்தில் பன்னிரண்டு நாட்கள் பூசித்து வருவாயாக! இவ்விரதத்திற்குப் 'பயோவிரதம்' என்று பெயர் இவ்விரதத்தை நியம நிஷ்டைகளுடன் கடைப்பிடித்துவர, பகவானுடைய அனுக்கிரகம் கிடைக்கும்" என்றார் காசிபர்.

அதன்படி அதிதி விரதத்தை அனுஷ்டித்து வந்தாள். இறைவன் அவளது விரதத்திற்கு உவந்து சங்கு சக்கர கதாதாரியாய் காட்சி தந்தார் அதிதி பகவானை வலம் வந்து, "பிரபு, பக்தரட்சகா, பரந்தாமா" என்று தோத்திரம் செய்தாள்.

இறைவன் அருள் கூர்ந்து, "தேவா மாதா! வருந்தாதே. நீ எதற்காக நோன்பு நோற்றாய் என்பதை யான் அறிவேன். தேவர்களுடைய துன்பம் நீங்க இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திருக்க வேண்டும். நானே உங்களுக்கு மகனாகப் பிறந்து தேவர்களின் துயரைத் தீர்ப்பேன். இது தேவ ரகசியம். எவரிடமும் வெளியிட வேண்டா. உன் விருப்பம் நிறைவேறும்" என்று அருளி மறைந்தார்.

பகவானுடைய கட்டளைப்படி அதிதி கணவரைக் கூடி கருப்பமுற்றாள்.

## அவதார மகிமை :

புரட்டாசி மாதம் சுக்கிலபட்சம், சிரவண நட்சத்திரம், துவாதசி திதியில் பகவான் காசிபருக்கு அதிதியிடம் பிறந்தார். காதுகளில் குண்டலங்கள்; புஜங்களில் தோள் வளை கங்கணம்; மார்பில் 'ஸ்ரீவத்சம் என்னும் 'மச்சம்'; கால்

களில் தண்டையும் காற்சிலம்பும்; மார்பில் வனமாலை; சியாமள வண்ணத்தோடு பகவான் அவதாரம் செய்தார். தேவ துந்துபி முழங்கியது. தேவர்கள் துதி பாடினர். பெற்றோர் மகிழ்ந்தனர். பகவானுக்கு அஞ்சலி செய்தனர். அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவதார கோலம் மறைந்து வாமனராக மாறினார். பெற்றோர் மகரிஷிகளை அழைத்து வைதீகக்கர்மாக்களைச் செய்தனர். வாமனர் எனப் பெயரிட்டனர். அந்நாள் விஜயதுவாதசி என்று வழங்கப்படுகிறது.

காசிபருக்குப் புத்திரராகப் பகவான் அவதாரம் செய்திருக்கிறார் என்று கேள்வியுற்றுத் தேவர்கள் அனைவரும் அவருடைய ஆசிரமத்துக்கு வந்து குழந்தையை வணங்கினர். மகரிஷிகள் பகவானுக்கு உபநயனம் செய்து வைத்தனர்.

## யாகசாலை :

இதற்கிடையில் பலிச் சக்கரவர்த்தி முனிவர்களை வரவழைத்து யாகம் ஒன்று செய்யலானான். வாமனர் அந்த யாகத்திற்குச் செல்ல விரும்பினார். பெற்றோர்களிடம் அனுமதியும் பெற்றுக் கொண்டார். பிரமச்சரிய கோலத்துடன் புறப்பட்டார்.

யாக சாலைக்கு வந்து சேர்ந்தார். ஒரு கையில் கமண்டலம், மற்றொரு கையில் பிச்சைப் பாத்திரம். யாக சாலையிலிருந்த அந்தணர்களும் முனிவர்களும் எதிர் கொண்டு வரவேற்றனர். பலிச்சக்கரவர்த்தி உள்ளன்போடு வரவேற்று உபசரித்தான்.

"சுவாமி, தாங்கள் எழுந்தருளியதை நான் பெரும் பேறாகக் கருதுகிறேன். என் பாபங்கள் நீங்கின. தங்கள் பாத தூளியினால் என் மூதாதையர்கள் நற்கதி பெற்றனர் என்றே கருதுகிறேன். தாங்கள் வேண்டுவது யாது?" என்று பிரார்த்தித்தான்.

**மூவடி மண் :**

''அசுரேந்திரா! நான் மிக்க மகிழ்ச்சியடைந்தேன். பிரகலாதனுடைய வம்சத்தில் தோன்றிய உனக்கு யாதொரு குறைவும் இல்லை. நான் அதிகமாக ஒன்றும் கேட்கப் போவதில்லை. என் காலடியால் மூன்றடி நிலம் கொடுத்தால் போதும்'' என்றார்.

''தாங்கள் கேட்பது மிகக் குறைவாக உள்ளதே; அப்படியே தருகிறேன்'' என்று கூறி, நீர் வார்த்துத் தர கெண்டியை எடுத்தான். அருகிலிருந்த சுக்கிராச்சாரியார், வந்திருப்பவர் சாதாரணமானவர் அல்லர் என்பதை தெரிந்து கொண்டார்.

''அரசே! அவசரப்படாதீர்கள். தீர ஆலோசித்துச் செய்யலாம். வந்திருப்பவர் யார் தெரியுமா? ஸ்ரீமந் நாராயணன். மூன்றடி மண்தானே என்று அலட்சியமாகக் கருதுகிறாய். வாக்களித்து விட்டோமே என்று தயங்க வேண்டாம், மறுத்து விடு'' என்றார்.

ஆச்சாரியார் சொன்னதை ஏற்றுக் கொள்ளவும் முடியவில்லை. பின்னர் அவரைப் பார்த்து, ''சுவாமி, தாங்கள் சொல்வது நியாயமே; என் குலகௌரவத்தை நான் காப்பாற்ற வேண்டும். ஸ்ரீமன் நாராயணனே வந்து நம்மிடம் யாசிக்கிறார் என்றால் அதைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்: சொன்னது சொன்னதுதான். பின் வாங்க மாட்டேன். கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும்'' என்றான்.

மனைவியை அருகில் அழைத்தான். நீர் வார்த்துத் தர தயாரானான். தன் பேச்சைக் கேட்காமல் பின்னால் துன்பப்படப் போகிறானே என்று சுக்கிராச்சாரியார் வருந்தினார். கெண்டியிலுள்ள நீர்த்துவாரத்தை அடைத்துக் கொண்டார் என்றும், வாமனர் அதை அறிந்து, அருகி

விருந்து தருப்பைப் புல்லை எடுத்துநீர்த் துவாரத்தைக்குத்தி நீர் பெருகச் செய்தார் என்றும், அதனால் ஆசிரியருக்கு ஒரு கண் பழுதாயிற்று என்றும் கூறுவர்.

## விஸ்வரூபம் :

முறைப்படி நீர் வார்த்துக் கொடுத்து, தானத்தைச் செய்தான். தேவ துந்துபிகள் முழங்கின. வாமன மூர்த்தி ஆசனத்திலிருந்து எழுந்தார். குள்ளமான உருவம் வானளாவ உயர்ந்தது. பகவானுடைய பேருருவைக் கண்டு, பலி தன்னை மறந்தான்; அவரைத் துதி செய்தான். வானளாவ நின்ற அந்த உருவத்தோடு தம்முடைய ஒரு காலால் பூமியை அளந்தார். மற்றொரு காலால் ஆகாயத்தை அளந்தார். மூன்றாவது அடிக்கு இடம் இல்லை.

அந்தணச் சிறுவனாக வந்து, வஞ்சகமாக இவ்வுலகை யும் வானத்தையும் தம் வசப்படுத்திக் கொண்டதை அறிந்த அசுரர்கள் ஆத்திரம் கொண்டனர். ஆயுதங்களோடு ஓடி வந்தனர். பலிச் சக்கரவர்த்தி அவர்களைத் தடுத்து நிறுத்தி னான்.

''மூன்றாவது அடிக்கு இடம் எங்கே?'' என்றார் வாமனர். ''சுவாமி, தாங்கள் தயங்க வேண்டாம். என் சிரசில் வைக்கலாம். எது வந்தாலும் வரட்டும்'' என்று அஞ்சலி செய்தான்.

அப்போது பிரகலாதன் அங்கு வந்து சேர்ந்தான். வாமனரைப் பார்த்து ''பக்தரட்சகா, சம்சார சாகரத்தில் மேலும் அழுந்தாமல் பலி தங்களால் காப்பாற்றப் பட்டான்'' என்றான்.

## சுதலலோகம் :

பகவான் அனைவரையும் பார்த்து, மலர்ந்த முகத்தோடு ''அன்பர்களே, என்னைச் சரண் அடைந் தவனை நான் என்றும் கைவிட மாட்டேன். தானம் செய்

தால் துன்பம் நேரும் என்று தெரிந்திருந்தும் பலி சொன்ன சொல்லைக் காப்பாற்றினான். ஆகவே தேவர்களாலும் அடைய முடியாத சிரேயஸ்ஸை அடைந்து விட்டான். சர்வர்ணி மனுவில் பலியே இந்திரனாக விளங்கப் போகிறான். அதுவரை விசுவ கர்மாவால் நிர்மாணிக்கப் பட்ட சுதல லோகத்தில் சகல சம்பத்துக்களோடு இருந்து வருவான். அவனுடைய அதிகாரத்துக்கு உட்படாத அசுரர் களை நான் சக்கராயுதத்தால் அழிப்பேன்'' என்று அனுக்கிரகித்தார்.

பின்னர் அருகிலிருந்த சுக்கிராச்சாரியரை அழைத்து யாகத்தைப் பூர்த்தி செய்வித்தார். யாகம் முடிந்ததும் பலி அனைவரையும் வணங்கி, பிரகலாதனோடு சுதல லோகத் திற்குச் சென்றான். மகிழ்ச்சியோடு அங்கு ஆட்சி செலுத்தி வந்தான். பலியிடமிருந்து தாம் பெற்ற மூன்று உலகங்களை யும் இந்திரனிடம் ஒப்புவித்துத் தேவர்களைத் திருப்தி செய்து மறைந்தருளினார் மகாவிஷ்ணு.

## காழிச் சீராம விண்ணகரம்

**ஒரு குறளாய் இரு நிலம் மூவடி மண் வேண்டி**
**உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்**
**தருக எனா மாவலியைச் சிறையில் வைத்த**
**தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி**
**அருமறையின் திரள் நான்கும் வேள்வி ஐந்தும்**
**அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்**
**தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்**
**சீராம விண்ணகரே சேர்மின் நீரே.**

—திருமங்கையாழ்வார்.

**துளசி :**

துளசி என்ற சொல்லுக்கு, ''இதற்குச் சமம் வேறில்லை'' என்பது பொருள். கௌஸ்துபம் முதலிய திவ்யாபரணங்கள் இருந்தாலும், ''துளசி தாம பூஷணி''

என்று வைகுண்ட நாதனுக்குச் சிறப்புப் பெயர் அமைந் துள்ளது. கிருஷ்ண பரமாத்மாவின் அஷ்ட பத்தினிகளில் துளசி ஒருத்தி. பூமியில் பகவான் நெல்லி மரமாக அவதரித்த போது அவள் துளசி செடியாகத் தோன்றினாள். துளசி ஒரு தெய்வீகச் செடி. அதை அருச்சிப்பவர்கள் சகல பாக்கியங் களையும் பெறுவர்.

எந்தத் தானம் செய்தாலும் அது பலனளிக்க வேண்டு மானால் துளசி தளம் வைத்து, தீர்த்தம் விட்டே செய்ய வேண்டும். சிரார்த்தத்தில் மிக முக்கியமாகத் துளசி தளத் தைப் பயன்படுத்துகிறார்கள். நித்திய பூசையில் அவசியம் துளசி தளத்தால் அருச்சனை செய்ய வேண்டும். துளசி தளமே துலா பாரத்தில் வெற்றி பெற்றது. துளசி வனத்தின் அருகில் சர்ப்பம் நடமாடாது. ''துளசி தேவிக்கு நமஸ்காரம்'' என்று சொல்லி வழிபட்டால் எல்லாத் துன்பங்களும் நீங்கும்.

துளசிச் செடியின் அடியில் தோன்றியவள் ஆண்டாள். துளசியை நம் வீடுகளில் அம்பிகையாகத் தொழுகிறோம். வைணவர்கள் பிரசாதமாக இதை வழங்குகிறார்கள். துளசி தீர்த்தம் உடலைச் சுத்தம் செய்து மனிதனுக்குத் தெய்வீகத்தை அளிக்க வல்லது. இது மருந்தாகவும் பயன் படுகிறது. இத்தகைய மகிமை வாய்ந்தது துளசிதளம்.

## குறிப்பு :

காஞ்சியிலுள்ள 14 வைணவத் தலங்களுள் உலகளந்த பெருமாள் கோயில் ஒன்று. மிக உயர்ந்த உருவில் காட்சி தருகிறார் இறைவன். இத்தலத்தின் வேறு பெயர் ஊரகம்.

# 8. கிளைக் கதைகள்

## அறிமுகம் :

ஸ்ரீமத் பாகவத புராணத்தில் ஸ்ரீமன் நாராயணன் துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்ய பத்து அவதாரங் களை எடுத்தார். அவைகள் தனித்தனியாக விவரிக்கப் பட்டுள்ளன. அவை போக, இக்காவியத்தில் பல கிளைக் கதைகள் வருகின்றன. அவற்றுள் துருவன், கஜேந்திரன், பகீரதன், யயாதி, சகுந்தலை ஆகிய ஐவரைப் பற்றிய வரலாறுகள் இங்குக் கூறப்படுகின்றன.

## துருவன் :

மூன்று உலகங்களையும் கடந்து, சப்த ரிஷிகளுடைய ஸ்தானத்தையும் தாண்டி, மேலானதாகப் பிரகாசிக்கும் விஷ்ணு பதத்தை அடைந்தவன் துருவன். கம்பத்தில் கட்டப்பட்டுள்ள பசு, அந்தக் கம்பத்தையே ஆதாரமாகக் கொண்டு சுற்றி வருவதுபோல, நவக்கிரகங்களும், நட்சத்திரக் கூட்டங்களும் துருவனையே ஆதாரமாகக் கொண்டு சுழன்று வருகின்றன. எட்டாத இடத்தில் பிரகாச மாக இருந்தபடி மூன்று உலகங்களிலும் உள்ளவர்களுக்கு ஒளிச்சுடராக விளங்கி வருகிறான். தமிழில் துருவ நட்சத்திரம் என்றும், ஆங்கிலத்தில் Pole star என்றும் அழைக்கிறார்கள்.

## பிறப்பும் இளமைப் பருவமும் :

சுவாயம்பு மனுவுக்குப் பிரியவிரதன், உத்தான பாதன் என்ற இரு பிள்ளைகள் பிறந்தனர். அவர்கள் இருவரும் நாராயணனுடைய அம்சமாதலால் அவர்கள் இப்பிரபஞ்சத் தையே மேன்மையோடு ஆண்டு வந்தார்கள்.

உத்தான பாதனுக்கு சுநீதி, சுருசி என்று இருமனைவியர் இருந்தனர். சுநீதிக்குத் துருவனும், சுருசிக்கு உத்தமனும் பிறந்தார்கள். உத்தான பாதனுக்கு இளைய மனைவியிடம் அதிக பிரியம். அவள் விருப்பப்படி நடந்து வந்தான். அவள் அதைத் தனக்குச் சாதகமாக வைத்துக்கொண்டு, அரசனுக்குப் பின் தன் மகனே பட்டத்துக்கு வரவேண்டுமென்று விரும்பினாள். மன்னனுக்கு மூத்த மனைவியிடம் வெறுப்பு உண்டாகும்படி அவன் மனத்தைக் கலைத்து வந்தாள். அதன் காரணமாக சுநீதியும் துருவனும் வெறுத்து ஒதுக்கப் பட்டனர். என்றாலும் அவர்கள் இருவரும் சகிப்புத் தன்மையுடன் காலங்கழித்து வந்தனர். ஒருநாள் உத்தானபாதன் அரசவையில் அமர்ந்திருந்தான். இளைய மகன் உத்தமனை மடியில் வைத்து சீராட்டிக் கொண்டிருந்தான். துருவன் தற்செயலாய் வந்தவன் தந்தையின் மடியில் போய் அமர்ந்தான். இதைக் கண்ட சுருசி விரைந்து வந்து அவனை இழுத்து அப்பால் தள்ளினாள். வெளியே போகுமாறு அதட்டினாள்.

''அப்பாவின் மடியில் உட்கார எனக்கு உரிமை இல்லையா?'' என்று துருவன் கேட்டான்.

''நீ என் வயிற்றில் பிறக்கவில்லை. போய் தவஞ்செய்து என் வயிற்றில் வந்து பிற. அப்போது அவர் மடியில் உட்காரலாம்'' என்று ஆணவமாகப் பதிலளித்தாள்.

துருவனுக்கு உள்ளத்தில் உறுதி உண்டாயிற்று. பகவானுடைய அருளைப் பெற முடிவு செய்தான். தாயிடம் சென்று நடந்தவற்றைக் கூறினான். மகனுடைய பிடிவாதத்தை மாற்ற இயலாது என்று அறிந்தாள். வாழ்த்தி விடை கொடுத்தாள். துருவன் அன்னையை வலம் வந்து பணிந்து, வனம் நோக்கி நடந்தான்.

வழியில் நாரதரைக் கண்டான். தன் கருத்தைத் தெரிவித்தான். ''குழந்தாய், நீயோ சிறுவன். காட்டில் புலி, சிங்கம் முதலிய கொடிய மிருகங்கள் வாழ்கின்றன.

அவற்றால் உனக்குத் துன்பங்கள் உண்டாகும். பேசாமல் வீட்டுக்குத் திரும்பிச் செல்'' என்று தடுத்துப் பார்த்தார்.

''சுவாமி, என்னைத் தடுக்காதீர்கள். நான் பரந்தாமனைப் பார்க்காமல் திரும்பமாட்டேன். என்னை வாழ்த்தி அனுப்புங்கள்'' என்று துருவன் வேண்டினான். அவனுடைய மன உறுதியைக் க்ண்டு, ''துருவா, யமுனை நதி தீரத்திலுள்ள மதுவனத்தில் பகவான் நாராயணன் நித்தியவாசம் செய்கிறார். அங்குச் சென்று, அவரை நோக்கித் தவஞ்செய். அவர் உனக்குக் காட்சி தருவார். உயர்ந்த நிலையை அடைவாய்'' என்று நாரதர் வாழ்த்துக் கூறினார்.

துருவன் அவரை வலம் வந்து வணங்கி தவஞ் செய்யச் சென்றான். நாரதர் அச் செய்தியை உத்தானபாதனுக்குச் சொல்லிச் சென்றார்.

### தவநிலை :

துருவன் மதுவனத்திற்கு வந்து சேர்ந்தான். யமுனையில் நீராடினான். பகவானைத் தியானித்து தவம் மேற்கொண்டான். மூன்று நாட்களுக்கு ஒருமுறை காட்டில் கிடைக்கும் பழங்களை உண்டு, பகவானை ஒரே மனதுடன் தியானித்து வந்தான். இவ்வாறு பல மாதங்கள் கடந்தன. காற்றையே உணவாகக் கொண்டான். மூச்சை அடக்கி சமாதி நிலையில் இருந்தான். வனவிலங்குகள் அவனை நெருங்கவில்லை. தவம் கடுமையாயிற்று. பகவான் நாராயணன் அவன்முன் தோன்றினார்.

'துருவா' என்று அழைத்தார். கண் திறந்து பார்த்தான். சங்கு சக்ர கதாதாரியாய் கிரீட குண்டலங்களுடன் மார்பில் கௌஸ்துபம் தவழ மகாலட்சுமியுடன் எதிரே நிற்பதைக் கண்டான். அவரை வலம் வந்து வணங்கினான். துதி பாடினான். சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவன் ஆனான். ''பிறவிப் பெருங்கடலைக் கடக்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினான்.

''குழந்தாய்; உன் விருப்பம் நிறைவேறும். என்னிடம் நிலையான பக்தியோடு பல்லாண்டுகள் இவ்வுலகை ஆட்சி செய். பின்னர் நீ வான மண்டலத்தில் எவராலும் அடைய முடியாத பதத்தை அடைந்து, சூரியன் முதலான கிரகங்களாலும் அசுவனி முதலான நட்சத்திரங்களாலும், சப்த ரிஷிகளாலும் வலம் வந்து வணங்கப்படப் போகிறாய்'' என்று அருளி மறைந்தார்.

## நாடு திரும்பியது :

துருவன் தவத்தில் வெற்றி பெற்று, இறையருளோடு நாடு திரும்பினான். இச் செய்தி நகரெங்கும் பரவியது. சுநீதி மகனைக் காண ஓடி வந்தாள். மகனை ஆரத் தழுவி முத்தமிட்டாள். நகர மக்கள் நகரை அலங்கரித்தனர். மன்னன் எதிர்கொண்டழைத்தான். எங்கும் ஆனந்தம்; ஆரவாரம். துருவனை யானைமீதேற்றி நகர் வலம் வந்தனர். அரண்மனைக்கு உரிய முறையில் அழைத்துச் சென்றனர்.

நாட்கள் பல கடந்தன. உத்தானபாதன் ஒரு நல்ல நாளில் துருவனுக்கு முடிசூட்டினான். அனைவரிடமும் விடைபெற்று, காட்டில் தவஞ் செய்யச் சென்றான். துருவன் இரு மனைவியரை மணந்து நல்லாட்சி நடத்தினான். உத்தமன் மணம் செய்து கொள்ளவில்லை. தன் அண்ணனுக்குச் சேவை செய்து வந்தான். அரச போகங்களில் பற்றுக் கொள்ளவில்லை.

## விஷ்ணு பதம் :

துருவன் குடிமக்களிடம் அன்புகொண்டு, பல்லாண்டு ஆட்சி புரிந்தான். பின்னர் தன் மகனுக்கு முடிசூட்டி, ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்புவித்தான். பாச பந்தங்களிலிருந்து விடுபட்டு, பத்ரிகாசிரமத்திற்கு வந்து சேர்ந்தான்.

மனத்தை ஒருநிலைப்படுத்தி பரந்தாமனைக் குறித்து, தியானத்தில் அமர்ந்தான். வானிலிருந்து ஒளிமயமான விமானம் ஒன்று வந்திறங்கியது. அதில் வந்த தேவ புருஷர்கள் துருவனை உபசரித்தார்கள். துருவன் விமானத்தில் ஏறி அமர்ந்தான். தேவர்கள் மலர் மாரி பொழிந்தார்கள். தேவ துந்துபி முழங்கியது. விமானம் வானத்தில் எழுந்தது. துருவன் தேவ லோகம் செல்வதைத் தாயாரும் கண்டாள்.

துருவன் விஷ்ணு பதத்தை அடைந்தான். வடதிசையிலிருந்துகொண்டு ஒளிச்சுடராக விளங்கி வருகிறான். நவக்கிரகங்களும், நட்சத்திரங்களும், சப்த ரிஷிகளும் அவனை வலம் வருகின்றனர்.

## கஜேந்திரன் :

**''ஆதித் தனிக்கோல் மானான் அடியவற்கா**
**சோதித் திருத்தூணில் தோன்றினான்—வேதத்தின்**
**முன்னின்றான் வேழம் முதலே என அழைப்ப**
**என்னென்றான் எங்கட்(கு) இறை''**

—நளவெண்பா

''ஆதியில் ஒப்பற்றவராக அவதாரம் எடுத்தவனும் பிரகலாதனுக்காக ஒளி பொருந்திய அழகிய கம்பத்தில், நரசிங்கமாக அவதாரம் செய்தவனும், வேதத்தின் தலைவனாக இருப்பவனும், கஜேந்திரன் என்னும் யானை முதலையின் வாயில் சிக்குண்டு ''ஆதி மூலமே!'' என்று கூக்குரலிட்டபோது ''ஏன்?'' என்று காட்சியளித்து ரட்சித்தவனுமாகிய நாராயணனே எங்கட்குத் தலைவனாவான்'' என்று புகழேந்திப் புலவர் இறைவணக்கம் கூறுகின்றார்.

திருப்பாற்கடலால் சூழப்பட்டது திரிகூடம் என்ற பர்வதம் உயர்ந்த மூன்று சிகரங்களையுடையது அம்மலை. அநேக ஆறுகள் அம்மலையிலிருந்து தோன்றி நாட்டை

வளப்படுத்தின. அம்மலையில் அழகிய ஏரி ஒன்றுண்டு. தேவலோகமாதர்கள் அந்த ஏரியில் நீராடிச் செல்வதுண்டு.

ஒரு சமயம் சாரல் காடுகளில் இருந்து யானைக் கூட்டம் ஒன்று வந்தது. பெண் யானைகளோடு சூழப்பட்ட ஆண் யானை ஏரியில் இறங்கிக் குளித்தது. யானைகளும் யானைக் குட்டிகளும் நீரில் மகிழ்ந்து விளையாடின.

அந்த ஏரியில் முதலை ஒன்று வெகு காலமாக வாசஞ் செய்து வந்தது. முதலை ஆண் யானையை நெருங்கி அதன் காலைக் கவ்வியது. யானை திடுக்கிட்டு, அதன் பிடியி லிருந்து தன் காலை விடுவித்துக் கொள்ள முயன்றது. முதலை யானையை நடு ஏரி வரையில் இழுத்துச் சென்றது. ஒன்றை ஒன்று இழுக்க அவைகளின் இடையே போராட்டம் வலுத்தது. பெண் யானைகளும் குட்டிகளும் பயந்து கரை யேறின.

நாட்கள் கடந்தன. யானையின் சக்தி குறைந்தது. ஆகாரம் இன்மையால் உடல் இளைத்தது. முதலைக்கு நீரில் பலம் அதிகம். கஜேந்திரனுக்கு, இனி தன்னைக் காப்பாற்றக் கூடியவர் பரந்தாமனே என்ற முடிவுக்கு வந்தது. துதிக்கையை உயரத் தூக்கி, ''ஏ! ஆதிமூலமே என்னைக் காப்பாற்று'' என்று அலறியது.

கஜேந்திரனுடைய அபயக் குரல் எங்கும் ஒலித்தது. தேவர்கள் ஸ்ரீமன் நாராயணனைத் தியானித்து, கஜேந்திரனை மரணத்தின் பிடியிலிருந்து விடுவித்துக் காப்பாற்ற வேண்டுமென பிரார்த்தித்தனர்.

தேவர்களின் பிரார்த்தனையும், கஜேந்திரனின் கதறலும் பகவானுக்குக் கேட்டது. உடனே கருடாரூடராய் ஏரித்யின் கரைக்கு எழுந்தருளினார். சக்கராயுதத்தை பிரயோகித் தார். அது முதலையின் உடலைத் துண்டித்து, கஜேந்திரனை அதன் பிடியிலிருந்து விடுவித்தது. தேவர்கள் மகிழ்ந்தனர், மலர் மாரி பெய்தனர். தேவ துந்துபி முழங்கியது. முதலையின் உடலில் இருந்து பேரொளியோடு

கந்தர்வன் ஒருவன் எழுந்தான். பகவானை வலம் வந்து வணங்கினான். சாப விமோசனம் பெற்றுச் சென்றான். கஜேந்திரனும் இறைவனைத் துதித்து அவருடைய பாதங் களை அடைந்தான்.

## முன் பிறவி விளக்கம் :

பாண்டிய மன்னன் இந்திரத்துய்மன் ஒரு சமயம் மலைய பர்வதத்தில் பகவானைக் குறித்துத் தவம் செய்து கொண்டிருந்தான். அப்போது அகத்திய முனிவர் தம் சீடர் களுடன் அங்கு வந்து சேர்ந்தார். அரசன் தியானத்தில் இருந்தபடியால் அவர்கள் வந்ததைக் கவனிக்கவில்லை. அவரை வரவேற்று உபசரிக்கவில்லை,

அகத்தியர் கோபங் கொண்டார். தன்னை மன்னன் அவமதித்துவிட்டான் என்பது அவர் கருத்து. யானையைப் போல் மன்னன் மமதை கொண்டிருந்தான் என்று கருதி அவன் யானையாக ஆகக்கடவது எனச் சபித்துவிட்டார். முனிவர் சாபத்தால் மன்னன் யானையாக மாறிவிட்டான். வேண்டுமென்று முனிவரை அவமதிக்காததால் மன்னன் சாபம் பெற்றதாக வருந்தவில்லை. பாரம் முழுவதையும் பகவான்மீது சுமத்திவிட்டு, அவரைத் தியானித்துக் கொண்டே காலங்கழித்து வந்தான். இறைவன் அவ்வாறே தக்க சமயத்தில் அவனுக்கு வந்த இன்னலை அகற்றி வைகுண்ட பதவியை அளித்தார்.

## பகீரதன் :

முன்னொரு காலத்தில் சகரன் என்ற மன்னன் ஆட்சி செய்து வந்தான். அவன் மிகுந்த பராக்கிரமசாலி. யுத்தத் தில் சிறை பிடிக்கப்பட்டவர்களைக் கொல்லாமல் மொட்டையடித்து அனுப்பிவிடுவான். குருவின் ஆசி பெற்று அசுவமேத யாகமும் செய்தான்.

சகரனுக்கு இரண்டு மனைவியர். மூத்த மனைவி கேசினி என்பவள். மகன் அசமஞ்சன். அசமஞ்சனுக்கு அஞ்சுமான் பிறந்தான்.

இளைய மனைவி சுமதி என்பவளுக்குப் பல பிள்ளைகள் பிறந்தனர். அவர்கள் சகரர்கள் என அழைக்கப்பட்டனர். அவர்கள் பலசாலிகள். என்றாலும் கர்வமும் கூடவே இருந்தது. சகரன் அசுவமேதயாகம் செய்தபோது யாகக் குதிரையைப் பூப்பிரதட்சணம் செய்து வர அனுப்பினான். குதிரைக்குக் காவலாகத் தன்னுடைய பிள்ளைகளையும் அனுப்பி வைத்தான்.

பூலோகத்தில் யாராவது யாகம் செய்தால் அதைக் கலைப்பது இந்திரனுடைய வேலை. ஆகவே இந்திரன் யாகக் குதிரையைக் கவர்ந்து சென்று பாதாளத்தில் கபில முனிவருடைய ஆசிரமத்தில் கட்டிவிட்டுச் சென்றான். சகரர்கள் பூமி முழுவதும் குதிரையைத் தேடிக் காணாமல், பாதாள உலகம் வந்தனர். குதிரையைக் கண்டனர். இக்காரியத்தைச் செய்தவர் முனிவரே என்று துணிந்து அவரைத் தாக்கினர். நிஷ்டையிலிருந்து முனிவர் கண்ணைத் திறந்து பார்த்தார். உடனே சகரர்கள் சாம்பலாயினர்.

வெகு நாட்களாகியும் யாகக் குதிரை திரும்பி வராததைக் கண்ட சகரன் தன் பேரனான அஞ்சமானை அனுப்பினான். அவன் பூலோகத்தைச் சுற்றிப் பார்த்து குதிரையையும் சிற்றப்பன்மார்களையும் காணாமையால் பாதாளலோகம் சென்றான். முனிவர் ஆசிரமத்தில் குதிரையையும் சாம்பல் குவியலையும் கண்டான்.

அஞ்சுமான் முனிவரை வணங்கினான். "முனிசிரேஷ்டரே! என்னைக் காப்பாற்ற வேண்டும். என் பாட்டனார் அசுவமேத யாகம் செய்கிறார். அவர் அனுப்பிய குதிரை மட்டும் இங்கு உள்ளது. அதற்குக் காவலாக வந்த என் சிற்றப்பன்மார்களைக் காணவில்லை. அவர்கள் எங்கே?

குதிரையை அழைத்துச் செல்ல அனுமதி வேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

முனிவர் மகிழ்ந்து, ''குழந்தாய், உன் சிற்றப்பன்மார்கள் எனக்கு அபசாரம் செய்யத் துணிந்தார்கள். எரிந்து சாம்ப லானார்கள். ஆகாய கங்கையைக் கொண்டு வந்து சாம்ப லில் கலந்தால் அவர்கள் நற்கதி அடைவார்கள், குதிரையை அழைத்துச் செல்'' என்று ஆசீர்வதித்தார்.

அஞ்சுமான் குதிரையை அழைத்துச் சென்றான். பாட்டனாரிடம் விவரத்தைச் சொன்னான். சகரன் யாகத்தைப் பூர்த்தி செய்தான். எல்லாப் பொறுப்புக்களை யும் அஞ்சுமானிடம் ஒப்புவித்து விட்டு, தவஞ் செய்யக் காட்டுக்குச் சென்றான். குரு உபதேசத்தால் நற்கதி யடைந்தான்.

கபில மகரிஷி தெரிவித்தபடி கங்கையைக் கொண்டு வர அஞ்சுமானும், அவன் மகன் திலீபனும் முயற்சி செய்தும் முடிவு பெறவில்லை. திலீபன் மகன் பகீரதனுடைய முயற்சி யினால்தான் அவ்வேலை பூர்த்தியாயிற்று. 'பகீரத முயற்சி' என்று நாம் குறிப்பிடுவது இப்பெரிய சாதனையைத்தான்.

பகீரதன் கங்கையைக் குறித்து, வெகுகாலம் கடுந்தவஞ் செய்தான். அவன் தவத்தை மெச்சி, கங்காதேவி அவன் முன் தோன்றினாள். ''நீ கோரும் வரம் யாது?'' என்று கேட்டாள். பகீரதன் கங்கையை வணங்கி, ''தாயே! முனிவருடைய கோபத்தால் சாம்பலாகிவிட்ட என் முன்னோர்களைக் கரையேற்ற நீ பூலோகம் வரவேண்டும்'' என வேண்டினான்.

''குழந்தாய், உன் விருப்பத்தைத்தான் நிறைவேற்று கிறேன். ஆனால் இரு விஷயங்களைக் கவனிக்க வேண்டி யுள்ளது: முதலாவதாக நான் ஆகாயத்திலிருந்து கீழே இறங்கும்போது அதிவேகமாக வருவேன். பூமி தாங்காது, ஆகவே என்னை முதலில் தாங்கி, பின்னர் பூமியில் விட

வேண்டும். அதற்குச் சக்தியுள்ளவர் ஈசன் ஒருவன்தான். அவரைக் குறித்துத் தவஞ் செய்து அவர் சம்மதத்தைப் பெற வேண்டும்.

''இரண்டாவது நான் பூமியில் ஓடும்போது மக்கள் என்னிடம் நீராடி தங்கள் பாபங்களைப் போக்கிக் கொள் வார்கள். அதனால் என்னைப் பற்றும் பாபங்களை நான் போக்கிக் கொள்வது எவ்வாறு?'' என்று கங்காதேவி கேட்டாள்.

பகீரதன் அவளைத் துதித்து, ''தேவி, பூவுலகில் பல முனிவர்களும் மகான்களும் இருக்கிறார்கள். கங்கையில் நீராடும்போது அவர்கள் கொண்டுள்ள பக்தி காரணமாக உன்னுடைய தோஷங்கள் நீங்க வேண்டும். தாங்கள் கூறிய படி பரமசிவனைக் குறித்துத் தவஞ் செய்து அவருடைய அருளைப் பெறுவேன்'' என்றான்.

அவ்வாறே பகீரதன் சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்தான். அவரும் மகிழ்ந்து அவன் விருப்பத்தை நிறை வேற்றுவதாகத் தெரிவித்தார். அவ்வாறே கங்காதேவி ஆகாயத்திலிருந்து பூமியை நோக்கி இறங்கி வந்தாள். பரமேஸ்வரன் தேவியைத் தம் சடை முடியில் தாங்கி, மெது வாகக் கீழிறங்கச் செய்தார்.

பகீரதன் மிகுந்த மகிழ்ச்சியோடு பகவானைப் பலவாறு துதித்து, கங்காதேவியைத் தன் முன்னோர்கள் சாம்பலாகி யிருந்த இடத்திற்கு அழைத்து வந்தான். கபிலருடைய ஆசிரமத்தில் இருந்த சாம்பல் குவியலில் கங்கை நீர் பிரவேசித்தது. சகர புத்திரர்கள் அனைவரும் நற்கதி பெற்று மேலுலகம் சென்றனர்.

## யயாதி :

நகுஷனுக்கு ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர் களுள் யயாதி ஒருவன். நகுஷன் அநேக யாகங்களால் தேவதைகளைத் திருப்தி செய்து இந்திர பதவியை அடைந்

தான். சாபம் காரணமாக இந்திரன் சிறிது காலம் பதவியை விட்டு ஒதுங்கியிருக்க நேர்ந்த காலத்தில் அப்பதவியை நகுஷன் அடைந்தான். ஆனால் இந்திராணியை அடைய வேண்டும் என்ற சபலம் காரணமாகத் தான் ஏறிச் சென்ற பல்லக்கைச் சுமந்து சென்ற முனிவர்களைச் "சர்ப்ப, சர்ப்ப" என்றான். வடமொழியில் 'சர்ப்ப' என்றால் விரைந்து செல் என்பது பொருள். பல்லக்கைச் சுமந்து சென்றவர்களுள் அகஸ்தியரும் ஒருவர். அவர் கடுங்கோபங் கொண்டு அவனைச் சர்ப்பமாகப் போகுமாறு சாபங் கொடுத்துவிட்டார். அதன்படி அவன் மலைப் பாம்பாகப் பன்னெடுங்காலம் அவதியுற்றான் என்று கூறுவர்.

யயாதி தன் சகோதரர்களுடைய ஒத்துழைப்புடன் நாட்டைச் செவ்வனே ஆட்சி புரிந்து வந்தான். விருஷ பர்வா என்ற அசுரனுடைய மகள் சர்மிஷ்டை என்பவள்.

ஒரு நாள் சர்மிஷ்டை அசுர குருவாகிய சுக்கிராச்சாரி யாரின் மகள் தேவயானையோடும் தோழிமாரோடும் பட்டணத்துக்கு அருகிலுள்ள சோலைக்குச் சென்றாள். அங்குள்ள குளத்தில் அனைவரும் இறங்கி நீராடினர். அப்போது பார்வதியும் பரமேஸ்வரனும் ரிஷப வாகனத்தில் அவ்வழியாகச் சென்றனர். அதைக் கண்டவுடன் பெண்கள் நாணமுற்றுக் கரையேறி, தங்கள் ஆடைகளை உடுத்திக் கொண்டனர்.

அவசரத்தில் சர்மிஷ்டை தன்னுடைய ஆடையென்று எண்ணி, தேவயானையினுடைய ஆடையை எடுத்து அணிந்து கொண்டாள். தேவயானை கோபமுற்று, "நன்றா யிருக்கிறதா இந்த வேலை? உன்னுடைய தந்தைக்குக் குருவாக விளங்கும் நாங்கள் உயர்ந்தவர்கள் அல்லவா? என் ஆடையை நீ உடுத்தலாமா?" என்றாள்.

அந்த வார்த்தைகள் சர்மிஷ்டையின் உள்ளத்தைப் புண்படுத்தின. "அடி, நிறுத்து உன் பிதற்றலை, உன் நிலை யறியாது ஏதேதோ பேசுகிறாய். எங்கள் சோற்றுக்கு

நீங்கள் காத்துக் கிடக்கிறீர்கள். நாங்கள் குரு என்று போற்றுவதால்தான் உங்களுக்கு மதிப்பு'' என்று கோபமாகக் கூறி அவளைப் பக்கத்திலிருந்த பாழுங் கிணற்றில் பிடித்துத் தள்ளிவிட்டு, அரண்மனைக்குத் திரும்பி விட்டாள்.

சிறிது நேரம் கழித்து, யயாதி மன்னன் காட்டில் வேட்டையாடிவிட்டு அந்த வழியே வந்தான். நீர் வேட்கை மேலிட்டு அந்தக் கிணற்றை எட்டிப் பார்த்தான். ஆடையின்றி நீரில் தவித்துக் கொண்டிருக்கும் தேவயானையைப் பார்த்தான். இரக்கங்கொண்டு, தன் மேலாடையைக் கொடுத்து, உடுத்திக் கொள்ளச் செய்தான். அவள் கையைப் பிடித்து மேலே தூக்கி விட்டான்.

வெளியே வந்ததும் தேவயானை மன்னனை நோக்கி ''அரசே! தாங்கள் என் கையைப் பிடித்து வெளியே எடுத்து விட்டீர்கள். தற்செயலாக நிகழ்ந்த இந்தச் சம்பவத்தை நான் தெய்வ சம்மதமாகக் கருதுகிறேன். தங்களையே நான் பர்த்தாவாக வரிக்கிறேன்'' என்றாள். யயாதியும் ''சரி; அப்படியே ஆகட்டும்'' என்று சொல்லிச் சென்றான்.

தேவயானை தன் தந்தையிடம் நிகழ்ந்தவற்றைக் கூறினாள். அசுரத் தலைவனுக்கு எதிராக அவர் ஒன்றும் செய்ய இயலாமையால் மகளை அழைத்துக் கொண்டு அசுரப் பட்டணத்தை விட்டு வெளியேறினார். செய்தியறிந்து விருஷபர்வா ஓடிவந்து குருவைத் தடுத்து நிறுத்தினான். அவர் விதித்த நிபந்தனையின்படி யயாதிக்கும் தேவயானைக்கும் திருமணம் நடந்தது. சர்மிஷ்டை தேவயானைக்கு வேலைக்காரியாக அமர்த்தப்பட்டாள்; அதாவது ராஜாவின் மகள் குருவின் மகளுடைய ஏவலின்படி நடக்க வேண்டியதாயிற்று.

ஒரு சமயம் தேவயானை யயாதியை விட்டுப் பிரிந்து தந்தையின் வீட்டிற்கு வந்திருந்தாள். அப்போது சர்மிஷ்டை யயாதியிடம் மிகவும் பிரியம் கொண்டு அவனைக் கணவனாக

வரித்தாள். அவளுக்கு மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்களுள் பூரு மூன்றாமவன்.

தேவயானைக்கும் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். அவள் யயாதியின்மீது கோபங் கொண்டு தந்தையின் வீட்டுக்கே வந்துவிட்டாள். சுக்கிராச்சாரியார் கடுங்கோபங் கொண்டார். யயாதியைப் பார்த்து, ''அடே மூடா, என் வார்த்தையை அலட்சியம் செய்த உன்னைக் கிழத்தனம் பற்றிக் கொள்ளட்டும்'' என்று சாபந்தந்தார்.

அரசனுடைய அழகிய தோற்றம் மாறியது. விகாரமான கிழத்தன்மை உண்டாயிற்று. மன்னன் அசுர குருவும் மாமனாருமாகிய சுக்கிராச்சாரியாரைப் பணிந்து, ''சுவாமி, தங்கள் மகளிடம் இன்னமும் திருப்தியடையாதிருக்கும் எனக்குச் சாபம் கொடுத்து விட்டீரே'' என்று மன்றாடினான்.

''அரசே! நீ மீண்டும் இன்பம் அனுபவிக்க விரும்பினால் உன் வயோதிக பருவத்தை வேறு யாருக்காவது அளித்து விட்டு, அவரிடமிருந்து இளமையைப் பெற்றுக்கொள்'' என்று அனுக்கிரகம் செய்தார் அசுரகுரு.

யயாதி, தன் மக்களிடம் தன் கிழத்தன்மையை ஏற்றுக் கொண்டு, அவர்களுடைய யௌவனத்தைத் தனக்குத் தருமாறு வேண்டினான். மூத்த மக்கள் மறுத்துவிட்டனர். கடைசி மைந்தனான பூரு என்பவன் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்ற முன்வந்தான். தந்தையைப்பற்றி யிருக்கும் கிழத் தன்மையைத் தான் ஏற்றுக்கொண்டு தன்னுடைய யௌவனத்தை அவருக்கு அளித்தான்.

மகனுடைய இளமைத் தன்மையைப் பெற்றுக் கொண்ட யயாதி பன்னெடுங்காலம் இன்பமாய் வாழ்க்கை நடத்தினான். உலக இன்பங்களை நுகர்ந்தான். முடிவில் சம்சாரத்தில் வெறுப்புக் கொண்டு பகவானை ஆராதித்து நற்கதியை அடைய விரும்பினான். தான்பெற்ற இளமைத்தன்மையைத் திரும்பவும் பூருக்கு அளித்து அவனிடமிருந்து கிழத்

தன்மையை அடைந்தான். மக்களிடம் அரச பதவியை அளித்துவிட்டு, பகவானது பாதார விந்தங்களைச் சேர்ந்தான்.

**சகுந்தலை :**

பூரு வம்சத்தில் சுமதி என்பவளுக்கு துஷ்யந்தன் பிறந்தான். துஷ்யந்தன் ஒருசமயம் காட்டில் வேட்டையாட வந்தபோது கண்வ மகரிஷியின் ஆசிரமத்தை அடைந்தான். அங்கே அதியற்புத அழகோடு விளங்கும் ஒரு பெண்ணைக் கண்டான். அவன் உள்ளம் அவளை நாடியது. அருகில் நெருங்கி, ''பெண்ணே, நீ யார்? உன்னைப் பார்த்தால் உத்தம ராஜ குலத்தில் பிறந்தவளாகத் தோன்றுகிறது'' என்று கேட்டான்.

அந்தப் பெண்ணும் மன்னனைக் கடைக்கண்ணால் நோக்கினாள். ''அரசே! என் பெயர் சகுந்தலை; விசுவாமித்திரருக்கும் மேனகைக்கும் பிறந்தவள் நான்: என் தந்தையால் கைவிடப்பட்ட என் தாய் என்னை இம்முனிவரின் ஆசிரமத்தில் விட்டுவிட்டுப் போய்விட்டாள், மகரிஷியால் நான் வளர்க்கப்பட்டு வருகிறேன்'' என்றாள்.

அவள் வார்த்தைகளால் சந்தோஷமடைந்த துஷ்யந்தன் அவளை மணந்துகொள்ள சம்மதம் கேட்டான். அவளும் சம்மதித்தாள். துஷ்யந்தன் அவளைக் காந்தர்வ முறைப்படி மணந்து கொண்டான். ஆசிரமத்தில் அவளோடு ஒருநாள் தங்கி, ஆனந்தமாக இருந்துவிட்டுத் தன் நகரத்திற்குத் திரும்பினான்.

நகரம் திரும்பிய துஷ்யந்தன் விதிவசத்தால் தான் கண்வர் ஆசிரமத்தில் சகுந்தலையைச் சந்தித்ததையும் அவளைக் காந்தர்வ முறைப்படி மணந்து கொண்டதையும் மறந்துவிட்டான். ஆசிரமத்தில் சகுந்தலைக்கு ஒரு மகன் பிறந்தான். கண்வர் அப்பாலகனுக்குப் பரதன் எனப்

பெயரிட்டார். ஜாதகர்மா முதலானவற்றைச் செய்வித்தார். அன்பாய் வளர்த்து வந்தார். பாலகனும் சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான்.

சகுந்தலை தன் மகனை, அவன் தந்தையிடம் கொண்டு போய்ச் சேர்க்க விரும்பினாள். முனிவருடைய ஆசி பெற்று, பரதனை அழைத்துக்கொண்டு துஷ்யந்தனுடைய சபையை அடைந்தாள். துஷ்யந்தனுக்கு அவர்களை யாரென்று அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. சகுந்தலையைத் தன் மனைவியாகவும், பரதனைத் தன் மகனாகவும் ஏற்றுக்கொள்ள மறுத்தான். அப்போது ஓர் அசரீரி, அரசனுக்குப் பரதன் அவனுடைய மகன் என்பதை உணர்த்தியது.

''துஷ்யந்தா, உன் குமாரனை நிராகரிக்காதே. உலகத்தில் தாய் உற்பத்திற்குக் காரணமாக இருக்கிறாள்; புத்திரனால்தான் தந்தை நரகத்திலிருந்து காப்பாற்றப்பட வேண்டும். சகுந்தலையையும் பரதனையும் ஏற்றுக்கொள்.'' இவ்வாறு அசரீரி கூறியதும் துஷ்யந்தன் அவர்களை ஏற்றுக் கொண்டான்.

துஷ்யந்தனுக்குப் பிறகு பரதன் அரசனானான். அவன் சகல சம்பத்துக்களையும் பெற்றுப் பல்லாண்டு காலம் பரிபாலனம் செய்தான்.

# 9. பரசுராம அவதாரம்

பரசுராமனும் தசரத ராமனும் சம காலத்தவர்கள்; திருமாலின் ஆறாவது அவதாரம் பரசுராமன். ஏழாவது அவதாரம் தசரத ராமன். ஜமதக்னி முனிவருடைய குமாரரான பரசுராமர், தம்முடைய தந்தை ஓர் அரசனால் கொல்லப்பட்ட காரணத்தால், க்ஷத்திரிய குலத்தையே

அழித்து விடுவதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார். அதன்படி நூற்றுக்கணக்கான அசுரர்களைக் கொன்றும் சினம் தணியாதவர்.

தசரத ராமன் மிதிலையில் சீதாபிராட்டியை மணந்து, பரிவாரத்தோடு அயோத்திக்குத் திரும்பிச் செல்லும்போது பரசுராமர் அவரை வழிமறித்தார். தன் கையிலிருந்த விஷ்ணு தனுசைக் கொடுத்து, அதை வளைக்கச் சொன்னார். அவ்வாறே தசரதராமன் அந்த வில்லை வாங்கி வளைத்தார். உடனே பரசுராமருடைய தேஜசானது வாடிவிட்டது. அவருடைய அவதார சக்தி கணத்தில் மறைந்தது.

"உன் பிரபாவத்தைக் கண்டேன். நீ என்னைக் கர்வ பங்கம் செய்ததில் எனக்கு வருத்தமில்லை. நீ யார் என்பதை அறிந்தேன். என் தவம் முழுவதும் உனதாகக் கடவது. உன் கையிலிருக்கும் அம்புக்கு என்னுடைய தவத்தின் பயன் முழுவதும் இரையாகக் கடவது" என்று சொல்லிவிட்டு, தசரதராமனை வலம் வந்து, வணங்கிச் சென்றார் என்பது இராமாயணச் செய்தி.

மகாபாரதத்திலும் பரசுராமரைப் பற்றிய செய்தி வருகிறது. கர்ணன் தேரோட்டியின் மகன் என்ற காரணத்தால் துரோணாச்சாரியார் அவனுக்கு வில்வித்தை கற்றுக் கொடுக்க மறுத்து விட்டார். கர்ணன் பரசுராமரை அணுகினான். தன் நிலைமையை எடுத்துச் சொன்னான். இவன் க்ஷத்திரியன் அல்லன் என்ற காரணத்தால் அவனுக்கு வில்வித்தை கற்பித்தார். கர்ணன் வில்வித்தையில் தேர்ச்சி பெற்றான்.

ஒரு நாள் கர்ணன் மடியில் பரசுராமர் தலைவைத்து உறங்கிக் கொண்டிருந்தார். கண்ணனுடைய சூழ்ச்சி வேலை செய்தது. கர்ணனுடைய தொடையில் வண்டு துளை செய்தது. ரத்தம் பெருகிற்று; ஆசிரியர் விழித்துக் கொண்டால் அவர் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்று

அஞ்சியவனாய் கர்ணன் அத்துன்பத்தைச் சகித்துக் கொண்டிருந்தான். ரத்தம் பெருகி ஆசிரியரின் தூக்கம் கலைந்தது.

"கர்ணா! உண்மையைச் சொல்: நீ பிறப்பால் க்ஷத்திரியனாகத்தான் இருக்க வேண்டும். ரத்தத்தைக் கண்டும் பயப்படாமல் இருக்கும் மன வலிமை க்ஷத்திரியனுக்குத்தான் உண்டு. உண்மையை ஒளித்து என்னிடம் நய வஞ்சகமாக வித்தையைக் கற்றுக் கொண்டாய். ஆகவே ஆபத்துக் காலத்தில் அஸ்திரங்களைப் பிரயோகம் செய்யும் மந்திரங்களை மறந்து போவாய். இந்த வில்வித்தையும் உனக்கு உதவாமற் போகும்" என்று சாபம் கொடுத்தார்.

ஆகவே இவர் பன்னெடுங் காலம் வாழ்ந்த பிராமணர் என்றும், கோபமிக்கவர் என்றும், க்ஷத்திரிய குலத்தையே நாசம் செய்தவர் என்றும் அறிகிறோம். ஆகவே இந்த ஆணவம் மிக்க பரசுராம அவதாரம் பரிபூரண அவதாரமாகிய தசரத ராமனிடம் சரண் அடைந்தது என்றும் ஆறுதல் பெறுகிறோம்.

'உள்ளது சிறத்தல்' என்ற டார்வின் சித்தாந்தம் இங்கு உண்மையாகிறது என்றும் உணர்கிறோம்.

## கார்த்த வீரியார்ச்சுனன் :

கார்த்த வீரியார்ச்சுனன் என்னும் அரசன் ஸ்ரீமன் நாராயணனுடைய அம்சமான தத்தாத்ரேயரைப் பக்தியுடன் உபசரித்து அவருடைய ஆசியைப் பெற்றவன். இராவணனை வென்று சிறை செய்தவன். அவன் ஒரு சமயம் காட்டில் வேட்டையாடச் சென்றான். களைத்து ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். முனிவர் தம்மிடமிருந்த காமதேனுவின் உதவியால் அரசனுக்கும் அவனுடைய பரிவாரங்களுக்கும் உணவளித்து உபசரித்தார். அவன் திரும்பிச் சென்றபோது தன் பரிவாரங்களைக் கொண்டு காமதேனுவை அபகரித்துச் சென்றான். அப்போது பரசுராமன் அங்கில்லை.

பரசுராமன் திரும்பி வந்தபோது காமதேனு இல்லாததைக் கண்டு கடுங்கோபங் கொண்டான். தன்னுடைய வில்லையும் கோடாலியையும் எடுத்துக் கொண்டு மன்னனின் தலைநகராகிய மாகிஷ்மதி நோக்கிப் புறப்பட்டான்.

நால்வகைப் படையுடன் மன்னன் பரசுராமனை எதிர்த்தான். பரசுராமன் தன் தவவலிமையினால் படைகளைச் சிதறடித்து, மன்னனையும் கொன்றான். மன்னனின் மக்கள் பயந்தோடினர். பசுவை மீட்டுக் கொண்டு, தந்தையிடம் வந்து, நடந்ததைக் கூறினான் பரசுராமன். ஜமதக்கினி இதைக் கேட்டு மிகவும் வருந்தினார்.

"இது மாபாதகம். மன்னனைக் கொன்றது அடாத செயல். இந்தப் பாவத்தைப் போக்க, புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்று நீராடி வா" என்றார்.

அவ்வாறே பரசுராமன் தந்தையைப் பணிந்து தீர்த்த யாத்திரைக்குச் சென்றான். ஒரு வருஷம் தீர்த்த யாத்திரை செய்துவிட்டு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தான்.

## ரேணுகாதேவி :

ஒரு நாள் ரேணுகா தேவி நீர் கொண்டுவர கங்கைக்குச் சென்றாள். அங்கே தேவ மாதர்களுடன் கந்தர்வ மன்னன் ஒருவன் நீரில் விளையாடிக் கொண்டிருந்தான். ரேணுகா தேவி அவனுடைய அழகில் ஈடுபட்டாள். தன்னை மறந்தாள். சிறிது காலந் தாழ்ந்தது.

இதற்குள் ஆசிரமத்தில் ஓமம் செய்யும் நேரம் கடந்துவிட்டது. ரேணுகா தேவி தவற்றை உணர்ந்தாள். ஆசிரமத்திற்கு விரைந்து வந்தாள். முனிவர் முன் தலை குனிந்து நின்றாள். முனிவர் ஞானதிருஷ்டியால் நடந்ததை அறிந்தார். மனதால் நினைப்பதும் குற்றம் என்று எண்ணிய

முனிவர் அவளை உடனே கொன்று விடுமாறு புத்திரர் களுக்கு உத்திரவிட்டார். தாயைக் கொல்வது பாபம் என்று கருதி, அவர்கள் தந்தையின் கட்டளைப்படி நடக்க மறுத்து விட்டனர்.

கடைசியில் பரசுராமனை நோக்கி, "உன் தாயையும் என் கட்டளைக்குப் பணிய மறுத்த உன் சகோதரர்களையும் கொல்வாயாக" என்று கட்டளையிட்டார். பரசுராமன் உடனே தந்தையின் கட்டளையை நிறைவேற்றினார். ஜமதக்கினி மகிழ்ந்து, "மகனே, உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

"தந்தையே, என் தாயையும் சகோதரர்களையும் உயிர் பெற்றெழச் செய்ய வேண்டும்; அவர்கள் என்னால் தண்டிக் கப்பட்டார்கள் என்ற உணர்வு அவர்களுக்குத் தோன்றக் கூடாது" என்று பரசுராமன் வேண்டி நின்றான்.

முனிவரும் அவ்வாறே அருள் செய்தார். ரேணுகா தேவியும் அவள் குமாரர்களும் உயிர் பெற்றெழுந்தனர். அதன் பின்னர் பரசுராமன் தன் சகோதரர்களுடன் தவஞ் செய்யச் சென்றார்.

## அரசகுமாரர்கள்

கார்த்த வீரியார்ச்சுனனுடைய புத்திரர்கள் பழிக்குப் பழி வாங்கக் காத்திருந்தனர். யோகத்தில் அமர்ந்திருந்த முனிவரைக் கொன்று விட்டனர். ரேணுகாதேவி அலறினாள். தவத்தில் ஈடுபட்டிருந்த பரசுராமன் இக்குரலைக் கேட்டு ஓடி வந்தார். தந்தையின் தலை துண்டிக்கப் பட்டிருந்ததைக் கண்டு ஆவேசங் கொண்டார். சீறி எழுந்தார்.

கோடாலியை எடுத்துக் கொண்டு மாகிஷ்மதிக்கு ஓடினார். மன்னன் மக்கள் அனைவரையும் கொன்று தீர்த்தார். தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்திர கிரியைகளைச் செய்தார்.

உலகில் அரச வமிசமே அற்றுப் போகும்படி இருபத்தொரு முறை திக் விஜயம் செய்தார். அரசர்களை வேர் அறுத்தார். பின்னர் அந்த பாவம் நீங்க யாகஞ் செய்தார். நாட்டைப் பிரித்து முனிவர்களுக்கு அளித்தார். சரஸ்வதி நதியில் அபிவிருத ஸ்நானம் செய்தார். பரசுராமரால் பூஜிக்கப்பட்ட ஜமதக்கினி, ரிஷி மண்டலத்தில் ஏழாவது ரிஷியானார். பரசுராமர் மகேந்திர பர்வதத்தில் சித்தர்களாலும் கந்தர்வர்களாலும் கொண்டாடப்பட்டு வருகிறார்.

# 10 இராமாவதாரம்

## அறிமுகம் :

திருமால் எடுத்த அவதாரங்கள் பத்து. அவற்றுள் காப்பியச் சிறப்புடையவை இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும் ஆகும். இந்த இரண்டு அவதாரங்களின் குறிக்கோள் ஒன்றுதான். அதாவது அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநாட்டுவதாகும். ஆயினும், அந்த உயர்ந்த குறிக்கோளுக்கு வெற்றி தேடுவதற்குக் கடைப்பிடித்த நடைமுறைகளில் இராமனுக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே அடிப்படை வேறுபாடு காணப்படுகிறது.

கிருஷ்ணாவதாரத்தில் அதர்மத்தை அழிப்பதென்ற நல்ல கொள்கைக்காக யுத்த தர்மத்திற்கு மாறுபட்ட முறைகளையெல்லாம் கடைப்பிடிக்கக் காண்கிறோம். இராமாவதாரத்தில் கொள்கையைப் போலவே நடைமுறையும் தர்மத்திற்கு ஒத்ததாய் இருக்கிறது.

இராமன் ஒழுக்கத்திற் சிறந்தவன்; உயர் குணங்கள் நிறைந்தவன்; உயிர்கள் அனைத்திடமும் சமமாக அன்பு செலுத்தியவன்; பகைவனிடமும் கருணை காட்டிய

பண்பாளன்; புவியாளும் பொறுப்பைப் பெரிதாக மதியா தவன்; இன்ப துன்பங்களைச் சமமாக எண்ணியவன்; இவ்வளவு சிறந்த மகா புருஷனைத் தலைவனாகக் கொண்டது இராமாயணம்.

இராமாவதாரத்தின் சிறந்த அம்சங்களாக உள்ளவை ஒன்று. அவை யாவன ! பிதுர்வாக்கிய பரிபாலனம்; ஏக பத்தினி விரதம்; சகோதர வாஞ்சை.

## குறிப்பு :

இராமன் வந்தான்; கிருஷ்ணன் வந்தான்; என்று அவதார புருஷர்களை ஏக வசனத்தில் குறிப்பிடலாமா என்று வாசகர்களுக்குச் சந்தேகம் தோன்றக் கூடும். காவியங்களிலும், புராண இதிகாசங்களிலும் மற்றும் செய்யுள் நூல்களிலும் தெய்வங்கள் இவ்வாறுதான் குறிப் பிடப்படுகிறார்கள். இதில் தவறு ஒன்றும் இல்லை. இது இலக்கிய மரபு. பிற்காலத்தில் இவ்வாறு பெரியார்களைக் குறிப்பிடுவது தவறு என்று கருதி அவர் வந்தார் என்று மரியாதையாகக் குறிப்பிடுகின்றனர்; அவ்வளவுதான்.

## இராம நாடகக் கீர்த்தனை :

சீர்காழி அருணாசலக் கவிராயர் இந்நூலை 18ஆம் நூற்றாண்டில் எழுதினார். இராமாவதாரச் சிறப்புக் களைக் கீர்த்தனை உருவில் மிக அழகாகப் பாடியுள்ளார். நூலைப் பாடுவதற்கு முன் அவர் தம் வழிபடு தெய்வமாகிய திருவரங்கம் ஸ்ரீ அரங்கநாதப் பெருமானை வாழ்த்தி வணங்குகிறார். அப்பாடலில் பகவான் எடுத்த பத்து அவதாரங்களின் சிறப்புடைய குறிப்பாக இராமாவதாரத் தையும், கிருஷ்ணாவதாரத்தையும் பற்றிப் பாடியுள்ளார். வாசகர்களின் நலன் கருதி அப்பாடலைக் கீழே தரப்பட்டு உள்ளது.

## ஸ்ரீரங்கநாயகர் துதி

ராகம் ; மோகனம் தாளம் : ஆதி

### பல்லவி

ஏன் பள்ளி கொண்டீர் அய்யா—ஸ்ரீ ரங்கநாதரே நீர்
ஏன் பள்ளி கொண்டீர் அய்யா.

### அநுபல்லவி

ஆம்பல் பூத்தசய பருவத நடுவிலே அவதரித்த
இரண்டாற்று நடுவிலே (ஏன்)

### சரணங்கள்

கோசிகன் சொல் குறித்தற்கோ அரக்கி குலையில்
அம்பு தெறித்தற்கோ
ஈசன் வில்லை முறித்ததற்கோ—பரசு ராமன் வரம்
பறித்தற்கோ
மாசிலாத மிதிலேசன் பெண்ணுடன் வழிநடந்த இளைப்போ
தூசிலாத குகன் ஓடத்திலே கங்கைத்துறை கடந்தஇளைப்போ
மீசரம் ஆம்சித்ர கூடச் சிகரத்தில் மிசை நடந்த இளைப்போ
காசினிமேல் மாரீசன் ஓடிய கதிதொடர்ந்த இளைப்போ
—ஓடிக்
களைத்தோ தேவியைத்தேடி இளைத்தோ மரங்கள் ஏழும்
தொளைத்தோ கடலைக் கட்டி வளைத்தோ இலங்கை
யென்னும்
காவல்மா நகரை இடித்த வருத்தமோ
ராவணாதிகளை அடித்த வருத்தமோ (ஏன்) 1

மதுரையிலே வரும் களையோ முதலை வாய்மகளைத்
தரும் களையோ
எதிர் எருதைப் பொருங்களையோ கன்றை எடுத்தெறிந்த
பெருங்களையோ
புதுவையான முலை உண்டு பேயின் உயிர் போக்கி
அலுத்தீரோ
துதிசெய் காலினால் காளிங்கன் மணிமுடி தாக்கி அலுத்தீரோ
—மருதம்

சாய்த்தோ ஆடுமாடுகள் மேய்த்தோ சகடுகளைத்
தேய்த்தோ கஞ்சன் உயிரை மாய்த்தோ அர்ச்சுனனுக்காகச்
சாரதியாய்த்தேர் விடுத்த வருத்தமோ
போரிலே சக்கரம் எடுத்த வருத்தமோ (ஏன்) 2

படிதனிலே மெத்தவும் நானே உம்மை பரம் எனவே
அடுத்தேனே
அடிமை கொள்வீர் எனைத்தானே செம்பொன் அணி
அரங்கப் பெருமானே
தடம் உறைந்த கரும்பாறை சாபமது தடுத்து ரட்சித்தீரே
விட ஒண்ணாத காகாசுரனுக் கொருகண் விடுத்துரட்சித்தீரே
கொடுமை கொண்டழுத துரோபதைக்கு துகில் கொடுத்து
ரட்சித்தீரே
மடுவில் ஆனைமுன் ஓடி முதலையை மடித்து ரட்சித்தீரே
—அதுபோலவே
வாரும் கிருபைக் கண்ணாலே பாரும் மனக்கவலை
தீரும் நினைத்தவரம் தாரும் என் சாமி
வட்ச மேவும் மக லட்சுமியுடன் பெரும்
பட்ச மாக என்னை ரட்சிக்க எழுந்திரும் (ஏன்) 3

அவதாரம் :

*தசரதனுக்கு மூன்று மனைவியர். கோசலை, கைகேயி சுமித்திரை ஆகிய மூவருள் கோசலைக்கு மகனாகப் பகவான் நாராயணன் அவதாரம் செய்தார். உலகில் அரக்கரின் கொடுமை அதிகரித்தது. அவர்களுடைய துன்பங்களி லிருந்து உலகை விடுவிக்கவும், தேவர்களுடைய பயத்தைப் போக்கவும் பகவான் கோசலையிடம் ஸ்ரீராமனாகப் பிறந்தார். அவருடைய சக்கரம் கைகேயியிடம் பரதனாகப் பிறந்தது. ஆதிசேஷன் இலட்சுமணனாகவும், சங்கு சத்ருக்க னாகவும் சுமித்திரையிடம் பிறந்தார்கள்.*

## விசுவாமித்திரர் :

குமாரர்கள் நால்வரும் நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தனர். இராஜகுமாரர் களுக்குரிய ஆயுதப் பயிற்சிகளிலும் தேர்ச்சி பெற்றனர். ஒரு நாள் விசுவாமித்திரர் என்னும் இராஜரிஷி தசரத ருடைய அரண்மனைக்கு வந்தார்.

"மன்னா! நான் செய்யப் போகும் யாகத்திற்கு அரக்கர்களால் இடையூறு நேராவண்ணம் பாதுகாக்க இராமனையும், இலட்சுமணனையும் என்னோடு அனுப்பி வைக்க வேண்டுகிறேன்" என்றார். வெகுநாள் புத்திரப் பேறு இல்லாமல் யாகம் செய்து அதன் பிறகு பிறந்த புத்திரர்களை முனிவருடன் அனுப்ப மன்னனுக்கு விருப்ப மில்லை. என்றாலும் முனிவருடைய கோபத்திற்கு அஞ்சி னான். அதன்றியும் குல குருவாகிய வசிஷ்டர், "இதன் மூலம் அனுப்புதல் நலம்" என்று யோசனை கூறினார். அதன்படி தசரதன் இராமனையும் இலக்குவனையும் விசுவாமித்திரருடன் அனுப்பி வைத்தான்.

விசுவாமித்திரருடன் அவரது நிழல் போல் அரச குமாரர்கள் இருவரும் சென்றனர். வழியில் குறுக்கிட்ட தாடகை என்னும் அரக்கியை முனிவரின் ஏவல்படி இராமன் வதம் செய்தான். யாகத்தின்போது மாரீசன் அரக்கனோடு வந்து அதை நடைமுறை ஒட்டாமல் தடை செய்ய ஆரம்பித்தான். அரக்கர்களை அழித்து மாரீசனைத் துரத்தி அடித்தான்.

முனிவரின் யாகம் செவ்வனே நடைபெற்றது. முனிவர் மகிழ்ந்தார். இளைஞர்கள் இருவருக்கும் பல அஸ்திரங் களை உபதேசித்தார். ஊருக்குத் திரும்பினர். வழியில் கௌதமர் ஆசிரமத்திற்குச் சென்றனர். அங்குக் கல்லாகக் கிடந்த அகலிகை, ஸ்ரீராமனுடைய பாததுளிபட்ட உடன் தன்னுடைய சாபம் நீங்கப் பெற்று, மானிட வடிவை அடைந்தாள்.

## மிதிலை விஜயம் :

விசுவாமித்திரர் இராம லட்சுமணர்களை மிதிலைக்கு அழைத்துச் சென்றார். ஜனக மகாராஜா தன்னுடைய மகள் சீதைக்கு உரிய நாயகனைத் தேர்ந்தெடுக்க ஒரு சுயவரம் நடத்தினான். ஜனகரிடம் எவராலும் தூக்கி நிறுத்தி வளைத்து நாணேற்ற முடியாத சிவதனுசு ஒன்று இருந்தது. அந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவனுக்குத் தன் மகளை மணம் செய்து கொடுப்பதாக அறிவித்திருந் தான் மன்னன்.

விசுவாமித்திரர் அரசிளங்குமரர்களை ஜனகனுடைய அவைக்கு அழைத்துச் சென்றார். வில்லை வளைத்து நாணேற்றுமாறு இராமனை ஏவினார். அதே போல் இராமனும் வில்லை எடுத்து நிறுத்தி வளைக்க முற்பட்ட போது அந்த சிவதனுசு இரண்டாக முறிந்து விழுந்தது. இராமன் சீதையை மணந்து பரிவாரங்களுடன் அயோத்தி நோக்கிச் சென்றான்.

வழியில் பரசுராமர் எதிர்த்தார். அவருடைய விஷ்ணு தனுசை வளைத்து, அவர் கொண்டிருந்த ஆணவத்தை அடக்கினார்.

## இளவரசு பட்டம் :

அயோத்தியில் இராமன் உடன் பிறந்தவரோடு பன்னிரண்டு ஆண்டுகள் இன்பமாய் காலங்கழித்து வந்தான். தசரதன் இராமனுக்கு முடி சூட்டி, அரசாட்சியை அவன் வசம் ஒப்புவிக்க எண்ணினான். அதற்கான ஏற்பாடுகள் துரிதமாய் நடைபெற்றன.

கைகேயியின் தோழி மந்தரை என்பவள் இராமனிடம் துவேஷங் கொண்டவள். அவள் இந்த ஏற்பாட்டைக் குலைக்க எண்ணினாள். கைகேயி இராமனுக்கு மாற்றாந்

தாயாக இருந்த போதிலும் அவனிடம் பிரியம் உடையவள். மந்தரை கைகேயியின் மனத்தைக் குலைத்தாள். அவள் மனத்தில் துவேஷத்தை உண்டாக்கினாள்.

முன்னொரு சமயம் தசரதன் கைகேயிக்கு இரண்டு வரங்கள் கொடுத்திருந்தான். அவற்றை இப்போது கேட்டுப் பெறுமாறு மந்தரை சூழ்ச்சி செய்தாள். ஒரு வரத்தால் இராமன் 14 வருஷம் வனவாசம் செல்ல வேண்டும் என்றும், மற்றொரு வரத்தால் பரதனுக்கு முடிசூட்டும்படியும் கேட்குமாறு கைகேயிக்குச் சொல்லிக் கொடுத்தாள்.

அதன்படி கைகேயி தன் கணவனிடம் அவ்விரண்டு வரங்களையும் தனக்கு இப்போது தரவேண்டுமென்று கேட்டாள். தசரதன் இதைக் கேட்டுப் பதறினான், கலங்கினான். அவளைக் கெஞ்சினான். அவள் பிடிவாதத்துடன் இருந்தாள். என்ன செய்வதென்று தோன்றாமல் தசரதன் மயக்கமுற்று வீழ்ந்தான். தந்தையின் நிலை கண்ட இராமன் அவர் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டு அரசு உரிமையைப் பரதனுக்கு அளித்துவிட்டு, வனத்துக்குப் புறப்பட்டான். அவனுடன் இலக்குவனும் சீதையும் புறப்பட்டனர்.

## வனவாசம் :

இராமன் வனத்துக்குப் போய் விட்டான் என்ற செய்தி கேட்டு, தசரதன் அந்தப் பிரிவுத் துன்பத்தைத் தாங்க முடியாமல் உயிரை விட்டுவிட்டான். அயோத்தி நகரமே சோகத்தில் மூழ்கியது. கானகம் சென்ற இராமன், கங்கையை வேடுவர் தலைவனாகிய குகனுடைய உதவியால் கடந்து பரத்துவாசர் ஆசிரமத்தை அடைந்தான். அங்கு ஒரு நாள் தங்கி, முனிவரால் உபசரிக்கப்பட்டு; பின்னர் சித்திர கூடம் சென்று பர்ணசாலை அமைத்துத் தங்கியிருந்தான்.

## பாதுகா பட்டாபிஷேகம் :

அயோத்தியில் இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்றபோது பரதன் அங்கு இல்லை. கேகய நாட்டிற்குச் சென்றிருந்தான். அது அவனுடைய தாய்வழி பாட்டனார் நாடு. அயோத்திக்குத் திரும்பியபோதுதான் பரதனுக்கு இந்த அசம்பாவிதங்கள் தெரிய வந்தன. தாயின் பேராசையே இந்தக் கொடுமைகளுக்குக் காரணம் என்று தாயைக் கடிந்தான். இராமனுடைய உரிமையைத் தான் ஏற்றுக் கொள்ள முடியாது என்று கூறி, வனம் சென்று இராமனை அழைத்துவரப் போவதாகக் கூறினான்.

அவ்வாறே பரதன் சித்ர கூடத்திற்கு வந்து சேர்ந்தான். இராமனுடைய பாதங்களில் அடியற்ற நெடுமரம் போல் விழுந்தான், கதறினான். ''அண்ணா! என்ன காரியம் செய்தீர்கள். தங்களுடைய பிரிவைத் தாங்காமல் தந்தை காலமாகி விட்டார். தாங்கள் அயோத்திக்குத் திரும்பி வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று மன்றாடினான்.

தந்தையின் மரணச் செய்தியைக் கேட்டு இராமன் மிகவும் வருந்தினான். அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்தான்.

''பரதா! நீ சொல்கிறபடி நான் அயோத்திக்குத் திரும்பி வர இயலாது. தந்தையின் கட்டளையைப் பரிபாலனம் செய்ய வேண்டும். துக்கத்தை விடு. நீ அயோத்திக்குத் திரும்பிச் சென்று குடிமக்களின் நலனைக் கவனி'' என்றான் இராமன்.

பரதன் அயோத்திக்குத் திரும்ப முடியாது என்று வற்புறுத்தினான், ''தாங்கள் அரசை நான் ஏற்பது தகுதியன்று'' என்று பல நியாயங்களை எடுத்துரைத்தான்.

இராமனுடைய வற்புறுத்தலின் பேரில் பரதன் நாடு திரும்ப ஒருவாறு ஒப்புக் கொண்டான். "அண்ணா, நான் அரசனாக இருக்க விரும்பவில்லை. தங்களுடைய பாதுகைகளைத் தாருங்கள். அவற்றைச் சிம்மாசனத்தில் வைத்து, வழிபட்டு, தங்கள் பிரதிநிதியாக இருந்து ஆட்சி புரிய சம்மதிக்கிறேன்" என்றான்.

இராமனும் அதற்கிணங்கி தன்னுடைய பாதுகைகளைப் பரதனுக்கு அளித்தான். பரதன் அதைச் சிரமேற் தாங்கிக் கொண்டு புறப்பட்டான். அயோத்தியில் நுழையவில்லை. இராமனை அழைத்து வராமல் தான் அயோத்தி திரும்பவில்லை என்று சொன்னான் அல்லவா? நகருக்கு வெளியேயுள்ள நந்திக்கிராமம் என்னுமிடத்தில் தங்கி, இராமனுடைய பாதுகைகளைச் சிம்மாசனத்தில் வைத்துப் பூசித்து அவற்றின் பிரதிநிதியாக இருந்து அரச காரியங்களைக் கவனித்து வரலானான்.

## இராம கீதை :

இத்தகைய சிறந்த குணங்களையுடைய பரதனை வைணவர்கள் 'பரதாழ்வான்' என்றே போற்றுகின்றனர். "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா" என்று குகனும் பாராட்டியுள்ளான். பரதன் இராமனைச் சித்ர கூடத்தில் சந்தித்தபோது இராமன் பரதனுக்குச் செய்த உபதேசங்கள் வருமாறு:

1. மனிதனது விருப்பப்படி எந்தக் காரியமும் நடைபெறாது. மனிதனை ஆட்டி வைப்பவன் இறைவன்.

2. செல்வம் யாவும் அழியக் கூடியவை; உயர்வு உண்டு எனில் தாழ்வும் உண்டு. எவ்வளவுக்கு எவ்வளவு நெருங்கிப் பழகுகிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு பிரிவு நிச்சயம். எத்தகைய வாழ்க்கையும் மரணத்தை முடிவாகக் கொண்டது.

3. மரத்தில் தோன்றிய பழம் பழுத்து நிலத்தில் விழுவது எவ்வளவு நிச்சயமோ, மனிதன் பிறந்து இறப்பதும் அவ்வளவு நிச்சயம். இருப்பது நிச்சயமில்லை.

4. எவ்வளவு உறுதியாக வீட்டைக் கட்டினாலும் காலப் போக்கில் வீடு இடிந்து அழிவதுபோல மனிதனும் வயது முதிர்ந்து இறந்து விடுகிறான்.

5. கழிந்த இரவு திரும்ப வருவதில்லை. கடலை அடைந்த யமுனாநதி திரும்ப வருவதில்லை. அது போலவே கழிந்த இளமை மீண்டும் வருவதில்லை.

6. எல்லாப் பிராணிகளுக்கும் இரவும் பகலும் கழிந்த படியே உள்ளன. கோடைக் காலத்தில் நீர் வற்றிக் குறைவது போலவே பிராணிகளுக்கும் ஆயுள் விரைவில் குறைந்து கொண்டே போகிறது.

7. நீ உன் நிலையை எண்ணி வருந்தாமல் பிறரைப் பற்றி ஏன் வருந்துகிறாய்? நீ நிற்கும் காலத்திலும் போகும் காலத்திலும் ஆயுள் குறைந்து குறைந்து கொண்டே போகிறது.

8. நீ செல்லுகிற காலத்திலும் உட்காருகிற காலத்திலும் வெகுதூரம் சென்று திரும்பும் காலத்திலும் எமன் அதே வழியில் உன்னுடன் சென்று கூடவே திரும்பி வருகிறான்.

9. உடலெங்கும் தசை சுருங்கிவிடுகிறது; தலைமயிர் நரைத்து விடுகிறது. முதுமையால் உடல் தளர்ச்சியடைகிறது. என்ன செய்தால் இவற்றை அகற்ற முடியும்?

10. சூரியன் உதித்த காலத்திலும் மறைந்த காலத்திலும் மனிதன் மகிழ்ச்சியடைகிறான். அதனால் தன் வாழ்நாளில் ஒருநாள் குறைந்ததை அவன் அறிவதில்லை.

11. புதிது புதிதான ருதுக்களின் ஆரம்ப காலத்தைக் கண்டு மனிதன் மகிழ்ச்சி அடைகிறான். ஆனால் ருதுக்களின் கழிவால் தன் ஆயுள் காலம் கழிவதை அவன் அறிவதில்லை.

12. கடலில் வெவ்வேறான இடங்களில் மிதந்து கொண்டு இருந்த கட்டைகள் ஒரு காலத்தில் ஒன்று கூடுகின்றன. கூடியிருந்த கட்டைகள் ஒருகாலத்தில் பிரிந்துவிடுகின்றன. அதுபோலவே மனைவி, மக்கள், தாயாதிகள், செல்வம் யாவும் ஒன்று சேரவேண்டிய காலத்தில் ஒன்று சேருகின்றனர். பிரிய வேண்டிய காலத்தில் பிரிந்து விடுகின்றனர். சேர்க்கை எப்படி நிச்சயமோ அவ்வாறே பிரிவும் நிச்சயம்.

13. பிராணிகள் தோன்றியபடி இருப்பதில்லை. முதுமையால் இறந்து விடுகின்றன. இறந்ததை எண்ணி வருந்தலாமே தவிர, திரும்பக் கொண்டுவர எவராலும் இயலாது.

14. வழியில் நடந்து செல்கிறவனைப் பார்த்த வழிப்போக்கன், "நானும் உன்னுடன் வருகிறேன்" என்று கூறித் தொடர்ந்து வருவதுபோல, தந்தை பாட்டன் சென்ற வழியில் நாமும் செல்வது நிச்சயம். மீண்டும் வருவது என்பது இயலாது, ஆகையால் பிரிவால் வருந்துவதில் பயன் என்ன?

15. போகிற வெள்ளத்தை நிறுத்த முடியாததுபோல வயது முதிர்ச்சியால் இறப்பவனைத் தடுக்க முடியாது. கிடந்ததைக்கொண்டு மகிழ்கிறவர்களே சுகத்தை அடைந்தவர் ஆவர்.

இராமன் பரதனுடைய மனக் கலக்கத்தை உணர்ந்து கொண்டு அவனுக்கு அளிக்கும் இந்த உத்தரமே இராம கீதை எனப்படும். துக்கத்துடனும், சோகத்துடனும் இருக்கும் அருச்சுனனைப் பார்த்துக் கண்ணன் தேற்றிக் கூற ஆரம்பிக்கிறான் என்று பகவத் கீதையில் கூறப்பட்டு உள்ளதுபோலவே நல்லொழுக்கமும் தைரியமும் உள்ள இராமன், துக்கித்து மனம் கலங்கி அழுதுகொண்டிருக்கும் பரதனை அன்பு மொழிகளால் தேற்றுவதாக இராமகீதை அமைந்துள்ளது.

## தண்டகாரண்யம் :

தண்டகாரண்யம் காட்டுப் பிரதேசம். உயர்ந்த மரங்கள் நெருங்கியிருந்தன. சித்திர கூடத்தில் சில நாட்கள் தங்கியிருந்தனர்; பின்னர் இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் புறப்பட்டு அத்திரி முனிவர் ஆசிரமத்தை அடைந்தும் முனிவர் இவர்களை எதிர்கொண்டு உபசரித்தார். அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும் வழியில் எதிர்ப்பட்ட விராதன் என்னும் அசுரனை சம்கரித்தனர். அகத்தியர் ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தனர்.

அகத்தியர் இராமனுக்கு வில்லும் அம்புகளும் கொடுத்துச் சிறப்பித்தார். அதன் பின்னர் அவர்கள் கோதாவரி நதிக்கரையை நோக்கிச் சென்றனர். வழியில் ஜடாயுவைச் சந்தித்து அதனுடைய நட்பைப் பெற்றனர்.

## பஞ்சவடி :

ஐந்து ஆலமரங்கள் இருந்த இடம் என்பது பொருள். பஞ்சவடி என்பது வடசொல். கோதாவரி நதிக்கரையில் இது அமைந்திருந்தது. அங்கே பர்ண சாலை அமைத்துக் கொண்டு அதில் தங்கியிருந்தனர். அங்கு இருந்த முனிவர்களுக்கு அரக்கர்களின் பயம் குறைந்தது.

இவ்வாறு இவர்கள் பஞ்சவடியில் வனவாசம் செய்து கொண்டிருந்தபோது ஒருநாள் இலங்கை மன்னன் இராவணனுடைய தங்கை சூர்ப்பநகை இராமனைக் கண்டாள். அவளுடைய இயற்பெயர் காமவள்ளி. அவள் இராமனுடைய அழகில் மனதைப் பறிகொடுத்தாள். சீதை உயிருடன் இருக்கும்வரை அவனை அடைய முடியாது என்று தெரிந்து கொண்டாள். ஆகவே அழகிய பெண்ணுருக் கொண்டு இராமனை அணுகினாள். இதை அறிந்து இலக்குவன் அவளை அங்கயீனப்படுத்தித் துரத்திவிட்டான். அறுபட்ட மூக்குடன் அழுதுகொண்டே சென்று அவளுடைய சகோதரர்களாகிய கரன் தூஷணர்களிடம் தெரிவித்தாள்.

அவர்கள் ஆவேசத்துடன் ஓடி வந்தனர். இரு சாராருக்கு மிடையே கடும் போர் நடந்தது. அரக்கர்கள் வதம் செய்யப் பட்டனர்.

சூர்ப்பனகை இலங்கைக்கு ஓடினாள். இராவணனிடம் முறையிட்டாள்; அழுதாள்; நடந்தவற்றைக் கூறினாள். தான் இராமனைக் கண்டு காமமுற்று அதனால் துன்பப் பட்டதைக் கூறாமல் சீதையின் அழகைப்பற்றி அவனிடம் புகழ்ந்து கூறி அவன் உள்ளத்தில் காமக் கனலை மூட்டினாள். இராமாயணக் காவியத்தில் இராவணன் எதிர் முகமாகக் (Viilain) கொள்ளப்பட்டாலும், மந்தரையும் சூர்ப்பனகையும்தான் வஞ்சகர்களாகக் கருத வேண்டி யுள்ளது.

சூர்ப்பனகை மூட்டிய ஆசைக்கனல் இாரவணன் மனத்தில் குடிகொண்டது. எப்படியாவது சீதையைக் கவர்ந்து தன் அரண்மனைக்குக் கொண்டு வரவேண்டு மென்று உறுதி செய்து கொண்டான். தன் தாய்மாமனும் மாயங்களில் வல்லவனுமான மாரீசனை அழைத்தான். ''நீ பொன்மான் உருக் கொண்டு சென்று, சீதையின் முன் நடமாடி, இராம இலக்குவர்களை அங்கிருந்து அழைத்துப் போக வேண்டும்'' என்று கட்டளையிட்டான். மாரீசன் எவ்வளவோ நியாயங்களை எடுத்துக் கூறினான். தடுத்துப் பார்த்தான். இராவணன் இவற்றிற்குச் செவிசாய்க்க வில்லை. கெடுமதி கண்ணுக்குத் தோன்றுமா?

**மாயமான் :**

மாரீசன் அழகிய பொன்மானாக உருமாறி பர்ண சாலையின் முன் நடனமாடினான், பொன்மயமான அந்த மானைப் பிடித்துத் தருமாறு சீதை வேண்டினாள். ''தேவி, அது நிஜமான் அல்ல. உங்களை ஏமாற்ற வந்துள்ளது'' என்றான் இலட்சுமணன். சீதை அந்த நல்லுரையைக் கேட்க வில்லை. விதி வேலை செய்தது. தனக்கு அந்த மான் வேண்டுமென்று பிடிவாதம் செய்தாள்,

பர்ணசாலையில் சீதைக்குக் காவலாக இலக்குவனை இருத்திவிட்டு இராமன் மானைத் தொடர்ந்து சென்றான் இராமன் கைக்கு அகப்படாமல் மாயமான் வெகுதூரம் சென்றது. இராமன் தொடர்ந்து ஓடினான். இராமன் கோபங்கொண்டு ஓர் அம்பு எய்தி மானைக் கொன்றான். மாரீசன் உயிர் விடும் போது, "ஆ லட்சுமணா, ஆ, சீதா" என்று அலறினான். இலக்குமணனைப் பர்ணசாலை யிலிருந்து வெளியேற்றுவதற்குச் செய்த சூழ்ச்சியாகும் இது.

இக்குரல் பர்ணசாலைக்கு எட்டியது. சீதை நடுங்கினாள். தன் கணவனுக்கு ஏதோ ஆபத்து என்று பதறினாள்.

"உன் அண்ணாவுக்கு ஏதோ ஆபத்து, சீக்கிரம் போய்ப் பார்" என்றாள். "தேவி, இது மாயமான் செய்த வேலை, என் அண்ணனை வெல்பவர் எவருமிலர். அஞ்ச வேண்டாம்" என்றான் இலக்குவன்.

இது சீதைக்குக் கோபமூட்டியது. "உன் எண்ணம் எனக்குத் தெரிந்து விட்டது. அண்ணன் இறந்து போனால் என்னை அடையலாம் என்ற ஆசையோ?" என்று கோபத்துடன் கூறினாள். இந்த அடாத பழிச் சொல்லைக் கேட்டு இலக்குவன் வருந்தினான்; கலங்கினான்; என்ன செய்வதென்று தோன்றாமல் சற்று நேரம் திகைத்தான். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனாய் சீதையைத் தனியே விட்டு விட்டு இராமனைத் தேடிச் சென்றான்.

## இராவண சந்நியாசி :

தக்க சமயம் பார்த்திருந்த இராவணன், சந்நியாசியாக வேடந்தரித்து, பிச்சை கேட்டான். பிச்சை போட வருகை யில் சீதையைக் கவர்ந்து, விமானத்தில் ஏற்றிக் கொண்டு இலங்கை நோக்கிப் புறப்பட்டான். வழியில் பறவைகளின் அரசனானவன் ஜடாயு, இராவணனுடைய அடாத

செயலைக் கண்டு ஆற்றாமல் இராவணனைத் தடுத்து நிறுத்தினான். தன் கால் நகங்களாலும், தன் அலகினாலும் இராவணனைத் தாக்கினான். இருவருக்கும் இடையில் பலத்த போர் நடந்தது. இராவணன் தன் வாளினால் ஜடாயுவின் இறக்கைகளைத் துண்டித்துவிட்டு சீதையுடன் இலங்கை சென்றான்.

மாரீசனைக் கொன்ற இராமன் பர்ணசாலைக்குத் திரும்பினான். வழியில் இலக்குவனைக் கண்டு திகைப் படைந்தான். "தம்பி, என்ன காரியம் செய்தாய். சீதையை தனியே விட்டு வரலாமா? இது அரக்கர்கள் வாசம் செய்யும் இடமாயிற்றே. இந்நேரம் சீதைக்கு என்ன நேர்ந்ததோ?" என்று கேட்டுக் கொண்டே பர்ணசாலைக்கு வந்து சேர்ந்தான்.

அங்கே சீதை காணப்படவில்லை. இருவரும் கலங்கினர். "சீதா, சீதா" என்று இராமன் கதறினான். கண்ணீர் வடித்தான். 'சீதைக்கு என்ன துன்பம் நேர்ந்தது என்று அவதாரப் புருஷனுக்குத் தெரியாதா?' என்று வாசகர்கள் கேட்கலாம். இராமன் பகவானுடைய அவதாரமாக இருந்த போதிலும் சாதாரண மனிதர்களுடைய சிந்தனை சக்தியுடனேதான் வாழ்ந்து வந்தான் என்று காவியம் கூறுகிறது. அதாவது தெய்வீக சக்தி மறைந்து விடுகிறது.

அந்தப் பிரதேசம் முழுவதும் தேடிப் பார்த்தனர். அவ்வாறு அவர்கள் ஜானகியைத் தேடி வருகையில், பலத்த காயங்களுடன் குற்றுயிராய்க் கிடந்த ஜடாயுவைக் கண்டனர். ஜடாயுவும் தசரதனும் ஒருவருக்கு ஒருவர் அன்புடையவராய் சகோதர பாசத்தோடு பழகியவர்கள். இராமன் அதை எடுத்து மடியில் கிடத்திக் கொண்டு கண்ணீர் விட்டான். தந்தைக்குச் செய்ததைப் போலவே ஜடாயுவுக்கும் இராமன் நீர்க் கடன்களைச் செய்தார்.

இராம இலக்குவர்கள் அங்கிருந்து புறப்பட்டனர். வழியில் கபந்தன் என்ற அரக்கன் அவர்களை பிடித்து

விழுங்க முற்பட்டான். அவன் அரக்கனல்லன்; சாபத்தால் அவ்வுருக் கொண்டிருந்தான். இராமன் அவனைச் சம்கரித்தான். அவன் சாப விமோசனம் பெற்று, இவர்களை வலம் வந்து எணங்கினான்; அருகில் இவர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் பரம பக்தையான சபரியிடம் செல்லுமாறு கூறி, விடை பெற்றுச் சென்றான்.

பகவானிடம் பக்தி கொண்டிருந்த சபரி என்னும் மூதாட்டி, இராம இலக்குவர்களை உள்ளன்போடு வரவேற்று உபசரித்தாள். சுவை மிகுந்த பழங்களை உண்ணுமாறு கொடுத்தாள். மதங்க மலையில் இருக்கும் சுக்ரீவனையும் அனுமனையும் சந்தித்தால் சீதையை மீட்க அவர்கள் உதவி செய்வார்கள் என்று தெரிவித்தாள். அவள் அளித்த பழங்களை உண்டு அவளுக்கு மோட்சத்தை அளித்து அங்கிருந்து புறப்பட்டனர்.

## கிஷ்கிந்தை :

சுக்ரீவன் கிஷ்கிந்தையின் வானர மன்னனான வாலியின் சகோதரன். அண்ணனால் நாட்டை விட்டு விரட்டப் பட்டு, அனுமானோடு மதங்க மலையில் வந்து தஞ்சம் புகுந்திருந்தான். இராம இலக்குவர்கள் வாலியின் ஒற்றர்களோ என்று சுக்ரீவன் பயந்தான். அவர்களை யார் என்று அறிந்து வர அனுமனை அனுப்பினான்.

அனுமன் சுக்ரீவனின் நல்லமைச்சன்; சொல்லின் செல்வன்; சகல சாஸ்திர சம்பன்னன். அவன் ஒரு பிராமண வடிவங் கொண்டு இராம இலக்குவர்களின் அருகில் சென்று, பணிந்து தான் யார் என்பதையும் சுக்ரீவன் வாலியால் துரத்தப்பட்டு அங்கு வந்து தஞ்சம் புகுந்திருப்பதையும் நயம்படக் கூறினான். அனுமனின் சொல் சாதுர்யம் இராமனின் மனதைக் கவர்ந்தது. அனுமன் அவ்விருவரையும் சுக்ரீவனிடம் அழைத்து வந்தான். இராமன், சுக்ரீவனைத் தன் உடன் பிறப்பாக ஏற்றுக் கொண்டான்: சுக்ரீவனுடைய துயரைத் துடைப்பதாக வாக்களித்தான்.

## வாலி வதம் :

இராமன் சுக்ரீவனுக்கு ஆறுதல் கூறினான் எனினும், சுக்ரீவனுக்கு உள்ளூர சந்தேகம். பெருவலி படைத்த வாலியைக் கேவலம் ஒரு நாள் வெல்ல முடியுமா என்பது அவனது ஐயம். அவனுடைய சந்தேகத்தை இராமன் யூகித்தறிந்து அவனுக்குத் தைரியம் ஊட்டுவதற்காக இரண்டு சாதனைகளைச் செய்து காண்பித்தான்.

அங்கே துந்துபி என்னும் அரக்கனுடைய எலும்புக்கூடு ஒரு பர்வதம் போன்று இருந்தது. இராமன் அதைத் தன் கால் கட்டை விரலால் நெம்பி வெகு தூரத்தில் சென்று விழுமாறு செய்தான். அடுத்தபடியாக ஒரே அம்பைப் பிரயோகித்து, வெவ்வேறு இடங்களிலிருந்த ஏழு மாமரங் களையும் துளைத்துச் செல்லுமாறு செய்தான். பகவனுடைய பராக்கிரமம் சுக்ரீவனுக்கு அப்போதுதான் தெரிந்தது. அன்று முதல் அவன் இராமனிடம் பயபக்தி யுடன் இருந்து வந்தான்.

இராமன் சுக்ரீவனை அனுப்பி, வாலியை யுத்தத்துக்கு அழைக்கச் செய்தான். இருவரும் போரிட்டனர். அப்போது இராமன் மறைந்திருந்து வாலியின் மீது அம்பெய்தி அவனைக் கொன்றான். இராமன் வாலியை மறைந்திருந்து கொன்றது அந்த அவதாரத்துக்கு ஒரு களங்கம் என்று சிலர் வாதிப்பர். அதைப் பற்றி விளக்குவதற்கு இச்சிறிய நூல் இடந்தராதாகையால் அதை வாசகர்களின் தீர்ப்புக்கே விட்டுச் செல்கின்றேன். வாலியின் மைந்தன் அங்கதன்; வாலி இறக்கும் தறுவாயில் தன் மகனை இராமனுடைய பாதுகாவலில் வைத்துக் கொள்ளுமாறு வேண்டினான்.

சுக்ரீவன் கிஷ்கிந்தை மன்னனாக முடிசூட்டப் பெற்றான். இதற்குக் கைமாறாக சுக்ரீவன் சீதையைத் தேட உலகின் பல பாகங்களுக்கும் வானரர்களை அனுப்புவ

தாக ஒப்புக் கொண்டான்; அப்போது மழைக் காலம்; ஆகவே மழைக் காலம் முடிந்ததும் வானரர்களை அனுப்ப லாமென்று முடிவு செய்தனர்.

மழைக் காலம் முடிந்தது. ஆனால் சுக்ரீவன் தான் சொன்ன சொல்லை மறந்துவிட்டான். மதுவிலும் மங்கை யிலும் மூழ்கிப் போனான். குறித்த காலத்தில் சுக்ரீவன் வராமையால் இராமன் கோபமுற்று இலக்குவனை அனுப்பி னான். அவ்வாறே இலக்குவன் சென்று சுக்ரீவனுக்கு எச்சரிக்கை செய்தான். மயக்கம் தெளிந்து சுக்ரீவன் ஓடோடி வந்து இராமனுடைய பாதங்களில் விழுந்து வணங்கினான் தன்னை மன்னிக்க வேண்டினான்.

**அனுமன் :**

ஜானகியைத் தேடி வானரர்கள் நாற்புறமும் சென்றனர். தெற்குத் திசையை நோக்கி அனுமான், நீலன், ஜாம்பவான், அங்கதன் ஆகியோர் சென்றனர். அங்கதன் தலைமை தாங்கிச் சென்றான். பல இடங்களில் தேடிப் பார்த்து இறுதியில் மகேந்திர மலையை அடைந்தனர். அருகில் ஜடாயுவின் சகோதரன் சம்பாதி இருந்தான். இவர் களுடைய விசனத்தை அறிந்து, ''வானர வீரர்களே! சீதையை இராவணன் இலங்கையில் சிறை வைத்திருக் கிறான். அனுமானை அனுப்பிக் கடலைத் தாண்டச் செய்து இலங்கையில் சீதை இருக்குமிடத்தை அறிந்துவரச் செய்யுங்கள்'' என்றான்.

அவ்வாறே சென்றுவர அனுமன் புறப்பட்டான். பகவானிடம் கொண்டிருந்த பக்தியால் பேருருக் கொண்டு, சமுத்திரத்தைத் தாண்டி, இலங்கையை அடைந்து தேவி யைத் தேடினான்.

**அசோகவனம் !**

அசோகவனத்தில் ஜானகி கண்ணீரும் கம்பலையுமாக இராமபிரானை நினைத்து வருந்திக் கொண்டிருப்பதை அனுமன் கண்டான். அருகில் இருந்த காவற் பெண்கள்

தூங்கும் நேரத்தில் தேவியை நெருங்கிப் பணிந்தான். ''தாயே, நான் இராமதூதன். என் பெயர் அனுமான். தங்களைத் தேடிக் கண்டறிய கடலைக் கடந்து வந்துள்ளேன். அடையாளமாக இராமபிரான் கொடுத்தனுப்பிய கணையாழி இதோ உள்ளது. பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று மிக வினயமாகக் கூறினான்.

எம்பெருமானுடைய மோதிரத்தை வாங்கி, கண்களில் ஒற்றிக் கொண்டாள். கணவனைக் கண்டது போன்று மகிழ்ந்தாள். ''அனுமானே! இதோ இந்த சூடாமணியைக் கொண்டு போய் அவரிடம் கொடு. நான் இருக்கும் துன்ப நிலையை அவரிடம் விவரமாய் சொல்; விரைவில் வந்து என்னை மீட்டுப் போகுமாறு நான் கேட்டுக் கொண்டதாக அவரிடம் சொல்'' என்று செய்தி சொல்லியனுப்பினாள் ஜானகி.

இராவணனுடைய நிலையையும் அறிந்து போக வேண்டுமென்று அனுமான் எண்ணினான். பாதுகாவலோடு கூடிய அசோகவனத்தை அழிக்கத் தொடங்கினான். இராவணனுக்குச் செய்தி எட்டியது. படையினரை அனுப்பினான். அனுமன் அவர்களை நொடிப் பொழுதில் அழித்துவிட்டான். அதனால் சீற்றமடைந்த இந்திரஜித்து போருக்கு எழுந்தான். பிரம்மாஸ்திரத்தால் அனுமனைக் கட்டி இழுத்துச் சென்று தந்தையின் முன் நிறுத்தினான்.

**இலங்காதகனம் :**

''அத்துமீறி புகுந்து அட்டகாசம் செய்யும் நீ யார்?'' என்று சீற்றத்துடன் கேட்டான் இராவணன். ''நான் இராம தூதன்; சுக்ரீவனுடைய மந்திரி; என் பெயர் அனுமான்; நான் வாயுவின் மைந்தன். தேவியை அசோக வனத்தில் கொண்டு வந்து வைத்திருப்பது உன் மூட புத்தியைக் காட்டுகிறது. இனி தாமதியாமல் தேவியை அழைத்துச் சென்று, ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தியிடம்

சேர்ப்பித்து உன்னை மன்னிக்குமாறு வேண்டிக் கொள்; அவர் அருள் செய்வார்'' என்று அனுமன் தூதுரைத்தான்.

காமத்தால் கண்ணிழந்த இராவணனுக்கு இந்த நல்லுரைகள் ஏறுமா? அனுமானைக் கொன்றுவிடுமாறு உத்திரவிட்டான். அருகில் இருந்த விபீஷணன், ''அண்ணா, அது தகாத காரியம்; தூதராக வந்தவரைக் கொல்வது தர்ம விரோதம்'' என்று சொன்னான்.

''அப்படியானால் அனுமானுக்கு ஏதாவது அவமானம் செய்து அனுப்பினால் போதும்; அவன் வாலில் துணியைச் சுற்றி தீ வைத்து அடித்து விரட்டுங்கள்'' என்று கட்டளை யிட்டான் இலங்கேஸ்வரன். அனுமன், வாலில் எரியும் தீயைக் கொண்டே இலங்கையை எரித்துவிட்டு, மகேந்திர மலைக்குத் திரும்பினான். பின்னர் அனைவரும் சேர்ந்து இராமபிரானை அடைந்தனர். ''தேவி இலங்கையில் இராவணனால் சிறை வைக்கப்பட்டிருக்கிறார். தாங்கள் கொடுத்த கணையாழியை அவரிடம் கொடுத்தேன். அவர் கொடுத்த சூடாமணி இதோ இருக்கிறது. பாருங்கள். விரைவில் வந்து தன்னை மீட்டுச் செல்லுமாறு வேண்டி னார்கள்'' என்று அனுமன் கூறினான்.

சூடாமணியைக் கண்டதும் இராமனின் கண்களில் நீர் பெருகியது. சீதையின் நிலையை எண்ணி மனம் வருந்தி னார். சுக்ரீவனை அழைத்து, ''யுத்தத்திற்குத் தயாராகுங் கள்'' என்றார். வானர சைனியம் திரண்டது. சுபவேளை யில் படை கிளம்பியது. சமுத்திர தீரத்தை அடைந்தது; வானர வீரர்கள் மலைகளையும் பாறைகளையும் கொண்டு வந்து கடலில் இட்டு இலங்கைக்குச் செல்ல பாலம் அமைத்தனர். அதன் வழியே இராமபிரானும் வானர வீரர் களும் இலங்கையை அடைந்தனர்.

## விபீஷண சரணாகதி.

அசுர குலத்தில் பிறந்த போதிலும் விபீஷணன் தன் தமயன் செய்தது தர்மத்துக்கு விரோதமானது என்பதை அறிந்தான். அண்ணனுக்குப் பல நீதிகளை எடுத்துக் கூறினான். ''அண்ணா, இவ்வளவு உயர்ந்த பதவிகளை உனக்குச் சர்வேஸ்வரன் அருள் செய்திருக்கிறார்; நீ செய்வது தகாத காரியம். அயலான் மனைவியிடம் விருப்பம் கொள்வது தகாது என்பதைச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. சீதையின்மீது நீ கொண்டிருக்கிற ஆசையை விட்டுவிடு; இராமபிரானுடைய பிரதாபத்தை அறிந்த பின்பும் நீ பிடிவாதம் செய்கிறாய், பலசாலியான வாலியை ஒரு பாணத்தால் வீழ்த்திவிட்ட அந்த இராமச்சந்திர மூர்த்தியின் கோபத்திற்கு ஏன் ஆளாகிறாய்? சீதையை அழைத்துச் சென்று ஸ்ரீராமனிடம் விட்டுவிடு. அதனால் நீயும் பிழைப்பாய்; உன் குலமும் அழியாதிருக்கும். உனக்கு விருப்பம் இல்லையென்றால் எனக்கு அனுமதி கொடு. உன் பொருட்டு நான் தேவியை அழைத்துச் சென்று எம்பெருமானிடம் ஒப்படைத்து விட்டு உனக்கு மன்னிப்பையும் பெற்றுத் தருகிறேன்'' என்று வேண்டி நின்றான் விபீஷணன்.

இதைக் கேட்ட இராவணன் இடியைப் போன்று கர்ஜித்தான். விபீஷணனை எள்ளி நகையாடினான். ''குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பே'' என்று தூற்றினான்.

அண்ணனைத் திருத்த முடியாது என்று அறிந்த விபீஷணன் அங்கே தங்கவில்லை. அங்கிருந்து புறப்பட்டு இராமபிரானை அடைந்து அவரிடம் சரண் அடைந்தான். விபீஷணனுடைய உள்ளத்தை அறிந்த ஸ்ரீராமன் அவனை மலர்ந்த உள்ளத்தோடு வரவேற்றுச் சகோதரனாக ஆக்கிக் கொண்டார். கடற்கரையிலேயே இலங்கையை விபீஷணனுக்கு அளித்து முடிசூட்டி வைத்தார்.

## அங்கதன் தூது :

வானர சேனைகளின் பலத்தை அறிந்துவர இராவணன் இரு ஒற்றர்களை அனுப்பி வைத்தான். அவர்களும் அவ்வாறே சென்று வந்து, விவரம் தெரிவித்தனர். அரண்மனையின் மேல்மாடியில் இராவணன் நின்றவாறு, ஒற்றர்கள் கூறுவதைக் கேட்டுக் கொண்டு முக்கியத் தலைவர்கள் எங்கெங்கு இருக்கிறார்கள் என்பதைக் கவனித்தான்.

சுக்ரீவன், இராவணன் நின்றிருப்பதைக் கண்டான். அவன் உள்ளம் கொதித்தது. திடீரென்று பாய்ந்தான். இராவணனை நெருங்கித் தாக்கினான். அவனுடைய முடியைக் கவர்ந்து வந்து இராமனுடைய பாதங்களில் சமர்ப்பித்தான்.

யுத்தம் தொடங்குமுன் கடைசி முறையாக, இராவணன் மனம் மாறுபடுமா என்பதைக் காண இராமன் அங்கதனைத் தூது அனுப்பினார். இராவணன் சீதையை விடுவிக்க முடியாது என்று மறுத்துவிட்டான். யுத்தம் மூண்டது.

## இராம இராவண யுத்தம்

இரு பக்கத்து சேனைகளும் அணிவகுத்து நின்றன. வானர சேனைகள் அரக்கர்களைத் துவம்சம் செய்தனர். இராவணன் தானே போர்க்கோலம் பூண்டு ஸ்ரீராமபிரானை எதிர்த்தான். இராமபிரான் அவனுடைய தேரைத் தவிடு பொடியாக்கி, சேனையை நிர்மூலம் செய்து வில்லை அறுத்துத் தனியே யுத்த களத்தில் தலை குனிந்து நிற்கச் செய்தார். "இன்று நீ ஊர் திரும்பு; நாளைய தினம் புதிய படைகளோடு போர் செய்ய வா" என்று தெரிவித்தார்.

இராவணனுக்கு அவமானம் பொறுக்க முடியவில்லை. அரக்கர் சேனையை ஒன்று திரட்டினான். மறுநாள் தன் தம்பி கும்பகர்ணனை யுத்தத்துக்கு அனுப்பினான்.

கும்பகர்ணன் கடும்போர் புரிந்து மாண்டான். தன் மகன் அதிகாயனை அனுப்பினான். அவன் வானர சேனைகளால் மாண்டான். இந்திரஜித்து பெரும் சீற்றத்துடன் யுத்தத்தில் இறங்கினான். நாக பாசத்தால் இலக்குவனையும் மற்ற வானர வீரர்களையும் கட்டுவித்தான். கருடன் நேரில் வந்து அந்தப் பாசத்தை அறுத்து அவர்களை விடுவித்தான்.

மீண்டும் இந்திரஜித்து அவர்களை பிரம்மாஸ்திரத்தால் கட்டினான். அனுமான், ஜாம்புவான் என்னும் சிலரைத் தவிர இலக்குவன் உட்பட வானர சேனை முழுவதும் பிரம்மாஸ்திரத்தால் மயங்கி விழுந்தனர். அனுமான் விரைந்து சென்று சஞ்சீவி மலையைக் கொண்டு வந்தான். அதன் மூலம் அனைவரும் பிழைத்து எழுந்தனர்.

இந்திரஜித்து இதற்கிடையில் எவராலும் வெல்ல முடியாத தேர் ஒன்றைப் பெற இரகசிய இடம் ஒன்றில் நிகும்பலை என்னும் யாகத்தைச் செய்யத் தொடங்கினான். அதை அறிந்த விபீஷணன் இலக்குவனை அழைத்துச் சென்று யாகத்தைத் தடுத்து, இந்திரஜித்தையும் வதம் செய்யச் செய்தான்.

இந்திரஜித்தும் மாண்டான் என்ற செய்தி இராவண னைக் கதிகலங்கச் செய்தது. அந்த நேரத்திலும் அவன் பணிந்து போகவில்லை. மூலபலத்தைத் திரட்டிக் கொண்டு யுத்தத்துக்கு வந்தான். யுத்தத்தில் இராமன் தம்முடைய பாணத்தால் இராவணனைக் கொன்றார். தேவர்கள் மகிழ்ந்தனர்! மலர்மாரி பெய்தனர். இராமன் விபீஷண னுக்குச் சிரஞ்சீவி பதவியளித்து இலங்கை மன்னனாக முடி சூட்டினார்.

**நாடு திரும்புதல் :**

பின்னர் சீதையுடன் புஷ்பக விமானத்தில் ஏறி அனைவரும் புறப்பட்டனர். கிஷ்கிந்தையிலும் பரத்வாஜர் ஆசிரமத்திலும் சிறிது நேரம் தங்கிய பிறகு அவர்கள்

அயோத்தியை அடைந்தனர். இராமனின் வரவை அறிந்த பரதன், மக்கள் புடைசூழ எதிர்கொண்டு வந்து வர வேற்றான். சிம்மாசனத்தில் அமர்த்தினான். வசிட்டர் முதலான முனிவர்கள் இராமனைப் புனித தீர்த்தங்களால் நீராட்டி அவனுக்கு முடிசூட்டினர். அயோத்தி நகரம் மகிழ்ந்தது.

வைகுண்டத்தில் பரந்தாமனுக்குத் துவார பாலர்களாக இருந்த ஜயவிஜயர்கள் இராவண கும்பகர்ணர்களாக தங்களுடைய இரண்டாவது ஜன்மத்தை எடுத்து பகவானால் சம்கரிக்கப்பட்டனர்.

அயோத்தியில் இராமபிரான் மனைவியுடனும் தம்பி மார்களுடனும் அறநெறி வழுவாமல் அரசாட்சி செய்து வந்தார். மக்களும் மற்ற உயிரினங்களும் பயமின்றி இன்பமாய் வாழ்ந்து வந்தனர்.

## உத்தர ராமாயணம்

ஒரு நாள் இரவு இராமபிரான் மாறுவேடத்தில் நகர் வலம் வந்து கொண்டிருந்தனர். கணவனிடம் கோபித்துக் கொண்டு பிறர் வீட்டில் சிறிது காலம் தங்கிவிட்டு வந்திருந் தாள் அவள். அவளை ஏற்றுக்கொள்ள இயலாதென அவன் விரட்டினான்:

"வெட்கமில்லாதவளே, என்னை யாரென்று நினைத் தாய்? அன்னியன் வீட்டில் இருந்த சீதையை ஏற்றுக் கொண்ட இராமன் எனநினைத்தாயா?" எனக் கடிந்துரைத் தான் அவன்.

இச் சொற்கள் இராமனின் காதில் தீப்போல் சுட்டன. அவர் இதைப் பற்றிச் சிந்தித்தார். உலக அபவாதத்துக்கு அஞ்சி கர்ப்பிணியாயிருந்த சீதையைக் காட்டில், கொண்டு போய்விடச் செய்தார். மிகுந்த துன்பத்தோடு வனத்திற்கு வந்த சீதையை வால்மீகி முனிவர் தம் ஆசிரமத்தில் ஏற்றுப்

பாதுகாத்து வந்தார். அவளுக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறந்தனர். குசன் என்றும், லவன் என்றும் அவர்களுக்கு பெயரிட்டு வளர்த்து வந்தார் முனிவர்.

**லவ குசா :**

வால்மீகி முனிவர் இராமபிரானுடைய சரிதத்தை இராமாயணம் என்ற பெயரில் இயற்றி அதை லவ குசாக் களுக்குச் சொல்லி வைத்தார். இருவரும் அதை ஒருநாள் இராமனுடைய சபையில் பாடினர்.

இராமன் அஸ்வமேத யாகம் ஒன்று செய்தார். தங்கத் தால் சீதைபோல உருவம் அமைத்து, யாகசாலையில் அதை தன் அருகில் அமர்த்தி யாக காரியங்களைக் கவனித்தார். யாக குதிரை எல்லா நாடுகளுக்கும் சென்று வெற்றிப் பிரதாபத்துடனும் பொற்குவியலுடனும் திரும்பி வரும் போது வால்மீகி முனிவரின் ஆசிரமத்தின் வழியாக வர நேர்ந்தது. சிறுவர்கள் இருவரும் யாகக் குதிரையைப் பிடித்துக் கட்டிவிட்டனர். அதை மீட்டுச் செல்ல முதலில் இலக்குவன் வந்தான். சிறுவர்களுடைய ஆற்றலுக்கு ஆற்றாமல் திரும்பிச் சென்றான். அதன் பின்னர் இராம பிரானே வர நேர்ந்தது.

அப்போதுதான் சீதையையும் சிறுவர்களையும் சந்தித்து அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். சீதை தான் கற்பில் இருந்து பிறழவில்லை என்பதை அனைவருக் கும் எடுத்துக் காட்ட விரும்பினாள். ''நான் கற்புத் தன்மையிலிருந்து கொஞ்சமும் வழுவாது இருந்து வருவது உண்மையானால் பூமிதேவி என்னை அழைத்துக் கொள் ளட்டும்'' என்று தெரிவித்தாள். உடனே பூமி இரண்டாகப் பிளந்தது. கீழிருந்து பூமாதேவி வெளிப்பட்டு, சீதையைத் தன் கைகளில் ஏந்தியவளாய் சென்று மறைந்தாள்.

தன் விருப்பத்திற்கு மாறாக தேவியைத் தம்மிடமிருந்து பிரித்துச் சென்றுவிட்டாள் என்று இராமன் பூமாதேவியின் மீது கோபங் கொண்டார். அப்போது பிரமதேவன் அங்குத் தோன்றி அவரைச் சமாதானப்படுத்தி, "தேவியின் பூலோகவாசம் முடிந்து விட்டது; ஆதலால் அவள் வைகுந்தம் சென்று பகவானுடைய வரவை எதிர் நோக்கிக் காத்து இருக்கிறாள்" என்று தெரிவித்தார். அதன் பின்னர் இராமபிரான் சாந்தமடைந்தார்.

இராமபிரான் பல ஆண்டுகள் ஆட்சி செய்து வந்தார். பின்னர் தம் புத்திரர்களுக்கும் சகோதரர்களுடைய புத்திரர்களுக்கும் அரசைப் பகிர்ந்து அளித்தார். தான் உலக வாழ்விலிருந்து விடை பெற வேண்டி இராமபிரான் சரயூ நதியில் இறங்கி வைகுந்தத்தை அடைந்தார். அவரைத் தொடர்ந்து சங்கு சக்கரங்களின் அம்சங்களான சத்ருக்கனும் பரதனும் ஆதிசேஷனான இலக்குவனும் பூலோகத்தை விட்டு வைகுந்தம் சேர்ந்தனர்.

## வாசகர்களுக்கு :

பன்னிரு ஆழ்வார்களுள் குலசேகராழ்வார் ஒருவர். அவர் சேர மன்னர். இராம பக்தர். நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் இவருடைய பாடல்கள் 105 உள்ளன. அவை யாவும் இராமவதார சிறப்பைக் குறிப்பனவாகும். அவற்றுள் இரண்டு பாடல்களைக் கீழே காணலாம்.

## முதற் பகுதி

719 முதல் 729 வரையுள்ள 11பாடல்களும் திருக்கண்ண புரம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள இராமனைச் சிறு குழந்தையாக பாவித்து, கோசலை தாலாட்டுக் கூறுவது போல அமைந்து உள்ளன. பிள்ளைத்தமிழ் பிரபந்தத்தில் இதைத் தாலப்பருவம் எனக் கூறுவர்.

இவற்றை மனப் பாடஞ் செய்து தாய்மார் குழந்தைகளைத் தாலாட்டலாம். இனிமையாக இருக்கும். இராமாயண நிகழ்ச்சிகள் யாவும் இந்த 11 பாடல்களில் அமைந்துள்ளன.

### கொச்சகக் கலிப்பா

**மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே**
**தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்து வித்தாய்**
**செம்பொன் சேர்**
**கன்னிநன்மா மதின் புடை சூழ் கணபுரத் தென் கருமணியே**
**என்னுடைய இன்னமுதே இராகவனே தாலேலோ —719**

—குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி

## இரண்டாம் பகுதி

741 முதல் 751 வரையுள்ள 11 பாடல்களும் தில்லை நகர் திருச்சித்திர கூடத்தில் தொல்லிராமனாய் தோன்றிய கதை முறை. இந்தப் பதினோரு பாடல்களில் இராமாயண நிகழ்ச்சிகள் யாவும் அடங்கியுள்ளன. இந்தப் பாடல்களை மனப்பாடஞ் செய்து கொண்டால் இராமபிரானை வழிபடு தெய்வமாகத் துதிப்பதற்கு ஏற்றதாக இருக்கும்.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

**அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தி யென்னும்**
**அணிநகரத்து உலகனைத்தும் விளக்கும் சோதி**
**வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி**
**விண்முழுதும் உயக் கொண்ட வீரன் தன்னை,**
**செங்கணெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்**
**தில்லை நகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள்**
**எங்கள் தனி முதல்வனை எம்பெருமான் தன்னை**
**என்று கொலோ கண்குளிரக் காணும் நாளே —741**

—குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி.

## பஜனை

கிராமங்களில் பஜனைக் கூடங்களைக் காணலாம். அவை பெரும்பாலும் இராமனையே குறிப்பனவாக உள்ளன. தமிழ் நாட்டில் தியாகய்யர் இராமனைக் குறித்து தெலுங்கு மொழியில் பல கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். அருணாசலக் கவிராயர் இராம நாடக கீர்த்தனை என்ற நூலைப் பாடியுள்ளார். இப்பாடல்கள் பஜனை மடங்களில் பாடப்படும். பிருந்தாவனம் என்னும் ஆடிப்பாடும் கூத்தும் உண்டு.

சகல ஐஸ்வரியங்களையும் பூர்ண ஆயுளையும் கொடுக்கும் நமது இஷ்ட தெய்வத்தின் குணங்களையும் பெருமைகளையும் கூறி, ஆடிப் பாடுவதுதான் பஜனை எனப்படும். இச்சொல் பஜன் என்னும் வடமொழிச் சொல்லிலிருந்து வந்தது எனலாம். பக்தி, பாவம், ராகம், தாளம், சுருதியுடன் மாசறக் கற்ற பெரியவர்கள் மத்தியில், நேரம், காலம், வீடு, மனை, மக்கள், சுற்றம், பந்தம், கவலை அனைத்தையும் மறந்து செய்வதே பஜனையாகும்.

நமக்குப் பல உதவிகளைச் செய்யும் பரமாத்தாவிற்கு நன்றிக் கடன் செலுத்தி கண்ணீர் மல்க நாம் ஆடிப்பாடும் செயலே பஜனை. இக்கலியுகத்தில் மிகச் சிறந்த முக்தி தரும் மார்க்கம் பஜனை ஒன்றுதான். இதேபோல் சைவர்களும் தேவார திருவாசங்களைப் பாடி வழிபடுவார்.

## ஆஞ்சநேயர்

ஆஞ்சநேயரை நம் நாட்டில் அனுமன் என்றும், கர்நாடகத்தில் அனுமந்தையா என்றும், ஆந்திராவில் ஆஞ்சநேயலு என்றும், மகாராஷ்டிரத்தில் மாருதி என்றும் கொண்டாடுகிறார்கள். வட நாட்டில் மகாவீர் என்று போற்றுவர். கம்பநாட்டாழ்வார், இவரைச் சொல்லின்

செல்வன் என்று பாராட்டுவர். இவர் சகலகலா சம்பன்னர்; சாதுர்யமாகப் பேச வல்லவர்; இவரை இராமபிரானே கண்டு வியக்கின்றார்.

அனுமார் இராம பக்தர். இராமாயணம் படிக்கிற இடங்களில் எல்லாம் இவர் அங்கிருந்து கேட்கின்றார் என்பது ஆன்றோர் கொள்கை. இவருடைய சிறப்பு அளவிடற்கரிது. இவரை வணங்குகிறவர்கள் புத்தி, பலம், புகழ், உறுதிப்பாடு, அஞ்சா நெஞ்சம், ஆரோக்கியம், விழிப்பு, வாக்குவன்மை ஆகியவற்றைப் பெறுவார்கள்.

அனுமன் இராமபிரானுடைய பரம பக்தனாக இருந்து கொண்டே பரம ஞானியாகவும் இருக்கின்றார். குரு க்ஷேத்திர பூமியில் அருச்சுனனின் தேர்க் கொடியில் இருந்து கொண்டு கீதோபதேசத்தை நேரில் கேட்டவர் இவர். ஒன்பது வியாகரணமும் தெரிந்த 'நவ வியாகரண வேத்தா' என்று இராமச்சந்திரனே புகழ்கின்ற கல்விமான்.

இவையனைத்திற்கும் மேலாக இவர் ஒரு பிரமச்சாரி; காமம் என்ற நினைப்பே வராதவர். தனக்கென்று எதையும் நினைக்காமல் இராம சேவையில் நிறை குணம் பெற்றவர். உள்ளன்போடு இந்தச் சிறிய திருவடியை வணங்கி எல்லா நலன்களையும் பெறுவோமாக.

## இராமாயண காப்புச் செய்யுள்

**அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத்தாவி**
**அஞ்சிலே ஒன்று ஆறாக ஆரியற் காக ஏகி**
**அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண் டயலார் ஊரில்**
**அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவனெம்மை அளித்துக் காப்பான்**

—கம்பர்.

வாயு புத்திரனாகிய அனுமான், நீர்ப்பரப்பாகிய கடலைத் தாண்டி ஆகாயத்தையே தனக்கு வழியாகக் கொண்டு இராமபிரானுக்காக இலங்கை சென்று, பூமி

தேவியின் அம்சமாக பூமியில் தோன்றிய சீதா பிராட்டி யைக் கண்டு, அயலார் ஊராகிய இலங்கை மாநகரில் தீயை வைத்தான். அவன் எம்மைக் காப்பானாக என்று முதற்கண் கூறி, கம்பர் இராம்ாயணத்தை எழுத ஆரம் பிக்கிறார்.

# 11 கிருஷ்ணாவதாரம்

## முன்னுரை

பகவான் எடுத்த பத்து அவதாரங்களுள் கிருஷ்ணாவ தாரம் பரிபூர்ண அவதாரம் என்று கூறுவர். யாதவ குலத்தில் பிறந்து, துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்தவன் கிருஷ்ணன். அதாவது கம்சன், சிசுபாலன் போன்ற துஷ்டர்களை சம்காரம் செய்தான். தன்னையே சதமென நம்பி, கோவிந்தா, கோவிந்தா என்று அலறிய திரௌபதிக்கு மென்மேலும் ஆடை பெருகச் செய்து மான சம்ரட்சணம் செய்தான்.

பாண்டவர்களுக்குத் தூது சென்றான். பார்த்தனுக்குச் சாரத்தியம் செய்தான். அவனுக்கு கீதாஉபதேசம் செய்தான். பூமி பாரம் தீர்த்தான். அந்தப் பரமனையே ஆழ்வார்கள் பலவாறு பாடி, வழிபட்டு, பரமபதம் பெற்றனர். நம் நாட்டின் ஜீவ நதிகள் போன்று மக்களை நல்வழிப்படுத்துவன இராமாயணமும் மகாபாரதமும் ஆகிய இரண்டு இதிகாசங்கள். இராமாவதாரச் சிறப்பை முன் பகுதியில் கண்டோம். இப்போது கிருஷ்ணாவதாரச் சிறப்பைக் காண்போம்.

நவரத்தினமாலை போன்ற மகாபாரதம் என்னும் காவியத்தில் பொற்சரடு போல, காவியம் முழுவதும் ஊடுருவிச் செல்லும் பாத்திரம் கிருஷ்ணன். அவனது

திவ்விய கல்யாண குணங்களை ஆங்காங்கே கூறிச் செல்வோமாக அவன் எட்டாவது குழந்தையாகப் பிறந்தவன். எட்டு மனைவியரை மணந்தவன். நம் நாட்டில் எட்டாவது குழந்தையாகப் பிறப்பவருக்குக் கிருஷ்ணன் என்று பெயரிட்டு வழங்குவது கண்கூடு.

## சிலப்பதிகாரம்

**மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்**
**கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்**
**படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது**
**நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே**
**நாராயணா வென்னா நாவென்ன நாவே.**

—படர்க்கைப் பரவல்.

வில்லிபுத்தூர் ஆழ்வார் தமிழில் மகாபாரதத்தை 4351 விருத்தப் பாடல்களாகப் பாடியுள்ளார். சந்த விருத்தங்கள் படித்து இன்புறத் தக்கன. அவர் இந்நூலை இயற்றுதற்குரிய காரணங்களைத் தற்சிறப்புப் பாயிரத்தில் கூறுகின்றார்.

''தேவியாசரும், தேவரும், மற்றையோரும் மகாபாரதத்தின் சிறப்பைப் புகழ்ந்து பாடியுள்ளனர். எனினும் திருமாலின் எட்டாவது அவதாரமாகிய கண்ணபிரானின் சரிதம் இதில் இடை இடையே வழங்குகிறது என்னும் ஆசையால் யானும் இந்நூலைப் பாடுவதற்கு இசைந்தேன்'' என்கிறார். இனி அப்பாடலைக் காண்போம்.

## தற்சிறப்புப்பாயிரம்

**முன்னு மாமறை முனிவரும் தேவரும் பிறரும்**
**பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்**
**மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்**
**என்னும் ஆசையால் யானுமீது இயம்புதற் கிசைந்தேன்.**

**ஊர்வலம் :**

யது வம்சத்தில் பிறந்த வசுதேவர் தேவகனுடைய பெண்ணான தேவகியை மணந்து கொண்டார். புதுமணத் தம்பதிகள் இருவரும் தங்களுடைய அரண்மனைக்குச் செல்ல கல்யாண கோலத்தோடு தேரில் ஏறிப் புறப்பட்டனர். தேவகனுடைய பிறந்த உக்கிரசேனன் தேவகிக்குத் தன் அன்பைக் காட்டும் வகையில் ஏராளமான சீதனப் பொருள்களைக் கொடுத்துக் கௌரவித்தான்.

உக்கிரசேனனுடைய மகன் கம்சன் சகோதரியிடம் மிகுந்த பிரியம் உடையவன். அவளைப் புருஷன் வீட்டுக்குத் தானே தேரோட்டிச் சென்று, விட்டு வருவதாகக் கூறித் தேரில் ஏறினான்.

ஊர்வலம் பெரும் கோலாகலத்தோடு சென்று கொண்டிருந்தது. கம்சன் தேர்த்தட்டில் அமர்ந்து குதிரைகளை ஓட்டிச் சென்றான். அப்போது அசரீரி ஒன்று எழுந்தது. "ஏ, கம்சா! அடே மூடனே! நடக்கப் போவதை அறியாமல் நீ சந்தோஷமாய் தேரோட்டுகிறாய். இவளுடைய கருப்பத்தில் பிறக்கப் போகும் எட்டாவது குழந்தையால் நீ மரணம் அடையப் போகிறாய்!" என்று கூறிற்று.

அசரீரி கூறியதைக் கேட்ட கம்சன் கையில் பிடித்திருந்த லகானை வீசி எறிந்தான். பெருங்கர்ச்சனை செய்து உடைவாளை உருவினான். தேவகிமீது பாய்ந்தான். அவளை வெட்டுவதற்காக வாளை ஓங்கினான்.

வசுதேவர் துணுக்குற்றார். கம்சனைத் தடுத்து, "கம்சா, அவசரப்படாதே. இந்தப் பாபத்தைச் செய்யாதே. நான் சொல்வதைக் கேள். தேவகியின் வயிற்றில் பிறக்கப் போகும் எட்டாவது குழந்தைதானே உன்னைக் கொல்லப் போகிறது. அப்படியிருக்க தேவகியைக் கொல்வானேன்? நான் உனக்கு ஒரு வாக்குறுதி தருகிறேன். எங்களுக்குப்

பிறக்கும் குழந்தைகளைப் பிறந்த உடனே உன்னிடம் ஒப்படைத்து விடுவேன். எங்களை வாழ விடு'' என்று வேண்டினார்.

கம்சனுக்கு அது நியாயமாகத் தோன்றியது. கோபம் தணிந்து, ஊர்வலத்தைத் தொடர்ந்து நடத்தினான். திருமணத் தம்பதிகளை அவர்களுடைய அரண்மனையில் கொண்டு போய் சேர்த்துவிட்டுத் திரும்பினான். நாட்கள் நகர்ந்தன. தேவகி கருவுற்றாள். முதலில் ஆண் குழந்தையே பிறந்தது. வசுதேவர் அதைக் கம்சனிடம் எடுத்துச் சென்றார்.

## வசுதேவரின் மகிமை

வசுதேவருடைய நேர்மையைக் கண்ட கம்சன், ''மைத்துனரே! இந்தக் குழந்தையை எடுத்துச் செல்லுங்கள். இவனால் எனக்கு மரணமில்லை. உங்களுக்குப் பிறக்கப் போகும் எட்டாவது குழந்தையால் அல்லவா எனக்கு ஆபத்து'' என்றான்.

குழந்தையை அன்பாய் வாரியணைத்துக் கொண்டு, வசுதேவர் வீடு திரும்பினார். அதன் பின்னர் ஒன்றன் பின் ஒன்றாக ஐந்து குழந்தைகள் பிறந்தன. வசுதேவர் ஒவ்வொரு தடவையும் தவறாமல் கம்சனுக்குத் தகவல் அளித்து வந்தார்.

நாள் நெருங்க நெருங்க கம்சனுக்கு அச்சம் அதிகரித்தது. இதற்கிடையில் ஒருநாள் நாரதர் அவனுக்கு நேர இருக்கும் ஆபத்தை நினைவூட்டிச் சென்றார். கம்சன் தந்தையிடமிருந்து அரசை அபகரித்துக் கொண்டு தானே அரசனாக அறிவித்துக் கொண்டான்.

**சிறைவாசம் :**

வசுதேவரையும் தேவகியையும் வஞ்சகமாகத் தன் அரண்மனைக்கு அழைத்து வந்து, அவர்களுக்கு விலங்கிட்டு, சிறையில் அடைத்தான். முதலில் பிறந்த ஆறு குழந்தை களையும் இரக்கமின்றிக் கொன்றுவிட்டான்.

இந்தச் சமயத்தில் தேவகி ஏழாவது முறையாகக் கருப்ப முற்றாள். ஆதிசேஷனுடைய அம்சம் அவள் வயிற்றில் வளரத் தொடங்கியது. வசுதேவர் பெரிதும் வருந்தினார்.

வைகுந்தலத்தில் ஸ்ரீமன் நாராயணன் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனத்துக்காகத் தாம் பூமியில் அவதரிக்க வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டதை உணர்ந்தார். தம்முடைய யோக மாயையை அழைத்தார். ''தேவி, வட மதுரையில் கம்சனுடைய கொடுமை அதிகமாகிவிட்டது. வசுதேவர் கம்சனுக்குப் பயந்து தம் மனைவி ரோகிணியை அவனுக்குத் தெரியாமல் கோகுலத்து அரசனான நந்த கோபருடைய அரண்மனையில் ஒளித்து வைத்திருக்கிறார். மதுரை சிறைச்சாலையில் தேவகியின் கர்ப்பத்தில் ஆதிசேஷன் அம்சமாகக் குழந்தை வளர்ந்து வருகிறது. நீ அக்குழந்தையை ரோகிணியின் கர்ப்பத்திற்கு மாற்றிவிடுவ தோடு நந்தகோபருடைய பத்தினியான யசோதைக்குப் பெண்ணாகப் பிறக்க வேண்டும். நான் தேவகியின் திரு வயிற்றில் அவதரிக்கப் போகிறேன். உன்னை மக்கள் பூஜிப் பார்கள்'' என்றார்.

பகவானுடைய கட்டளைப்படி மாயாதேவி தேவகியின் கர்ப்பத்திலிருந்த ஏழாவது குழந்தையை ரோகிணி கர்ப்பத் திற்கு மாற்றிவிட்டு, யசோதையின் வயிற்றில் தான் வளர்ந்து வரலானாள். தேவகியின் ஏழாவது கர்ப்பம், சிதைந்து விட்டது என்ற செய்தி கம்சனுக்குத் தெரிவிக்கப் பட்டது.

சிறிது காலம் கழித்து, தேவகி கர்ப்பமுற்றாள். அதைக் கேள்வியுற்று, கம்சன் நடுங்கினான்.

## கிருஷ்ண ஜயந்தி :

காவலர்களுக்குக் கடுமையான உத்திரவுகளைப் பிறப்பித்தான். தேவகி வசுதேவர் இருவருடைய கைகளும் கால்களும் விலங்கிடப்பட்டன. அவர்களைக் கண்ணுங் கருத்துமாக பாதுகாத்து வருமாறு காவலர்களை எச்சரித்து விட்டுச் சென்றான்.

சுபவேளை நெருங்கியது. ஆவணி மாதம் கிருஷ்ண பட்சத்து அஷ்டமி நாள் அன்று ரோகிணி நட்சத்திரம். பகவான் பிறக்கப் போவதைத் தேவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். பகவான் அவதாரம் செய்ய வேண்டிய நேரம் வந்தது. நள்ளிரவு! நவக்கிரகங்கள் அனைத்தும் உத்தம ஸ்தானங்களில் இருந்தன. தேவகியின் வயிற்றில் இருந்து பகவான் சங்கு சக்கர கதா தாரியாய் அவதாரம் செய்தார். தேவர்கள் உலகம் நலமடையுமாறு வாழ்த்தினார்கள். இந்த நன்னாளை வைணவர்கள் கோகுலாஷ்டமி என்றும், மற்றவர்கள் ஸ்ரீஜெயந்தி என்றும் கொண்டாடுவர்.

பகவானுடைய மாயையினால் வடமதுரை அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்திருந்தது. சிறைச் சாலையில் இருள் நீங்கி ஒளி வீசியது. வசுதேவரும் தேவகியும் குழந்தையைக் கண்டனர். அஞ்சலி செய்தனர். கருணை ததும்பும் கண்களும், சங்கு சக்கரம், கதை மூன்றையும் மூன்று கரங்கள் கொண்டிருக்க, ஒரு கரம் அபயம் அளிக்க, பட்டு பீதாம்பரம் தரித்து, நவரத்ன மாலைகள் மார்பில் தவழ பகவான் குழந்தையாக அவர்களுக்குக் காட்சியளித்தார்.

பகவான் கூறலானார்: ''வசுதேவரே! கவலைப்பட வேண்டாம். என்னை இங்கு வைத்திருக்க வேண்டாம். கோகுலத்தில் யசோதைக்குப் பெண் குழந்தை பிறந்திருக்

கிறது. என்னைக் கொண்டு போய் அங்கு விட்டு விட்டு, அந்தக் குழந்தையை எடுத்து வாருங்கள். அதுவரை உங்களுக்கு எந்தவிதத் தடையும் ஏற்படாது.''

இவ்வாறு கூறியதும் பகவான் தம்முடைய திவ்விய மங்கள ரூபத்தை மாற்றிக் கொண்டு சாதாரண குழந்தை யாக மாறினார். அதே சமயம் தேவகி, வசுதேவர் இருவரையும் பிணித்திருந்த விலங்குகள் தானே கழன்றன. தேவகி குழந்தையை இரு கைகளாலும் வாரி எடுத்து முத்த மிட்டாள். முகத்தோடு முகம் சேர்த்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள்.

வசுதேவர் குழந்தையைக் கைகளில் வாங்கிக் கொண்டார். சிறைக் கதவுகள் தாமாகத் திறந்து கொண்டன. காவலர்கள் மெய் மறந்து உறங்கிக் கொண் டிருந்தனர். வசுதேவர் குழந்தையை எடுத்துக் கொண்டு கோகுலம் நோக்கிப் புறப்பட்டார். வடமதுரை மக்கள் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தனர்.

யமுனை குறுக்கிட்டது. அப்போது நதியில் பெரு வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. வசுதேவர் தயங்கினார். வெள்ளம் வழி விட்டது. அவ்வழியே சென்று, அக்கரை சேர்ந்து, கோகுலத்தை அடைந்தார். கோகுலப் பகவானுடைய யோகமாயையில் கட்டுண்டு கிடந்தது. நந்த கோபருடைய அரண்மனைக் கதவுகள் தாமாகவே திறந்து கொண்டன. காவலரும் பணிப் பெண்களும் தங்களை மறந்து உறங்கிக் கொண்டிருந்தனர். கட்டிலில் யசோதை யும் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் சற்றுமுன் பிறந்த பெண் குழந்தை படுத்திருந்தது.

வசுதேவர் குழந்தையை யசோதையின் அருகே படுக்க வைத்து, அங்கிருந்த பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு திரும்பினார். சிறைக்குள் வந்ததும் கதவுகள் தாமாக மூடிக்கொண்டன. முன்போல் கைகால்களில்

விலங்குகள் வந்து பிணைத்துக் கொண்டன. தேவகி அந்தப் பெண் குழந்தையை வாங்கி மடியில் வைத்துக் கொண்டாள். குழந்தை அழ ஆரம்பித்தது. காவலர் விழித்துக் கொண்டனர். கம்சனிடம் ஓடி, செய்தியைத் தெரிவித்தனர்.

## கம்சனின் கொடுஞ்செயல் :

செய்தி கேட்டு, கம்சன் ஓடி வந்தான். தேவகியின் கையில் இருந்த குழந்தையைப் பலாத்காரமாய் பிடுங்கினான். தேவகி அழுதாள். குழந்தையைக் கொல்ல வேண்டாமென்று கெஞ்சினாள். வசுதேவர் இரக்கம் காட்டு மாறு வேண்டினார். குழந்தையை வெளிமுற்றத்துக்கு எடுத்துச் சென்று பாறைமீது அடிக்க முயன்றான்.

என்ன ஆச்சரியம்! அவன் பிடியிலிருந்து குழந்தை ஆகாயத்தில் கிளம்பியது. திடுக்கிட்டு மேலே பார்த்தான். குழந்தை தேவியாக மாறி, எட்டுக் கைகளுடனும் ஆயுதங் களுடனும் பட்டாடை அணிந்து காட்சியளித்தாள்.

"அடே கம்சா, என்னை உன்னால் கொல்ல முடியாது; உன்னைக் கொல்லப் போகிறவன் வேறோர் இடத்தில் பிறந்திருக்கிறான்" என்று சொல்லி விட்டு தேவி மறைந் தாள். கம்சன் திகைப்படைந்தான். வசுதேவர் தேவகி இவர்கள் பக்கம் திரும்பினான். விலங்குகளை அகற்றினான். தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். அவர்களுடைய அரண்மனைக்கு அனுப்பிவிட்டான்.

## கோகுலத்தில் கண்ணன் :

வசுதேவர் கோகுலத்தை விட்டுப் புறப்பட்டதும் பகவானுடைய மாயை விலகியது. யசோதை விழித்துக் கொண்டாள். பக்கத்தில் இருந்த ஆண் குழந்தையைக் கண்டதும் மகிழ்ச்சி பொங்க கைகளில் எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டாள். பணிப் பெண்களை

எழுப்பினாள். நந்தகோபர் ஓடி வந்தார். பொழுது விடிவதற்குள் நந்தகோபருக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தி கோகுலம் முழுவதும் பரவிவிட்டது. கோபிகைகளும் கோபாலர்களும் மகிழ்ந்தனர். தங்கள் தலைவனுக்கு மகன் பிறந்துள்ளதைக் காண வந்து கூடினர். தங்கள் அன்பளிப்புக் களைக் கொடுத்துக் கௌரவித்தனர்.

நந்தகோபர் பிராமணர்களை அழைத்து அநேக தான தருமங்களைச் செய்தார். ஏழைகளுக்கு அன்னமளித்தார். குழந்தைக்கு ஜாதகர்மா முதலானவற்றைச் செய்வித்தார். பெற்றோர் குழந்தைக்கு கிருஷ்ணன் எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர்.

பகவானுடைய வருகைக்குப் பின்னர் கோகுலம் மகிழ்ச்சியில் நிறைந்தது. பசுக்கூட்டங்கள் நன்கு விருத்தி யடைந்தது. செடி கொடிகள் செழித்து வளர்ந்தன. பூத்துக் காய்ந்தன. பசுக்கள் குடங்குடமாய் பாலைச் சொரிந்தன. மக்கள் வாழ்க்கை சிறப்புற்றது. எல்லோருடைய வீடுகளிலும் செல்வம் தாண்டவமாடியது.

நந்தகோபர் வழக்கம் போல் மதுரைக்கு வந்து கம்சனைக் கண்டு, அவனது தலைமையை ஏற்றுக் கொண்டார். செய்தி அறிந்து வந்து வசுதேவர் நந்த கோபரை நலம் விசாரித்தார். "குழந்தை பிறந்ததிலிருந்து கோகுலம் மகிழ்ச்சியில் திளைத்திருக்கிறது" என்றார் நந்த கோபர். "ரோகிணி தேவிக்குப் பிறந்த உம் மகன் பலராமன் எல்லோராலும் போற்றப்படும் வகையில் வளர்ந்து வருகிறான்" என்றும் அவர் கூறினார். இச்செய்திகளைக் கேட்டு வசுதேவர் ஆறுதல் அடைந்தார்.

நந்தகோபர் அதிக காலம் மதுரையில் தங்கவில்லை. அங்கே நிலவி வந்த ஒரு செய்தி அவரை அவசரமாகக் கோகுலம் திரும்பச் செய்தது. கம்சன் தன்னைக் கொல்லக் கூடியவன், வேறொரு இடத்தில் பிறந்துள்ளான் எனத்

தேவியால் அறிவிக்கப்பட்ட பிறகு அந்தக் குழந்தையைக் கண்டு பிடித்து ஆரம்பத்திலேயே அழித்துவிட எண்ணி நண்பர்களுடன் ஆலோசித்தான்.

புதியதாகப் பிறந்த குழந்தைகளைக் கொன்று விட்டால் அவர்களுள் கம்சனைக் கொல்லப் பிறந்தவனும் அழிந்து விடுவான் என அவனுடைய நண்பர்கள் ஆலோசனை கூறினர். அதன்படி நாடெங்கும் ஆட்களை அனுப்பி, புதிதாகப் பிறந்துள்ள குழந்தைகளைக் கொன்று விடுமாறு உத்திரவிட்டிருப்பதைப் பேசிக் கொள்ளப்பட்டது. கோகுலத்தில் ஏதாவது அசம்பாவிதம் நேர்ந்துவிடக் கூடுமோ என்று அஞ்சி நந்தகோபர் ஊர் திரும்பினார்.

## சதி முயற்சிகள்

கம்சன் தன் பகைவனைக் கண்டறிந்து அவனைக் கொல்வதற்காகப் பல முயற்சிகளை எடுத்து வந்தான். பூதகி என்ற அரக்கியை ஏவினான். அவள் மகாலட்சுமி போல அழகிய தோற்றத்துடன் கோகுலத்திற்கு வந்தாள். கிருஷ்ணனுக்குப் பால் கொடுக்கத் தொடங்கினாள். பாலை உறிஞ்சுவதோடு கண்ணன் அவளுடைய உயிரையும் சேர்த்து இழுத்தான். அவள் பயங்கர உருவத்தோடு அலறிக் கொண்டு தரையில் சாய்ந்து உயிரை விட்டாள்.

கண்ணனுக்குப் பிறந்த நாள் வந்தது; நந்தகோபர் அந்தணர்களை அழைத்து ஓமம் முதலியன செய்து குழந்தையை ஆசீர்வதிக்கச் செய்தார். பட்டாடைகளையும் ஆபரணங்களையும் பூண்ட குழந்தையைத் தொட்டிலில் இட்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். ஒரு வண்டி வந்து நின்றது. கம்சனால் அனுப்பப்பட்ட சகடாசுரன் என்ற அசுரனே அவ்வுருவில் வந்திருந்தான். வண்டியை எட்டி உதைத்தான். வண்டி தூள் தூளாகச் சிதறி நாற்புறமும் விழுந்தது. கம்சனுக்குச் செய்தி கொண்டு போக வழியில்லாமல் உயிரிழந்தான்.

கோகுலத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் வசுதேவருக்கு எட்டின. அவைகளைக் கேட்டதும் அவர் துடிதுடித்தார். குழந்தையைப் பார்க்க வேண்டுமென்று ஆசை அவருக்கு உண்டாயிற்று. கம்சனிடம் இருந்த பயத்தால் மிகுந்த சிரமத்தோடு அந்த ஆசையை அடக்கிக் கொண்டார். யாதவர்களுக்கு ஆச்சாரியராக இருந்த காற்கேய முனிவரைக் கொண்டு தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள முற்பட்டார்.

அங்ஙனமே காற்கேய முனிவர் கோகுலம் சென்று நந்தகோபரைச் சந்தித்தார். அவரை வரவேற்று உபசரித்தார் நந்தகோபர். குழந்தைகள் இருவரையும் வரவழைத்து ஆசீர்வாதம் செய்தார் முனிவர். நந்தகோபருடைய மகனுக்கு, கிருஷ்ணன் என்ற பெயரோடு வாசுதேவன் என்ற பெயரும் சூட்டினார். இராமனுக்குப் பலராமன் என்றும் பெயர் சூட்டி, அவர்கள் இருவராலும் யாதவர் குலமே சிறப்பாக விளங்கப்போகிறது என்று கூறித் திரும்பினார்.

குழந்தை கிருஷ்ணன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். கோபியர்கள் குழந்தைக்குத் தினம் ஒருவிதமாக அலங்காரம் செய்து கண்டு மகிழ்ந்தனர். விதவிதமான நகைகளைப் பூட்டி அழகு பார்த்தனர். கிருஷ்ணனும் தம் மழலைப் பேச்சால் அவர்களை மகிழ்வித்து வந்தான். அவனுடைய அழகிய கண்களைப் பார்த்து, கோபியர் அவனைக் கண்ணன் என்றே அழைக்கலாயினர்.

மண்ணை உண்டும், உரலில் கட்டுண்டும், மத்தால் அடிபட்டும், கோபிகள் வஸ்திராபரணம் செய்தும், குழலூதியும், கோவர்த்தனத்தைக் குடையாய் பிடித்தும், ஆடு மாடுகள் மேய்த்தும், காளிங்க நர்த்தனம் செய்தும்; கோகுலத்தில் கண்ணன் செய்த லீலைகள் பல. தேனுகன்

வதம், பிரலம்பாசுரவதம் முதலியவை கம்சனால் நேர்ந்த விபத்துக்கள். இவை யாவற்றினும் வெற்றிகண்டான் கோபாலன்.

## கம்ச வதம்

ஒரு நாள் நாரதர் கம்சனுடைய அரண்மனைக்கு வந்தார். கம்சன் அவரை வரவேற்று உபசரித்தான். நாரதர் கம்சனைப் பார்த்து, ''உனக்குத் தெரியாதா? கோகுலத்தில் நந்தகோபரின் மகனாக வளர்ந்து வரும் கிருஷ்ணனே உன்னுடைய எதிரி. தேவகியின் கர்ப்பத்தில் எட்டாவதாக அவதரிக்கும் மகனால் உனக் குமரணம் என்று அசரீரி சொல்லவில்லையா?'' என்றார்.

''சுவாமி, தேவகியின் எட்டாவது கர்ப்பம் பெண்'' என்றான். ''பகவானுடைய மாயை அது, ஏழாவதாக உண்டான கர்ப்பம் கலைந்து போயிற்றல்லவா? உண்மையில் பகவானுடைய மாயையால் அந்தக் குழந்தை கோகுலத்திலிருக்கும் வசுதேவருடைய மற்றொரு மனைவியான ரோகிணியின் கருப்பத்திற்குமாற்றப்பட்டது. அந்தக் குழந்தையே பலராமன். எட்டாவதாக பகவான் தேவகியிடம் அவதரித்தார். யோக மாயை யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்தாள். உனக்குத் தெரியக் கூடா தென்று வசுதேவர் அந்தக் குழந்தையை யசோதையிடம் கொண்டு போய் விட்டுவிட்டு, அவளுக்குப் பிறந்த பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு வந்தார். அந்த யோக மாயை உன் பிடிக்குச் சிக்காமல், ''உன் யமன் வேறிடத்தில் இருக்கிறான்'' என்று சொல்லி மறைந்து விட்டாள். உன்னால் அனுப்பப்பட்ட அனைவரும் கோகுலத்தில் கிருஷ்ணனால் அழிக்கப்பட்டு விட்டார்கள். நீ கவலையற்று இருக்கிறாயே'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார் நாரதர்.

## தனுர் யாகம்

கம்சன் உடனடியாக தனுர்யாகம் செய்வதற்கான ஏற்பாடுகளைத் தொடங்க உத்தரவிட்டான். யாகத்துக்கு வேண்டிய உபகரணங்களுடன் நந்தகோபர் முதலானவர்களை வரவழைக்கும் சாக்கில் இராம-கிருஷ்ணர்களையும் அழைத்து வரச் செய்ய எண்ணம் கொண்டான். யாதவ வம்சத்தார்க்கு உள்ளன்போடு சேவை செய்துவரும் அமைச்சரான அக்ரூரர் அதற்கு ஏற்றவர் என்று முடிவு செய்து அவரைக் கோகுலத்திற்கு அனுப்பி வைத்தான்.

விடியற்காலை நேரத்திற்கெல்லாம் அக்ரூரர் தேரில் ஏறி மதுராவை விட்டுக் கோகுலத்திற்குப் புறப்பட்டார். அவருடைய உள்ளத்தில் உற்சாகம் இல்லை. கம்சனுடைய திட்டத்திற்கு உடந்தையாகப் பச்சிளம் பாலகர்களை அழைத்துவரத் தாம் செல்கிறோமே என்ற எண்ணம் அவருக்கு வேதனையைக் கொடுத்தது.

கம்சனுக்கு மந்திரியாக இருந்த போதிலும் அக்ரூரர் சிறந்த தர்மவான். பகவானிடம் அத்யந்த பக்தி கொண்டவர். பகவானுடைய பிரபாவத்தை எண்ணி மகிழ்ந்தவாறு கோகுலத்தை அடைந்தார். கிருஷ்ணனும் பலராமனும் ஓடிவந்து அவரை வரவேற்றார்கள். இதற்குள்ளாக நந்தகோபர் அங்கு வந்து அக்ரூரரைப் பார்த்து அவரை உள்ளே அழைத்துச் சென்று உபசரித்தார்.

கம்சன் தொடங்கியுள்ள யாகத்தைப் பற்றியும் அதற்கு வருமாறு தான் அழைக்க வந்துள்ளதாகவும் அக்ரூரர் தெரிவித்தார். நந்தகோபர் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார். யாகத்திற்குத் தேவையான பால், தயிர், வெண்ணெய் மற்றும் பழவகைகளைச் சேகரிக்குமாறும் விரைவிலேயே மதுராபுரிக்கும் புறப்பட்டுச் செல்ல வேண்டுமென்றும் தெரிவிக்கச் செய்தார்.

## அக்ரூரர்

மறுநாள் அக்ரூரருடன் பலராமனும் கிருஷ்ணனும் மதுராபுரிக்குப் புறப்பட்டனர். வாயு வேகம் மனோ வேகமாய் தேரை செலுத்தினார் அக்ரூரர். வழியில் யமுனா நதி தீரத்தில் கண்ணனும் பலராமனும் அக்ரூரருக்குத் திவ்ய தரிசனம் கொடுத்தனர். மாலை மங்கும் நேரத்தில் மதுராவின் எல்லையை அடைந்தனர். கிருஷ்ணனும் பலராமனும் தேரிலிருந்து இறங்கினார்கள். ''இன்றிரவு வனத்தில் தங்கியிருந்து காலையில் நகருக்குள் நுழைகிறேன்'' என்றான் கிருஷ்ணன்.

பொழுது விடிந்தது. விடிவதற்கு முன்பே கோகுலத்தில் இருந்து புறப்பட்ட நந்தகோபர் முதலானவர்கள் விரைவிலேயே வந்து சேர்ந்தனர். அனைவரும் நகருக்குள் நுழைந்தனர். நகர மக்கள் அன்புடன் வரவேற்றனர்.

நாள்தோறும் கம்சனுக்காக எடுத்துச் செல்வதற்குரிய அழகிய ஆடைகளையும், மலர் மாலைகள், சந்தனம் முதலிய மணப் பொருட்களையும் கண்ணனும் பலராமனும் வாங்கி அணிந்து கொண்டனர். பின்னர் சிறுவர் இருவரும் யாக சாலைக்குச் சென்றனர்; அவர்களை உள்ளே விட காவலர்கள் மறுத்தனர். அவர்களை இழுத்து அப்பால் தள்ளி விட்டு, பகவான் உள்ளே நுழைந்தார். யாகசாலையில் நிறுவப்பட்டிருந்த வில்லை இரண்டாக ஒடித்துப் போட்டார். எதிர்த்து வந்தவர்களை முறியடித்துவிட்டு கம்சனைத் தேடினார்.

கம்சன் அரண்மனையில் இருந்தான். கிருஷ்ணனும் பலராமனும் அரண்மனை நோக்கிச் சென்றனர்.

## குவலயா பீடமும் மல்லர்களும் :

அரண்மனை வாயிலில் குவலயா பீடம் என்னும் பட்டத்து யானை மதம் பொழிய இரும்பு உலக்கையை ஏற்றி நின்றது. அவர்களை நோக்கிப் பயங்கரமாக வந்தது.

கிருஷ்ணன் யானையைப் பலவாறாக அலைக்கழித்து முடிவில் அதன் இரு தந்தங்களையும் ஒடித்து அதன் துதிக் கையை முறுக்கி வதம் செய்தான். யானையோடு பாகவனும் பரலோகம் போய்ச் சேர்ந்தான்.

குவலயா பீடத்தைக் கிருஷ்ணன் கொன்று விட்டான் என்ற செய்தியைக் கேட்டு, கம்சன் கடுங்கோபங் கொண்டான். சாணூரன், முஷ்டிகன் என்ற இரண்டு மல்லர்களையும் தூண்டினான். மல்லர்கள் இருவரும் தயாரானார்கள். கையில் தந்தங்கள் உருட்டிக் கொண்டே சிறுவர்கள் இருவரும் எள்ளி நகையாடினர்.

கிருஷ்ணன் சாணூரனுடனும் பலராமன் முஷ்டிகனுடனும் மல்யுத்தம் செய்தனர். போர் பயங்கரமாக நடந்தது. சாணூரன் மண்டை பிளந்து உயிரை விட்டான். அதே சமயம் பலராமனும் முஷ்டிகனை வதம் செய்தான். இரு மல்லர்களும் உயிரிழக்கவே கம்சன் ஒடுங்கி விட்டான்.

"சிறுவர்களை அடித்து, நகருக்கு வெளியே துரத்துங்கள். வசுதேவரையும் தேவகியையும் வெட்டித் தள்ளுங்கள்" என்று கத்தினான். அவன் கட்டளையைச் சிரமேற்கொண்டு ஆட்கள் ஓடி வந்தனர். அதற்குள் கிருஷ்ணன் பாய்ந்து சிங்காதனத்தின் படிகளில் ஏறி கம்சனுடைய கழுத்தைப் பிடித்து இழுத்துத் தள்ளினான். தலையிலிருந்து கிரீடம் ஒரு புறம் விழுந்து உருண்டது. கம்சன் படிகளில் உருண்டு சபா மண்டபத்தின் நடுவில் வந்து விழுந்தான். கிருஷ்ணன் அங்கிருந்தவாறே அவன் மார்பில் பாய்ந்து குதித்து அவன் கழுத்தைப் பிடித்து நெறித்தான். அவன் தலையைத் தரையில் மோதினான். கம்சன் பெருங்கூச்சலிட்டு உயிரை விட்டான்.

தேவர்கள் மலர்மாரி பொழிந்து, பகவானைத் துதித்தார்கள். சாதுக்கள் நெஞ்சில் குடிகொண்டிருந்த கம்சனைப் பற்றியபயம் அறவே ஒழிந்தது. கம்சனுடைய சகோதரர்கள் எண்மர் ஓடி வந்தார்கள். சிறுவர்கள் இருவரும் அனைவரை

யும் யம பட்டணத்திற்கு அனுப்பினர். சிறைச்சாலைக்குச் சென்று கதவுகளை உடைத்து வசுதேவரையும், தேவகியை யும் விடுவித்தார்கள். உக்கிரசேனரும் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்.

பின்னர் கிருஷ்ணன் பாட்டனாரான உக்கிர சேனரைப் பணிந்து, "உங்கள் மகன் என்னால் மரணமடைய நேரிட்டது பற்றி வருந்த வேண்டா. நீங்கள் மறுபடியும் சிங்காதனத்தில் அமர்ந்து மக்களுக்கு நல்லாட்சி வழங்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

வாயு பகவானை அழைத்து தேவேந்திரனிடமிருந்து 'சுதர்மம்' என்ற சபையைக் கொண்டு வரச் செய்து அதில் உக்கிரசேன மகாராஜாவை அமர்த்தி கிருஷ்ணன் முடிசூட்டி னான். பின்னர் பலராமனும் கிருஷ்ணனும் கோகுலம் திரும்பினர்.

**ருக்குமணி :**

துவார பாலர்களாகிய ஜயவிஜயர்கள் துவாபரயுகத்தில் சிசுபாலன் தந்த விக்ரன் என்ற இரு மன்னர்களாகப் பிறந்தார்கள். மன்னர்களாகப் பிறந்த போதிலும் அசுர குணங்கள் அவர்களை ஆட்கொண்டன.

ருக்மன் என்ற இளவரசன் தன் தங்கையாகிய ருக்மணி யைச் சிசுபாலனுக்குத் திருமணம் செய்து கொடுக்க ஏற்பாடுகள் செய்தான். ருக்மணி துவாரகாபுரி வாசனாகிய கண்ணபிரானையே மணக்க வேண்டுமென்று ஆவல் கொண் டிருந்தாள். ஓர் அந்தணனிடம் ஓலை எழுதிக் கொடுத்து கண்ணனிடம் அனுப்பினாள்.

அதே போன்று கண்ணபிரானும் தேரேறி திருமண தினத்தில் விதர்ப்ப நாட்டின் தலைநகராகிய குண்டினபுரம் வந்து சேர்ந்தார்.

அன்று காலையில் ருக்மணி கோயிலுக்கு வந்தாள். அந்தச் சமயம் பார்த்து, கிருஷ்ணன் ருக்மணியைத் தேரில் ஏற்றிக் கொண்டு ஊர் திரும்பினார். ருக்மன் சிசுபாலன் மற்றும் பல மன்னர்கள் ஒன்று சேர்ந்து தேரைத் தடுத்து நிறுத்தி கண்ணனிடம் போரிட்டனர். கண்ணனின் அம்புகளுக்கு ஆற்றாமல் மன்னர்கள் தோற்றோடினர். பின்னர் துவாரகையில் கிருஷ்ணனுக்கும் ருக்மணிக்கும் மிக விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. இந்த நிகழ்ச்சியால் சிசுபாலன் மிகவும் அவமானப்பட்டான். எப்படியும் கண்ணனைப் பழிவாங்க வேண்டுமென்று எதிர்பார்த்திருந்தான். தக்கசமயமும் வாய்த்தது.

## இராஜசூய யாகம் :

பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்தில் செங்கோல் செலுத்தி வந்தனர். ஒருநாள் நாரதர் சபைக்கு வந்தார். ''தரும நந்தனா! தெய்வ லோகத்தில் உன் தந்தை பாண்டு மன்னனைக் கண்டேன். நீங்கள் பேரும் புகழும் பெற்று, ஆட்சி செய்வதைப் பற்றிக் கேள்வியுற்றுப் பெருமகிழ்ச்சி கொண்டான். இராஜ சூய யாகம் செய்தால் உங்கள் கீர்த்தி மேலும் உயரும் என்பது அவனுடைய உள்ளக் கிடக்கை'' என்று கூறிச் சென்றார்.

அவ்வாறே இராஜ சூய யாகம் செய்ய ஏற்பாடுகள் ஆரம்பமாயின. துவாரகையிலிருந்து கண்ணபிரான் வந்து சேர்ந்தார். இராஜ சூய யாகம் என்பது சாதாரண நிகழ்ச்சியல்ல. எல்லா மன்னர்களையும் அடிமைப்படுத்தி அவர்கள் தரும் திரவியங்களைக் கொண்டு அந்த யாகம் நடைபெறும். அதற்குப் பல தேச மன்னர்களும் அந்தணர்களும் கலைஞர்களும் வருவார்கள். அவரவர்களுக்கு வேண்டிய உணவு, இருப்பிடம் முதலிய வசதிகள் செய்து தர வேண்டும். பல கேளிக்கைகள் நடைபெறும்.

இவ்வாறு சிறப்பாக இராஜ சூய யாகம் நடைபெற்றது. யாக முடிவில் முதல் தாம்பூலம் பலருக்குத் தரவேண்டும் என்று தருமபுத்திரன் பிதாமகராகிய பீஷ்மரைக் கேட்டார். அவர், ''துவாரகாபுரி வாசனாகிய கண்ணபிரானே அதற்கு உரியவர்'' என்று கூறினார். அதன்படி தருமபுத்திரன் தாம்பூலமும் மங்கலப் பொருள்களும் அடங்கிய தாம்பாளத் தட்டைக் கிருஷ்ணனிடம் கொண்டு சென்றார்.

**சிசுபாலன் :**

உடனே சிசுபாலன் கடுங்கோபங்கொண்டு பெரிய ஆரவாரஞ் செய்தான். ''இந்தச் சபையில் மன்னாதி மன்னர்கள் எல்லாம் அமர்ந்திருக்கின்றனர். உங்கள் குல முதியோராகிய பீஷ்மர் இருக்கிறார். மற்றும் துரோணர், கிருபர் முதலிய ஆசாரியர்கள் இருக்கிறார்கள். இவர்களுள் யாருக்காவது இந்த மரியாதையைச் செய்திருக்கலாம். அவ் வாறின்றி காட்டில் வாழும் இடையனுக்கு முதல் மரியாதை செய்வதா? அதன்றியும் அவன் முடிசூட்டிக் கொள்ளும் தகுதி யுடைய மன்னனும் அல்லன். உங்களுக்கு அவன் நண்பன் என்றால் தனியாக மரியாதை செய்து கொள்ள வேண்டுமே யன்றி, இந்தப் பேரவையில் நடக்கும் இந்த அநீதியை நான் ஆட்சேபிக்கிறேன்'' என்று பலவாறாகத் தூஷித்தான்.

**''பூபால ரவையத்து முற்பூசை பெறுவார் புறங்கானில் வாழ்**
**கோபாலரோ என்று ருத்தங் கதிர்த்துக் கொதித் தோதினான்**
**கபாலி முனியாத வெங்காமன் நிகரான கவி னெய்தியேழ்**
**தீபால டங்காத புகழ்வீர கயமன்ன சிசு பாலனே''**

—வில்லிபாரதம்

சிசிபாலன் கொண்ட சீற்றத்தை வில்லிப்புத்தூரார் முதல் பத்துப் பாடல்களில் கடுநடையில் பாடுகிறார்.

கண்ணபிரான் பொறுமையோடு இந்த தூஷணைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். சிசுபாலன் செய்யும் நூறு பிழைகள்வரை அவனை மன்னித்துவிட வேண்டுமென்று

அவனுடைய தாய்க்குக் கண்ணன் கொடுத்திருந்த வாக் குறுதியின்படி தவறுகளை எண்ணிக் கொண்டிருந்தார். நூறுக்கு அதிகமாகவும் போயிற்று. உடனே தேரேறி போர் மன்னர்களும் வெளியில் வந்து போரில் ஈடுபட்டனர். கடும் போர் நிகழ்ந்தது. இறுதியில் கண்ணன் சக்கராயுதத்தை ஏவினார். அது சென்று சிசுபாலனின் தலையைக் கொய்தது. தந்த விக்ரனும் இவ்வாறே அழிந்து போனான்.

பின்னர் இராஜசூய யாகசாலைக்கு அனைவரும் திரும்பி வந்தனர். முறைப்படி முதல் தாம்பூலம் கண்ண பிரானுக்கு வழங்கப்பட்டது. எல்லோரும் பெரு மகிழ்வு கொண்டனர். இராஜ சூய யாகம் முடிந்ததும் மன்னர் களும் அந்தணர் கலைஞர்களும் அவரவர்களுக்குரிய வரிசை களைப் பெற்று ஊர் திரும்பினர். இந்த யாகம் பாண்டவர்களின் வாழ்க்கையில் உச்சகட்டமாகும். இராஜ சூய யாகம் செய்த மன்னர்கள் "சாம்ராட்" எனப் புகழப்பட்டனர்.

இவ்வாறு மூன்று பிறவிகளில் பகவானுக்குப் பகைவர் களாக இருந்து தங்களுடைய சாபம் தீர்ந்து, ஜய விஜயர்கள் முன் போல் துவார பாலர்களாகப் பணியாற்றத் தொடங்கினர்.

பகவானுடைய பக்தர்களாவே இருக்க வேண்டு மானால் பல பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும். அதற் காகவே இவர்கள் மூன்று பிறவிகளிலேயே தங்களுக்கு நேர்ந்த துன்பத்தைப் போக்கிக் கொண்டார்கள் என்பதாம்.

## திரௌபதி மான சம்ரட்சணம் :

துரியோதனாதியர் தன் தாயாதிகளுக்குரிய தாய பாகத்தைக் கொடுக்காமல் பல வழிகளிலும் பாண்டவர் களைத் துன்புறுத்தி வந்தார்கள். துரியோதனன் தன் மாமனாகிய சகுனியைக் கொண்டு மாயச் சூதாடி

பாண்டவர்களின் அரசுரிமையை அபகரித்துக் கொண்ட தோடு அவர்களையும் அடிமைகள் ஆக்கிக் கொண்டான். அக்கால வழக்கப்படி அடிமைகள் மேலாடைகள் அணியக் கூடாது. ஆகவே பாண்டவர்கள் தாமாகவே தங்கள் மேலாடைகளை எடுத்துக் கொடுத்துவிட்டனர்.

துரியோதனன் தன் தம்பியாகிய துச்சாதனனை ஏவி பாண்டவர்களின் தர்ம பத்தினியாகிய திரௌபதியை சபைக்கு அழைத்து வரச் செய்து, அவள் உடுத்தியிருந்த மேலாடையை உரியச் சொன்னான். திரௌபதியைச் சபைக்கு அழைத்து வந்து துகிலுரித்து அவமானப் படுத்துவது பெரும் பாவமென்று சபையிலிருந்த பெரியோர்கள் கூறியும் அது அந்தப் பாவியின் செவியில் ஏறவில்லை.

துச்சாதனன் திரௌபதியின் துகிலை உரிய ஆரம் பித்தான். அவளுக்கு உதவி செய்யவும், அந்த அக்கிரமத்தைக் கண்டிக்கவும் எவரும் முன்வரவில்லை. துணியைக் களையவொட்டாமல் திரௌபதி தன் இருகைகளாலும் இறுகப் பற்றியிருந்தாள். பிறகு அதுவும் இயலாமற்போயிற்று. இரண்டு கைகளையும் மேலே உயர்த்தி, ''கோவிந்தா, கோவிந்தா'' என்று இறைவனை வேண்டினாள். இறைவன் அருள் கூர்ந்தான். சேலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வளர்ந்தன. திரௌபதியின் மானம் காப்பாற்றப்பட்டது. துச்சாதனன் கைசோர்ந்தான். களைத்து வீழ்ந்தான்; பாரதப் போரில் பாவிகள் அனை வரும் மாண்டொழிந்தனர். சரணாகதியில் இது மூன்றாம் இடம் வகிக்கிறது. கிரேதாயுகத்தில் சரணாகதி அடைந்தவன் பிரகலாதன். திரேதாயுகத்தில் சரணாகதி அடைந்தவன் விபீஷணன். துவாபர யுகத்தில் சரணாகதி யடைந்தவள் திரௌபதி. இதைப் பரபக்தி மார்க்கம் என்று வைணவ சித்தாந்தம் பாராட்டுகிறது.

## குசேலர் :

கிருஷ்ணன் சாந்தீப முனிவருடன் குருகுலவாசம் செய்த போது அவரோடு சுதாமா என்ற அந்தணச் சிறுவனும் அங்கு வந்திருந்தான். இருவரும் மிகவும் நெருங்கிய அன்பு கொண்டவராய் விளங்கினார்கள். குருகுலவாசத்தை முடித்துக்கொண்டு கிருஷ்ணன் மதுரா புரி திரும்பிய பிறகு, சுதாமா அவந்தி நாட்டிலுள்ள தன்னுடைய இருப்பிடத்துக்கு வந்து விட்டான். பெரிய வனாகித் திருமணம் செய்து கொண்டு பல குழந்தைகளை அடைந்துவிட்டான்.

குருகுலவாசத்தில் தாம் கற்றபடி வாழ்க்கையை நடத்தி வந்தார் சுதாமா. அதனால் அவர் வீட்டில் வறுமை குடி கொண்டது. குடும்ப கஷ்டம் அதிகரித்தது. மனைவி மக்களுக்கு நல்ல துணிமணிகள் இல்லை கந்தலும் பழசு மாகவே உடுத்த நேர்ந்தது. எனினும் சுதாமா தர்ம மார்க்கத்திலிருந்து சிறிதும் வழுவவில்லை. அவருடைய வறுமை நிலைமையைக் கண்டு எல்லோரும் அவரைக் ''குசேலர்'' என்று அழைக்கத் தொடங்கினர். அவருடைய பிள்ளைத் திருநாமமாகிய சுதாமா என்பது மறைந்து குசேலர் என்ற பெயரே நிலைத்து விட்டது.

குசேலர் அடிக்கடி தன் மனைவியிடம் குருகுல வாசத்தின்போது கிருஷ்ணனுடன் பழகநேர்ந்த நாட்களைப் பற்றிப் பெருமையாகச் சொல்வார். அவள் பெயர் சுசீலை; சிறந்த உத்தமி; கணவன் முகம் கோணாது நடந்து கொள்வாள். எனினும் வறுமையின் கொடுமையை அவளால் தாங்க முடியவில்லை. ஒரு நாள் தன் கணவனிடம், ''சுவாமி, துவாரகாபதி கிருஷ்ணன் தங்களோடு குருகுல வாசம் செய்தவர் என்றும் தங்களிடம் மிக்க அன்பு கொண்டவர் என்றும் அடிக்கடி கூறுகிறீர்கள். தாங்கள் அவரைப் போய்ப் பார்க்கக் கூடாதா? அந்தக் கருணாமூர்த்தி நம்முடைய வறுமை நீங்க ஏதாவது செய்ய மாட்டாரா?'' என்று கேட்டாள்.

குசேலருக்கு அந்த வார்த்தை சரியாகவே பட்டது. அவள் விருப்பப்படி துவாரகைக்குப் போய் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்ப்பதாகக் கூறினார். தெய்வம், அரசன், முதியோர், குழந்தைகள் ஆகியோரைப் பார்க்கச் சென்றால் வெறும் கையுடன் செல்லக் கூடாது என்பார்கள். ஆகவே எடுத்துச் செல்ல அவல் கொஞ்சம் கொடுக்குமாறு கேட்டார். அவ்வாறே சுசீலை கொஞ்சம் அவலை முடித்துக் கொடுத்தாள்.

குசேலர் துவாரகைக்குப் புறப்பட்டார். இங்கு வாசகர்களுக்கு ஓர் ஐயம் தோன்றும். வடமதுரையிலிருந்த கிருஷ்ணனும் துவாரகைக்கு எப்போது வந்தார் என்று. ஜராசந்தன் சிசுபாலனுடைய மாமனார். சிசுபாலனைக் கண்ணன் கொன்றதனால் கோபங் கொண்ட ஜராசந்தன் வடமதுரைக்குச் சென்று அடிக்கடி கிருஷ்ணனுக்குத் தொல்லை கொடுத்து வந்தான். அவன் பலசாலியுங்கூட. அவனை வெற்றி கொள்வது அவ்வளவு சுலபமாக இல்லை. ஆகவே கண்ணன் துவாரகை என்னும் தீவில் குடியேறினார். அது குஜராத்திற்கு வடக்கிலுள்ள கட்ச் வளைகுடாவில் உள்ள ஒரு சிறிய தீவு. அதைக் 'கட்ச் ரன்' என்று இப்போது அழைக்கிறார்கள். அத்தீவில் கோரை அதிகமாக வளர்ந்திருக்கும். அது வருஷத்தில் பாதி நாள் கடல் நீரில் மூழ்கியிருக்கும். அத்தீவின்மீது பாகிஸ்தான் முன்பு படையெடுத்தது.

பல நாள் வழி நடந்து துவாரகை போய்ச் சேர்ந்தார். ருக்மணியின் இல்லத்திற்குச் சென்று காவல்காரனிடம் தாம் பகவானைப் பார்க்க வேண்டுமென்று சொல்லியனுப்பினார். உடனே கிருஷ்ணன் வாயிலுக்கு ஓடிவந்தார்; குசேலரைக் கண்டார். முகமலர்ந்து வரவேற்றார். அழைத்துச் சென்று ஆசனத்தில் அமரச் செய்தார். ருக்மணிக்கு அறிமுகம் செய்தார். அவருக்குப் பாதபூசை செய்து மலர் கொண்டு அர்ச்சித்தார்.

தாங்கள் இருவரும் குருகுல வாசம் செய்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்தார். அளவளாவினார் பழங்கதைகள் பேசி மகிழ்ந்தார். குசேலர் கண்ணனுடைய உபசாரங்களைக் கொண்டு பூரித்துப் போனார். வாய்க்கு ருசியான உணவு பரிமாறப்பட்டது. இருவரும் அமர்ந்து உண்டனர். ருக்மணி அன்புடன் உணவளித்தாள். உண்டு முடிந்ததும் கண்ணன் குசேலருக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுத்தார்.

வழி நடந்து வந்த களைப்பு நீங்க குசேலர் சிறிது நேரம் கண்ணயர்ந்தார். பக்கத்தில் அமர்ந்து கிருஷ்ணன் விசிறி கொண்டு விசிறினார்.

குசேலர் தாம் வந்த காரியத்தை கண்ணனிடம் தெரிவிக்கவில்லை. ஊருக்குப் புறப்படத் தயாரானார். ''சுதாமரே! எனக்கு ஏதாகிலும் தின்பண்டம் கொண்டு வந்திருக்கிறீரா?'' என்று கேட்டபடியே அவரிடம் இருந்த சிறு மூட்டையைப் பார்த்தார். அதை வாங்கி அவிழ்த்தார்.

''ஆகா! சுதாமரே, எனக்குப் பிடித்தமான பொருளையே கொண்டு வந்திருக்கிறீர்'' என்று சொல்லி ஒரு பிடி அவலை எடுத்து வாயில் போட்டார். அடுத்து எடுத்த பிடியைத் தடுத்து ருக்மணி தான் வாங்கிக் கொண்டாள். அவலைச் சுவைத்துத் தின்றார் கண்ணன்.

குசேலர் புறப்பட்டார். ருக்மணியும் கண்ணனும் வாயிற்படிவரையில் வந்து வழியனுப்பினர். குசேலர் வழி நடந்து அவந்தி நாட்டிலுள்ள தன் வீடு வந்து சேர்ந்தார். அவருக்கு எல்லாம் புதுமையாகவே இருந்தது. அவரது சிறிய வீடு பெரிய அரண்மனையாக இருந்தது. சுசீலை ஆடைகளோடு காட்சியளித்தாள். ''சுவாமி வாருங்கள்'' என்று உபசரித்தாள். ''எல்லாம் துவாரகை வாசன் அருள்தான்'' என்று விளக்கம் கூறினாள். குசேலருக்கு, எல்லாம் ஆச்சரியமாகக் காணப்பட்டது. ஆனந்தக்

கண்ணீர் பெருக்கினார்; இறைவனுடைய பேரருள் திறத்தைக் கண்டு வியந்தார்.

## திருமணங்கள்

இந்தப் புராணத்தில் பல திருமணங்களைப் பற்றிய வரலாறுகள் வருகின்றன. கண்ணபிரானுக்கு எட்டு மனைவியர். 1. ருக்மணி, 2. சத்தியபாமை, 3. நப்பின்னை, 4. ஜாம்பவதி, 5. காளிந்தி, 6.*மித்திர விந்தை, 7. பத்திரை, 8. லக்ஷ்மணை என்பவராக. நப்பின்னை பிராட்டியின் பெயர் இந்நூலில் சத்தியவதி என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

இவையன்றியும் கிருஷ்ணன் மகன் பிரத்யும்னன்-மாயாவதி, கிருஷ்ணனது பேரன் அநிருத்திரன்-உஷை, கிருஷ்ணனது மைத்துனன் அருச்சுனன் - சுபத்திரை ஆகியோரது திருமணங்களும் உள்ளன. இவைகள் அடுத்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன.

கிருஷ்ணாவதாரத்தின் பிற்பகுதி 'பாரதப் போர்' என்ற தலைப்பிலும், 'துவாரகை' என்ற தலைப்பிலும் கூறப்படுகிறது.

## தீபாவளி

தீபாவளி என்றால் தீப வரிசை. தீபமாகிய விளக்கு களை வரிசை வரிசையாக வைத்து இந்த விழாவைக் கொண்டாடினர். வட நாட்டில் தீப வரிசை தீபாவளியின் போது வைக்கப் படுகிறது; தென்னாட்டில் தீபவரிசை யைக் கார்த்திகை தீபத்தின் போது காணலாம்.

தீபாவளி, கண்ணபிரான் நரகாசுரனை வதம் செய்த நாளாகும். இரண்யாட்சனை வதைக்கும் பொருட்டு திருமால் வராக அவதாரம் எடுத்தார். தம் கொம்பின் நுனியில் பூமிதேவியைத் தாங்கினார், அவரது ஸ்பரிசத்தின்

மகிமையால் பூமிதேவிக்கும் வராகப் பெருமானுக்கும் மகனாகப் பிறந்தவன் நரகாசுரன்.

இவன் எல்லையற்ற வரங்கள் பெற்று மூவுலகையும் தன் கீழ்க் கொண்டு வந்து ஆட்சி நடத்தினான். பெண்டிரை மட்டும் சிறுமையாக எண்ணி அவர்களைத் தவிர்த்து ஏனைய யாவராலும் மரணமின்மையை வரமாக இவன் பிரம்மதேவரிடம் பெற்றிருந்தான்.

பிராக் சோதிஷபுரம் என்ற பகுதியில் இவன் தலை நகரை அமைத்துக் கொண்டான். இராமாவதார காலத்தில் வானரர்களாக இருந்து உதவிய மைந்தன், துவிதன் என்ற இருவரும் இவனுக்கு மந்திரிகளாக அமைந் தனர். நரகாசுரன் தேவர்களைக் கொடுமைப் படுத்தி னான். அவர்கள் பரந்தாமனிடம் முறையிட்டார்கள். அவர் ஆவன செய்வதாக வாக்களித்தார்.

அதன்படி கிருஷ்ணவதார காலத்தில் சத்தியபாமை யைத் திருமணம் புரிந்து கொண்டவுடன் நரகாசுரன் நாட்டின்மீது படை எடுத்தார். ஆண்களால் மரணம் நேரக் கூடாது என்று அவன் வரம் பெற்றிருந்தமையால் சத்தியபாமையைப் போருக்கு அழைத்துச் சென்றார். அவள் மிக்க தைரியத்துடன் தேரோட்டினாள். கிருஷ்ணன் மயக்கமுற்ற நேரத்தில் நரகாசுரன்மீது இவளே அம்பெய்து அவனை மாய்த்தாள்.

துன்பம் நீக்கிய அந்த தினத்தை மக்கள் விழாவாகக் கொண்டாடுவது நியாயந்தானே. நரகன் இறந்தவுடன் பூமாதேவி பிரசன்னமானாள். இறைவனைத் துதித்தாள். நரகாசுரன் மகனான பகதத்தனுக்குக் கண்ணபிரான் முடி சூட்டி நாட்டை அவனிடம் ஒப்புவித்தார். சத்தியபாமா வுடன் துவாரகை திரும்பினார். அதுமுதல் கண்ணனுக்குச் சத்தியபாமை மீது அலாதி பிரியம். அவளுக்கு ராதை என்று வேறொரு பெயர் உண்டு. கண்ணன் ராதா ருக்மணி

சமேதராய் காட்சியளிக்கும் படங்கள் நம்மவர் வீடுகளில் இருப்பதை இன்றும் காணலாம்.

## கிருஷ்ண லீலா

கிருஷ்ணாவதார மகிமையைப் பற்றித்தான் பாகவதப் புராணம் வெகுவாகப் பாராட்டுகிறது. அவையனைத்தையும் விரிவாய் எழுத இச்சிறுநூல் இடந்தரவில்லை. அவற்றுள் சில வருமாறு :

காளிங்கநர்த்தனம் செய்தது, கோபிகாவஸ்திராபரணம் செய்தது, கோவர்த்தனகிரியைக் குடையாய்ப் பிடித்தது, பல கோபிகாஸ்திரீகளுடன் கூடி விளையாடியது, பிருந்தையை அவள் கணவன் உருவில் இன்பம் அனுபவித்தது, பீம அர்ச்சுனர்களைக் கொண்டு சராசந்தனை வஞ்சனையாய்க் கொன்றது, உரலில் கட்டுண்டது, மண்ணைத் தின்றது, வெண்ணெயைத் திருடி மத்தால் அடிபட்டது போன்ற பல நிகழ்ச்சிகளை விவரித்து எழுத இயலவில்லை.

# 12. திருமணங்கள்

## முன்னுரை

ஸ்ரீமத் பாகவத புராணம் ஓர் அற்புத காவியம். பெருங்காப்பியத்துக்குரிய எல்லா இலக்கணங்களும் பொருந்தியுள்ளன. வாழ்த்து, வணக்கம், இயல்புரைத்தல், என்னும் மூன்றனுள் ஒன்று முன்வர நடந்து, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையும் பயக்கும் ஒழுக்கமுடையதாய், மலை, கடல், நாடு, நகர், சூரியன் உதயம், சந்திரன் உதயம், ஆகிய இவற்றைக் குறித்த வருணனைகள் உடையதாய் விளங்குவதுடன்;

**"நன் மணம் புணர்த்தல் பொன்முடி கவித்தல்**
**பூம் பொழில் நுகர்தல் புனல் விளையாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**

**புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்று**
**இன்னன் புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரம் தூது செலவிகல் வென்றி**
**சந்தியில் தொடர்ந்து, சுருக்கம் இலம்பகம்**
**பரிச் சேதம் என்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் பொருந்தக்**
**கற்றோர் புனையும் பெற்றியது''**

இத்தகைய சிறப்புக்கள் அனைத்தையும் இந்நூலின் கண் காணலாம்.

இப்பகுதியில் ஏழு திருமணங்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் ருக்மணி, ஜாம்பவதி, சத்தியபாமா, நப்பின்னை இவர்களைக் கண்ணபிரான் மணந்த அழகிய சித்திரங்கள். அடுத்தபடியாக கிருஷ்ணன் மகன் பிரத்யும்னன், மாயைவதியை மணந்த காதல் சித்திரம். உஷை கிருஷ்ணனின் பேரனாகிய அநிருத்தனை மணந்து மாயா ஜால காதல் சித்திரம். சுபத்திரை கண்ணனின் உடன் பிறந்தவள். இவளைத் துரியோதனனுக்கு மணம் முடித்து வைக்க வேண்டும் என்பது பலராமனின் எண்ணம். ஆனால் சுபத்திரை தனஞ்சயனையே மணக்கவேண்டுமென்றுவிரும்பினாள். அவள் விருப்பப்படியே கண்ணன் ரகசியமாக அருச்சுனனுக்கு மணமுடித்து வைத்த அற்புதச் சித்திரம். ஆகவே இந்த ஏழு தெய்வீக மணங்களும் இலக்கிய நயம் குன்றாமல் கதைப் போக்கில் கீழே விவரிக்கப்பட்டுள்ளன. படித்து இன்புறுவோமாக!

## 1. ருக்மணி :

கிருஷ்ணாவதாரம் என்னும் பகுதியில் ருக்மணி கல்யாணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது.

## 2. மாயாவதி :

மன்மதன் சிவபெருமானால் எரிக்கப்பட்ட பிறகு, மீண்டும் உருவம் பெறும் பொருட்டு ஸ்ரீகிருஷ்ணனுக்கும்

ருக்மணிக்கும் புத்திரனாக வந்து பிறந்தான். இதையறிந்த சம்பாசுரன் பிரத்யும்னன் என்னும் அக்குழந்தையை கடலில் எறிந்துவிட்டான். மன்மதனுடைய மனைவியான ரதியை அடைய வேண்டுமென்ற எண்ணத்தால் அசுரன் அவளைத் தூக்கி வந்து தன் அரண்மனையில் வைத்திருந்தான்; அவள் தான் மாயாவதி.

சமுத்திரத்தில் விழுந்த குழந்தையை மீன் ஒன்று விழுங்கியது. மீனின் வயிற்றில் குழந்தை பத்திரமாக இருந்தது. ஒருநாள் செம்படவன் வலையில் அம் மீன் சிக்கியது. அம் மீன் மிக அழகாய் இருந்தமையால் செம்படவன் அதைச் சம்பராசுரனிடம் கொடுத்தான். அசுரன் மகிழ்ந்து சமையற்காரனிடம் கொடுத்தான் சமையல் செய்ய மீனை அரிந்தபோது அதன் வயிற்றில் பிரகாசமான குழந்தை இருப்பதைக் கண்டான் சமையற் காரன். அதை எடுத்து மாயாவதியிடம் கொடுத்தான். அவள் அதை அன்பாய் வளர்த்து வந்தாள். அக் குழந்தை தன் மணாளன் என்பதை அவள் அறிவாள். இச் செய்தியை அசுரன் அறியான்.

ஒரு நாள் நாரதர் மாயாவதியின் அந்தப் புரத்திற்கு வந்தார். முனிவரை நன்கு வரவேற்றாள்; உபசரித்தாள்; வணங்கினாள். முனிவர் குழந்தையைக் கண்டதும் அவன் யாரென்பதைப் புரிந்து கொண்டார். அவர் முக்காலமும் முணர்ந்த ஞானி; திரிலோக சஞ்சாரி.

''மாயாவதி, இக் குழந்தை யார் என்று தெரியுமா? இவன்தான் உன் மணாளனான மன்மதன். கிருஷ்ணனுக்கும் ருக்மணிக்கும் பிரத்யும்னன் என்னும் பெயரோடு பிறந்துள்ளான். இதை யாரிடமும் சொல்ல வேண்டாம். இவனுக்கு யௌவனம் வரும்வரை விரதம் அனுஷ்டிப்பதாகச் சொல்லி, அசுரனுடைய எண்ணத்திற்குத் தடை போட்டு வா. பின்னர் இவனைக் கொண்டே சம்பரனைக் கொன்று துவாரகை சென்று வாழலாம்?'' என்று கூறிச் சென்றார் நாரதர்.

சம்பராசுரன் மாயாவதியை அழைத்து தன்னை மணக்கு மாறு வற்புறுத்தினான். ''அரசே! நான் ஒரு விரதம் அனுஷ்டித்து வருகிறேன். அது முடிந்ததும் தங்கள் விருப்பப் படி தங்களை மணந்து கொள்கிறேன். அந்த விரதத்தை பதினைந்து ஆண்டுகள் அனுஷ்டிக்க வேண்டும். அதுவரை தாங்கள் பொறுத்திருக்க வேண்டுகிறேன்'' என்றாள். அதை உண்மை என்று அவன் நம்பியிருந்தான்.

பிரத்யும்னன் வளர்ந்து யௌவன பருவத்தை அடைந் தான். ஒரு நாள் மாயாவதி அவனிடம் எல்லாச் செய்தி களையும் கூறி, தன்னை மனைவியாக ஏற்றுக்கொள்ளுமாறு. வேண்டினாள். பிரத்யும்னன் சம்பராசுரனிடம் சென்று அவனைச் சண்டைக்கு அழைத்தான். அசுரன் கதையைச் சுழற்றி அவன்மீது வீசினான் பிரத்யும்னன் வரப்பிரசாதம் பெற்றவன். தன் கதையால் அதைத் தவிடு பொடியாக்கி னான். அசுரன் மாயா ஜாலங்களில் வல்லவன். கல்மழை பொழியச் செய்தான். பிரத்யும்னன் அதைத் தடுத்து நிறுத்தினான். கத்தியால் அசுரனுடைய மண்டையைப் பிளந்தான். அசுரன் அலறிக் கொண்டே உயிரை விட்டான்.

தேவர்கள் மகிழ்ந்து மலர்மாரி பொழிந்தனர். பிரத்யும் னன் மாயாவதியின் அந்தப்புரத்திற்குச் சென்று அவளை அழைத்துக் கொண்டு ஆகாய மார்க்கமாக துவாரகையை அடைந்தான். அவன் தோற்றத்தில் கிருஷ்ணன் போலவே இருந்தமையால் துவாரகை வாசிகள் அவனைக் கண்டு திகைப்படைந்தனர். நாரதர் தோன்றி விளக்கம் கூறினார். காணாமற்போன குழந்தை யௌவன பருவமுற்று, திரும்பி வந்ததைக் கண்டு ருக்மணி அக மகிழ்ந்தாள்.

ஸ்ரீ கிருஷ்ணன், வசுதேவர், தேவகி முதலானோரைக் கலந்து பேசி ஒரு சுபமுகூர்த்தத்தில் பிரத்யும்னனுக்கும் மாயாவதிக்கும் திருமணம் செய்து வைத்தார்.

## 3. ஜாம்பவதி :

சத்திராஜித்து மன்னன் சூரியனைக் குறித்துத் தவஞ் செய்து சியமந்தகம் என்ற மணியைப் பெற்றான். அது தெய்வீக சக்தி வாய்ந்தது. நாள்தோறும் அவனுக்குத் தேவையான தங்கத்தை அளித்து வந்தது. அதனை அணிந்து இருப்பவர் நோயின்றி வாழ்ந்திருப்பார் என அறிந்து அதை மாலையில் இணைத்து கழுத்தில் அணிந்து கொண்டான்.

ஒரு சமயம் கிருஷ்ணன் அம்மணியைப் பார்த்தார். அம்மணியை உக்கிரசேனருக்குத் தருமாறு கேட்டார். மன்னன் அதன் மீதிருந்த ஆசையால் கொடுக்க மறுத்து விட்டான். ஒரு நாள் அவன் சகோதரன் பிரசேனன் வேட்டையாட கானகஞ் சென்றான். அப்போது சிய மந்தகமணி அவன் கழுத்தில் இருந்தது. ஒரு சிங்கம் அவனைக் கொன்று, மணியை எடுத்துச் சென்றது. வழியில் ஜாம்பவான் அதைக் கண்டார். சிங்கத்தைக் கொன்று அம் மணியைத் தன் குழந்தையின் தொட்டிலில் கட்டி வைத்தார்.

இராமாயண காலத்தில் கரடி உருவில் இவர் இராம னுக்கு உதவியவர். ஏன், இவர் சிரஞ்சீவி அதாவது வெகு காலம் வாழ்ந்தவர். இவர் மகள்தான் ஜாம்பவதி.

வேட்டையாடச் சென்ற தம்பி திரும்பி வராததால் சத்திராஜித்து மிக வருந்தினான். மணியைக் கவரும் நிமித்தம் கிருஷ்ணனே கொன்றிருப்பானோ என்றும் ஐயுற் றான். இச்செய்தி கிருஷ்ணனுக்கு எட்டியது. வீண் பழி தன்னைச் சூழ்ந்ததே என்று வருந்தி, கிருஷ்ணன் பிரசேன னைத் தேடிச் சென்றார். சிங்கம் மாண்டு கிடந்தது. மணி யைக் காணவில்லை. சிங்கத்தின் காலடிகளைப் பின் தொடர்ந்து சென்றார். குகையினுள் இருந்த தொட்டிலில் மணி தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டார்.

ஜாம்புவான் அங்கு வந்து சேர்ந்தார். ஒருவரை யொருவர் அதற்கு முன் பார்க்காமையால் சண்டை

நடந்தது. கடும் போராக மூண்டது. ஜாம்புவான்களைப் படைத்தார். தமக்குச் சமமாகப் போரிட வல்லவர் யார் என்பதைப் பற்றிச் சிந்தித்தார். கிருஷ்ணனை இன்னார் என்று யூகித்தறிந்தார். சண்டையிடுவதை நிறுத்தி அவர் அவர் பாதங்களில் விழுந்து வணங்கினார்.

கிருஷ்ணன் ஜாம்புவானை ஆலிங்கனம் செய்து, மணியைத் தேடி வந்ததாகக் கூறினார். வாசகர்களுக்கு ஒன்று கூற வேண்டும். ஆலிங்கனம் செய்தல் என்பது ஒருவரையொருவர் நட்பு முறையில் கட்டித் தழுவுதல். இது பழங்கால வழக்கு. இப்போதும் நண்பர்களாய் இருப்பவர்கள் சந்திக்கும்போது இவ்வாறு கட்டித் தழுவிக் கொள்வதைக் காண்கிறோம். இது அன்பின் பெருக்கு.

ஜாம்புவான் மணியை எடுத்து வந்து பகவானுடைய பாதங்களில் சமர்ப்பித்தார். அதனோடு தன் மகள் ஜாம்பவதியை மனைவியாக ஏற்றுக் கொள்ளுமாறு விண்ணப்பித்துக் கொண்டார். கிருஷ்ணன் அவ்வாறே ஜாம்பவதியை துவாரகைக்கு அழைத்துச் சென்று திருமணம் செய்து கொண்டார். மணியைச் சத்திராஜித்து மன்னனிடம் ஒப்படைத்து விட்டார்.

## 4. சத்திய பாமா

சத்திராஜித்து மிகுந்த வேதனைக்குள்ளானான். அனாவசியமாகக் கிருஷ்ணன்மீது சந்தேகப்பட்டோமே என்று வருந்தினான். தன் குமாரத்தி சத்தியபாமாவையும் சியமந்தக மணியையும் கிருஷ்ணனுக்கு அர்ப்பணித்து ஏற்றுக் கொள்ள வேண்டுமென வேண்டினான்.

கிருஷ்ணன் சத்தியபாமாவை மட்டும் ஏற்றுக் கொண்டார். மணியை வேண்டாமென்று சொல்லிவிட்டார். இதற்கிடையில் அக்ரூரரும் இருதவர்மரும் சத்தன்வன் என்பவனிடம் சென்று மணியைப்பற்றிக் கலகம் செய்தனர். அவன் சூரன்; பெருவலிமையுடையவன். அம் மணி தனக்கு வேண்டுமென விரும்பினான். அவர்கள் வார்த்தைகளால் மதி மயங்கிப் போனான்; சத்தன்வன் இரவில் சென்று,

தூங்கிக் கொண்டிருந்த சத்திராஜித்துவைக் கொன்று சியமந்தக மணியை அபகரித்துக் கொண்டான்.

தந்தையின் மரணத்தைக் கண்டு சத்தியபாமை மிகவும் துயருற்றாள். தந்தையின் உடலைப் பத்திரப்படுத்திவிட்டு, அஸ்தினாபுரம் சென்றிருந்த கிருஷ்ணனைக் காண விரைந்தாள். நடந்ததைக் கூறினாள்.

கிருஷ்ணன் அவளுக்கு ஆறுதல் கூறி, துவாரகைக்குத் திரும்பினார். மாமனாருக்கு மகன் இல்லாததால் இவரே அவனுடைய உத்திரகிரியைகளைச் செய்தார். அதன் பின்னர் சத்தன்வனைத் தேடிச் சென்றார். அவன் அக்ரூரர் கிருதவர்மர் ஆகிய இருவரின் உதவியை நாடினான். அவர்கள் மறுத்துவிட்டனர். சத்தன்வன் மணியை அக்ரூரரிடம் கொடுத்துவிட்டு தலைமறைவாக ஓடிவிட்டான்.

கிருஷ்ணன் அவனைத் தேடிச் சென்று சக்ராயுதத்தால் அவன் தலையைத்துண்டித்தார். அவனிடம் சியமந்தக மணி இல்லை. துவாரகை திரும்பினார். கிருஷ்ணன் தன்னிடம் மணியைக் காட்டவில்லையே என்று பலராமர் கோபித்துக் கொண்டு விதர்ப்ப நாட்டிற்குச் சென்றார்.

கிருஷ்ணனே மணியை ஒளித்து வைத்திருக்கிறார் என்று துவாரகை மக்கள் நம்பினர். அக்ரூரர் கிருஷ்ணனுக்குப் பயந்து காசிக்குத் தீர்த்த யாத்திரை சென்றுவிட்டார். பின்னர் அக்ரூரரை வரவழைத்து, மக்கள் முன்னிலையில் மணி அவரிடமே இருக்கிறதென்பதை கிருஷ்ணன் நிரூபித்துக் காட்டினார். சந்தேகம் நிவர்த்தியாயிற்று.

## 5. நப்பின்னை

அயோத்தியின் அரசன் நக்னஜித்து; அவனுக்கு நப்பின்னை என்ற பெண் இருந்தாள். அவளுடைய வேறு பெயர் சத்தியவதி என்பது. மன்னர்கள் பலர் அவளை மணக்க விரும்பினர். மன்னனையும் அணுகிக் கேட்டனர். ஒருவரை விடுத்து மற்றவருக்குக் கொடுத்தால் விரோதம்

வரும் என்று மன்னன் பயந்தான். யசோதையின் சகோதர னான கும்பாண்டன் என்பவனிடமிருந்த ஏழு காளைகளை கொண்டுவரச் செய்தான். ஏழு காளைகளையும் அடக்கு கிறவனுக்கே தன் மகள் உரியவள் என்று அறிவித்தான்.

மன்னர்கள் பலர் முயன்று தோல்வியுற்றனர். இச் செய்தியை அறிந்து கிருஷ்ணன் அயோத்திக்கு வந்தார். நக்னஜித்து அவரை வரவேற்று உபசரித்தான். கிருஷ்ண னுடைய பேரழகைக் கண்டு நப்பின்னை அவரையே மணாளனாக அடைய வேண்டுமென்று பிரார்த்தித்தாள். கிருஷ்ணன் ஒரே சமயத்தில் ஏழு கிருஷ்ணனாக உருவெடுத்து காளைகளை அடக்கினார். நக்னஜித்து மகிழ்ச்சிக் கடலில் மிதந்தான். நப்பின்னை பிராட்டியை அவருக்கு மண முடித்து வைத்தான்.

## 6. உஷை

மகாபலிச் சக்கரவர்த்தியின் மகன் பாணாசுரன். அவன் சிவபக்தன். அவரிடம் பல வரங்களைப் பெற்றவன். அவன் நகரைச் சிவபெருமான் பாதுகாத்து வந்தார். இது அவன் பெற்ற வரங்களுள் ஒன்று. தன்னிகரற்றவனாய் அவன் விளங்கி வந்தான்.

பக்தனாக இருந்தாலும் அகம்பாவத்தால் அவன் தோள்கள் தினவெடுத்தன. அவனுக்கு உஷை என்ற பெண் இருந்தாள். அவள் சிறந்த அழகுடையவள். அவள் ஒருநாள் அயர்ந்து தூங்குகையில் ஒரு அழகிய வாலிபனோடு இன்பம் நுகர்வதாகக் கனவு கண்டாள். விழித்து எழுந்தாள். அந்த உருவம் அவள் மனத்தில் பதிந்துவிட்டது. அவனையே அடைய வேண்டுமென்று ஏங்கினாள்.

தோழிகள் உஷையின் நிலையைக் கண்டு, காதல் நோய் அவளைப் பற்றிக் கொண்டு இருப்பதை உணர்ந்தனர். காதலன் யாரென வினவினர். அவள் கனவில் கண்ட கட்டழகனின் அங்க லட்சணங்களை விவரித்தாள்.

உஷையின் உயிர்த் தோழி சித்திரலேகை என்பவள். பல தேசத்து அரச குமாரர்களின் சித்திரங்களைத் தலைவிக்குக் காட்டினாள். அவற்றுள் துவாரகை வாசனாகிய கண்ணனுடைய பேரனும், பிரத்யும்னனின் மகனுமான அநிருத்தனுடைய படமும் ஒன்று. அதைக் கண்டதும் உஷை மெய்ம் மறந்து நின்றாள்; தலைகுனிந் தாள். கனவில் கண்ட ஆணழகன் அவனே என முடிவு செய்தாள் சித்திரலேகை.

''அரச குமாரியே, கவலைப்பட வேண்டாம். உன் காதலனை இன்றிரவு உன்னிடம் கொண்டு வந்து சேர்ப்பது என் பொறுப்பு" என்று ஆறுதல் கூறினாள். அவள் மாயா ஜாலங்களில் வல்லவள். அன்றிரவு வான் வழியே துவார கைக்குச் சென்றாள். திரஸ்கரணி என்ற மாயவித்தையால் கட்டிலில் உறங்கிக் கொண்டிருந்த அநிருத்தனைக் கட்டி லோடு எடுத்துச் சென்று உஷையிடம் சேர்ப்பித்தாள்.

உஷையின் ஆனந்தத்திற்கு அளவு இல்லை. இருவரும் இன்பக் கடலில் திளைத்தனர். இவ்வாறு நாட்கள் பல கழிந்தன. அந்தப்புரத்தில் நடந்து வரும் ஆனந்த நாடகம் வெளியாருக்குத் தெரியாது. உஷை கருவுற்றாள். அவளது உடலில் தோன்றிய மாற்றங்கள் பாணாசுரன் காதுக்கு எட்டியது. பாணாசுரன் கடுங்கோபங் கொண்டு அந்தப் புரத்திற்கு ஓடி வந்தான். உண்மையை நேரில் கண்டான்.

உஷையும் அநிருத்தனும் சொக்கட்டான் ஆடிக் கொண் டிருந்தனர். அவனைச் சிறையில் அடைக்குமாறு சீறினான் பாணாசுரன். வீரர்கள் நெருங்கினர். அநிருத்தன் வீரர் களிடமிருந்த ஆயுதங்களைப் பிடுங்கி அவர்களைத் தாக்கி னான். பாணாசுரன் அநிருத்தனை நாக பாசத்தால் பிணைத்துச் சிறையில் அடைத்தான்.

அந்தப்புரத்தில் காவல் மிகுந்தது. உஷை செய்வ தறியாது வருந்தினாள். துவாரகையில் அநிருத்தனைக் காணவில்லையென்று ருக்மணி முதலானோர் தவித்தனர்.

நாலா பக்கங்களில் ஆட்களைப் போக்கினர். அவர்களுள் ஒருவன் வந்து, அநிருத்தன் சோளிதபுரத்தில் பாணாசுர னால் சிறை வைக்கப்பட்டிருக்கும்செய்தியைச்சொன்னான். கிருஷ்ணன் போருக்கெழுந்தார். யாதவசேனை பலராம னின் தலைமையில் புறப்பட்டது. சோளிதபுரம் முற்றுகை யிடப்பட்டது.

அந்நகரம் சிவபெருமானால் காக்கப்பட்டு வந்தது என்று முன்னர் கூறினோம். ஆகவே சிவபெருமான் யாதவ சேனையை எதிர்த்து நின்றார். பாணாசுரன் யுத்த சன்னத் தனானான். இருதரப்பாருக்கும் இடையே கடும் போர் நிகழ்ந்தது. பாணாசுரனது வில், தேர், குதிரைகள், சாரதி யாவும் நிர்மூலமாயின. பாணாசுரனுக்கு ஆயிரங்கைகள் என்று புராணம் கூறுகிறது. அவைகளும் பாணங்களைப் பிரயோகித்தன. பாணாசுரன் புறமுதுகிட்டு ஓடினான்.

சிவபெருமான் கிருஷ்ணனை நோக்கி, ''நாராயணா, அசுரனின் ஆணவம் அழிந்துவிட்டது. அவனுடைய கைகளுள் நான்குதாம் எஞ்சியுள்ளன. அவன் பிரகலாத னுடைய குலத்தில் பிறந்தவன். அவனைக் கொல்லாமல் காப்பாற்றவேண்டும்'' என்று வேண்டினார். கண்ணபிரான் கோபந்தணிந்தார். பாணாசுரன் அநிருத்தனையும் உஷை யையும் அழைத்து வந்து கண்ணனிடம் ஒப்படைத்தான்.

''பிரபோ! நான் செய்த பிழையை மன்னியுங்கள். காதலர்களுக்குத் திருமணம் செய்து வையுங்கள்'' என்று வேண்டி நின்றான்.

மணமக்களைத் துவாரகைக்கு அழைத்துச் சென்று அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தார் கிருஷ்ண பரமாத்மா.

**சுபத்திரை :**

இந்திர பிரஸ்தத்தில் பாண்டவர்கள் ஆட்சி செய்து வந்தனர்; ஒரு சமயம் அர்ச்சுனன் தீர்த்தம் செய்யப் புறப்

பட்டான். தென்னாட்டு யாத்திரையை முடித்துக் கொண்டு துவாரகைக்கு அருகில் உள்ள பிரபாச தீர்த்தத்திற்கு வந்தான். அதில் நீராடி அன்றிரவு அங்கு தங்கினான். அப்போது கிருஷ்ணனுடைய தங்கை சுபத்திரையின் நினைவு அவனுக்கு வந்தது. அவளுடைய பேரழகைப் பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்தான். அதே நினைவாகவே அன்றிரவைக் கழித்தான், கிருஷ்ணனைத் தியானித்தான்!

கிருஷ்ணன் அங்கு வந்து சேர்ந்தார். பின் விருப்பத்தைத் தெரிவித்தான் தனஞ்சயன், அவனைச் சந்நியாசி வேடம் தாங்கச் செய்தார்; ரைவத பர்வதச் சாரலுக்கு அழைத்துச் சென்றார். அவனை மௌனமாய் இருக்கச் செய்து துவாரகைக்குத் திரும்பினார்.

யாதவர்கள் கொண்டாடும் திருவிழா வந்தது. துவாரகை வாசிகள் புத்தாடை அணிந்து மலைச்சாரலுக்கு வந்தார்கள். சுபத்திரையும் வந்தாள். அவளது பேரழகைக் கண்டு காதலுற்றான் அர்ச்சுனன். அவளைத் தனக்கு மணமுடித்து வைக்குமாறு கிருஷ்ணனை வேண்டினான். 'ஆகட்டும்' என்று ஆறுதல் கூறினார் பரந்தாமன்.

சில நாட்கள் கடந்தன. ஒருநாள் வேட்டையாட வந்த பலராமன் அங்கு வந்து சேர்ந்தார். முனிவர் வேடத்திலிருந்த அர்ச்சுனனை உண்மைத் துறவியென்று நமஸ்கரித்தார். "மழைக் காலமானதால் தாங்கள் வேறெங்கும் செல்ல வேண்டாம். எங்கள் அரண்மனைக்கு வாருங்கள். அங்கு தங்கியிருக்கலாம்" என்று சொல்லி அழைத்துச் சென்றார். சுபத்திரையை முனிவருக்குப் பணிவிடை செய்ய நியமித்தார். பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோலாயிற்று அருச்சுனனுக்கு. பலராமன் வெள்ளை உள்ளம் படைத்தவர். பின் விளைவை எண்ணிப் பார்க்கமாட்டார்.

ஒரு நாள் சுபத்திரை சந்நியாசியுடன் உரையாடிக் கொண்டிருந்தாள். "சுவாமி, தாங்கள் தீர்த்த யாத்திரை செய்து கொண்டு வருகிறீர்களே. இந்திர பிரஸ்தம்

போயிருந்தீர்களா? அங்கு என் அத்தை குந்திதேவியைப் பார்த்தீர்களா?'' என்று விசாரித்தாள்.

''குழந்தாய்! நல்ல வேளை நினைவுபடுத்தினாயே. அங்கு அனைவரும் சுகம். என்னை நன்றாய் உபசரித்தார்கள்'' என்றான் அர்ச்சுனன்.

''தீர்த்த யாத்திரை சென்ற என் அத்தை மகன் திரும்பி விட்டாரா? அவரைப் பார்த்தீர்களா?'' என்றாள் சுபத்திரை.

''தீர்த்த யாத்திரைக்குச் சென்றவர் இப்போது துவாரகையில்தான் இருக்கிறார்'' என்றான் அர்ச்சுனன்.

''அப்படியா நான் பார்க்கவில்லையே! எங்கு தங்கியிருக்கிறார்?'' என்று வியப்புடன் கேட்டாள் சுபத்திரை.

''உனக்குத் தெரியவில்லையா? உன் எதிரில்தானே இருக்கிறார்'' என்றார் அர்ச்சுன சந்நியாசி.

''சுவாமி, தாங்களா!'' என்று நாணித் தலை குனிந்தாள். அவ்விடத்தை விட்டு அகன்றாள். அவனையே மணக்க வேண்டும் என்ற ஆவல் அதிகரித்தது. பலராமன் இதற்கு ஒத்துக் கொள்ளமாட்டார் என்று கருதி, இத்திருமணத்தை ரகசியமாகவே முடிக்க வேண்டுமென்று கிருஷ்ணன் குடும்பத்தாருடன் கலந்து முடிவு செய்தார்.

அதற்கு ஏற்றாற்போல் அடுத்துள்ள தீவுக்கு நகர மக்கள் விழா நடத்தச் சென்றனர். குறிப்பிட்ட சுப தினத்தில் இந்திரன், வசுதேவர், தேவகி இவர்கள் முன்னிலையில் சுபத்திரைக்கும் அருச்சுனனுக்கும் திருமணம் நடந்தது. பொழுது விடிவதற்குள் அர்ச்சுன சந்நியாசியும் சுபத்திரையும் மணக்கோலத்தோடு இந்திரப் பிரஸ்தத்திற்குப் புறப்பட்டுச் சென்றனர்.

இச்செய்தி கேட்டு பலராமன் கொதித்து எழுந்தார். கிருஷ்ணன் அண்ணனுக்கு ஆறுதல் கூறினார். ''நாம் திருமணத்தை அங்கீகரிப்பதே உத்தமம்'' என்று யோசனை

கூறினார். அதுவே சரியென்று பலராமன் கோபந்தணிந்தார். சீர் வரிசைகளை எடுத்துக் கொண்டு இந்திர பிரஸ்தம் சென்றார். எல்லோரும் திருமணத் தம்பதிகளுக்கு வாழ்த்துக் கூறினர்.

> **"கையி லாழி எடுத்தருள் கண்ணனை**
> **மையு லாமழை வண்ணனைப் பாண்டவர்**
> **உய்ய வந்து உதயம் செய் பானுவை**
> **வைய முண்ட வாயனை வாழ்த்துவாம்."**

## நாரதர் கண்ட காட்சி

துவாரகையில் பல கோபிகா ஸ்திரீகளுடன் கிருஷ்ணன் வசித்து வருவதைக் கண்ட நாரதருக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. கிருஷ்ணன், அவர்கள் அனைவரையும் எவ்வாறு திருப்திபடுத்துகிறார் என்று பார்க்கவிரும்பினார். அவர்கள் சக்களத்திச் சண்டையின்றி எவ்வாறு வாழ்க்கை நடத்துகிறார்களோ என ஆச்சரியப்பட்டார். ஆகவே கிருஷ்ணனின் குடும்ப வாழ்க்கையைக் காண துவாரகைக்கு வந்தார்.

முதலில் ருக்மணியின் இல்லத்தில் நுழைந்தார். அங்கே கிருஷ்ணன் ஊஞ்சலில் அமர்ந்து ருக்மணியுடன் உரையாடிக் கொண்டிருந்தார். நாரதரைக் கண்டதும் இருவரும் எழுந்து வந்து வரவேற்று உபசரித்தனர்.

அதன் பிறகு சத்தியபாமையின் கிரகத்திற்குச் சென்றார். என்ன ஆச்சரியம்! அங்கும் கிருஷ்ணன் சத்திய பாமையுடன் காணப்பட்டார். பிள்ளைகளுடன் இருவரும் விளையாடிக் கொண்டிருந்தனர். கிருஷ்ணன் நாரதரை மகிழ்ச்சியோடு வரவேற்றார். அவரைச் சற்று முன்பு ருக்மணியின் கிரகத்தில் பார்த்ததைப் பற்றி அவர் ஒரு வார்த்தைகூடப் போசவில்லை. நாரதருக்கு ஆச்சரியமாக இருந்தது.

அங்கிருந்து புறப்பட்டு நப்பின்னையின் வீட்டுக்குச் சென்றார். அங்கேயும் கிருஷ்ணனே அவரை வரவேற்றார்.

அப்போதுதான் பலகாரம் சாப்பிட அமர்ந்திருந்தார். நாரதரையும் அமர்த்தி அவருக்கும் பலகாரம் கொடுத்து உபசரித்தார்.

ஜாம்பவதியின் அரண்மனையில் பகவான் தோட்டத்தில் அவளோடு மலர் பறித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். மற்றொருத்தியின் வீட்டிலோ பகவான் நித்திரையில் இருந்தார். இவ்வாறாக ஒரே நேரத்தில் ஒவ்வொருவர் வீட்டிலும் பல்வேறு காரியங்களில் ஈடுபட்டு அவர்களை மகிழ்வித்து வருவதைக் கண்ட நாரதருக்கு, பகவானுடைய பிரபாவம் நன்கு விளங்கிவிட்டது.

''பரந்தாமா'' என்று இருகைகளையும் கூப்பி நாராயணனைத் தியானித்தவாறு மனத்தாலே வணங்கினார். ''உன் சொரூபத்தை நன்கு அறிந்திருந்தும் உன் விஷயத்தில் இவ்வாறு சந்தேகங் கொண்டேனே! ஏ! கிருஷ்ணா! சகல ஜீவராசிகளிலும் பரந்து நிற்கும் உனக்கு இது ஒரு பொருட்டு அல்ல என்பதை உணராது போய் விட்டேனே!'' என்று வியந்தவாறு புறப்பட்டார்.

# 13. பலராம அவதாரம்

**தோற்றுவாய் :**

பலராம அவதாரம் திருமாலின் ஒன்பதாவது அவதாரம். இது எட்டாவது அவதாரத்தினின்றும் குணாதிசயங்களில் மாறுபட்டது. வசுதேவருக்கு மனைவியர் இருவர். மூத்த மனைவி ரோகிணியின் மைந்தன் பலராமன், இளைய மனைவி தேவகியின் மைந்தன் கிருஷ்ணன். பலராமன் வெண்மை நிறம். கிருஷ்ணன் நீலமேக சாமள வண்ணன். அதாவது கருநிறம். நிறத்திற்கு ஏற்றவாறு பலராமர் வெள்ளை உள்ளம் படைத்தவர். அதாவது யதார்த்தவாதி, எதையும் நம்பிவிடுவார். ஆனால் கிருஷ்ணன் கபட நாடக சூத்திரதாரி. தன் காரியத்தைச் சாதிக்க, குறுக்கு வழியைக் கையாள்வார்.

இவ்விருவரும் மகாபாரத காலத்தில் வாழ்ந்தவர் களாதலால் இவர்களின் வரலாறுகள் மகாபாரத கதையில் ஒன்றிப் போயுள்ளன. பலராமன் துரியோதனனிடம் அனுதாபம் கொண்டவர். தன் தங்கை சுபத்திரையை அவனுக்கு மணம் முடித்து வைக்க எண்ணியிருந்தார். ஆனால் கிருஷ்ணன் ரகசியமாய் அவளை அருச்சுனனுக்கு மணமுடித்து வைத்து விட்டார். செய்தியறிந்து பலராமர் ஆவேசங் கொண்டார்: திருமணம் முடித்த பிறகு வேறு ஒன்றும் செய்வதற்கில்லையென்று அத்திருமணத்தை அங்கீகரித்து விட்டார்.

பாரதப் போரில் பலராமன் கௌரவர் பக்கமும், கண்ணன் பாண்டவர் பக்கமும் இருந்து உதவி செய்வதென முடிவாயிற்று: பலராமர் பலசாலி. தன் கலப்பை ஆயுதத்தைக் கொண்டு எல்லாவற்றையும் அழிக்க வல்ல ஆற்றல் பெற்றவர். ஆகவே கண்ணபிரான் சூழ்ச்சி செய்து அவரைத் தீர்த்த யாத்திரைக்கு அனுப்பிவிட்டார்.

அவர் தீர்த்த யாத்திரையை முடித்து விட்டுத் திரும்பி வந்தபோது பாரதப்போர் முடியும் கட்டம். பதினெட்டாம் நாள் பீமசேனன் அதர்ம வழியைக் கையாண்டு துரியோதனனுடைய தொடையில் அடித்து அவனை வீழ்த்தினான். இடுப்பிற்குக் கீழ் அடிக்கக் கூடாது என்பது யுத்த தர்மம். இந்த அநியாயத்தைக் கண்டார் பலராமர். பீமன் மீது வெகுண்டெழுந்தார். கண்ணபிரான் குறுக்கிட்டு "அண்ணா! துரியோதனன் இதுவரை பாண்டவர்களைப் பல அதர்ம வழிகளைக் கையாண்டு துன்புறுத்தியிருக் கிறான். ஆகவே அவனிடம் யுத்த தர்மத்தைக் கடைப் பிடிப்பது அவசியமில்லை" என்று சமாதானம் செய்தார்.

பலராமர், சத்தியபாமா, நாரதர் ஆகிய மூவரும் கர்வங் கொண்டுள்ளனர் என்று கண்ணன் கருதினான். ஆஞ்சநேயரைக் கொண்டு ஒரே சமயத்தில் மூவருடைய கர்வத்தையும் அடக்கினார் என்ற செய்தி ஆஞ்சநேய புராணத்திலும் நாரதர் புராணத்திலும் உள்ளது.

இவருடைய வாழ்க்கையின் பெரும் பகுதி முன் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. தீர்த்த யாத்திரைப் பகுதியைக் காண்போம்.

## தீர்த்த யாத்திரை :

பாரதப் போருக்கு நாள் குறித்தாயிற்று. ஐம்பத்தாறு தேச மன்னர்களும் இப்பெரும் போரில் பங்கு கொண்டனர் என்று சொல்லப்படுகிறது. சிலர் துரியோதனன் பக்கமும் மற்றவர் பாண்டவர் பக்கமும் சேர்ந்து கொண்டனர். பெருஞ் சோற்றுதியன் என்னும் தென்னாட்டு மன்னன் எவர் பக்கமும் சேராமல் இருதரத்து சேனைகளுக்கும் உணவளித்தான் என்று கூறப்படுகிறது.

யுத்தத்தில் யாருக்கு உதவுவது என்ற பிரச்சனை பலராமரை வருத்தியது. இந்தச் சங்கடத்திலிருந்து மீள அவர் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டு விட்டார். ஒவ்வொரு புண்ணிய தீர்த்தமாகச் சென்று நீராடி அந்தணர்களுக்குத் தான தருமங்கள் செய்தார். நேமி சாரண்யத்திற்கு வந்தார். அங்கு சௌனகர் முதலிய முனிவர்கள் சத்திரயாகம் செய்து கொண்டிருந்தனர். சூதமுனிவரும் அந்த யாகத்திற்கு வந்திருந்தார்.

பலராமரைக் கண்டதும் முனிவர்கள் எழுந்து அவரை வணங்கி உபசரித்தனர். சூத முனிவர் மட்டும் இருந்த இடத்தை விட்டு எழுந்திராமல் அலட்சியமாய் இருந்தார். பலராமருக்குக் கோபம் வந்து விட்டது. "பதினெட்டு புராணங்களையும் உபதேசம் செய்வதால், தாம் மற்றவர் களைவிட உயர்ந்தவர் என்ற எண்ணம் இவருக்கு இருக்கிறது'' என்று பலராமர் தம் கையில் வைத்திருந்த தர்ப் பையை மந்திரித்து மந்திரித்து அஸ்திரமாகப் பிரயோகம் செய்தார். அது அவருடைய தலையை வெட்டி எறிந்தது.

முனிவர்கள் நடுங்கினர். பலராமருடைய பாதங்களில் வணங்கி, ''ஐயனே! தாங்கள் பிழை பொறுத்து அவர் உயிர் பெற்றெழ அருள் செய்யுங்கள்'' என்று வேண்டி நின்றனர்,

பலராமன் மனமிரங்கி அவர்கள் கேட்டுக் கொண்டபடி சூதர் உயிர்பெற்றெழச் செய்தார். சூதர் உறக்கத்திலிருந்து விழித்து எழுந்தவர் போல் எழுந்து பலராமரை நமஸ்கரித்து அறியாமையால் தாம் செய்த பிழையை மன்னிக்கும்படி வேண்டினார்.

இல்லவன், வாதாபி என்ற இரு அசுரர்கள் முன்பு முனிவர்களுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டு இருந் தனர். அவர்களை அகஸ்தியர் சம்கரித்தார். இல்லவன் மகன் பல்லவன் அதேபோல் முனிவர்களுக்குப் பல கொடுமை களைச் செய்து வந்தான். பலராமர் அவனைச் சம்கரித்து முனிவர்களின் துன்பத்தைப் போக்கினார்.

இவ்வாறு தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு குருக்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தார். பீமன் துரியோதனனை வீழ்த்திய காட்சியைக் கண்டு மனம் பதறி னார். வெகுண்டெழுந்தார்; கிருஷ்ண பரமாத்மா அவன் செய்கைக்குரிய காரணங்களை விளக்கிக் கூறி அண்ணனை அமைதியுறச் செய்தார்.

## இறுதிக்காலம் :

பலராமரும் கண்ணனும் துவாரகையில் பன்னெடுங் காலம் அமைதியாய் ஆட்சி செய்து வந்தனர். அவர் களுடைய இறுதிக்காலம் நெருங்கி விட்டது என்பதை உணர்ந்தனர். யாதவர்கள் அருகிலுள்ள பிரபாச க்ஷேத்திரத் தில் நீராடச் சென்றனர். பகவானுடைய மாயையால் தாங்கள் நீராட வந்ததை மறந்து விட்டனர். அளவுக்கு மீறி மது அருந்தினர். மயங்கினர். ஒருவருக்கொருவர் மரியா தைக்குறைவாய் பேசினர்; பேச்சு தடித்து கைச் சண்டையில் இறங்கினர். கோரைப் புல்லைப் பிடுங்கி சண்டையிட்டனர். முனிவர்களுடைய சாபப்படி யாதவ குலம் அழிந்தது. கிருஷ்ணனும், பலராமனும் எஞ்சியிருந்தனர்.

பலராமன் கடற்கரை தீரத்தில் யோகத்தில் அமர்ந்து ஆத்மாவைப் பகவானிடம் நிலைக்கச் செய்தவராய் மனித தேகத்தைத் துறந்து வைகுந்தம் சென்றார்.

# 14. பாரதப் போர்

## வாசகர்களுக்கு :

கண்ணன் பூபாரம் தீர்க்க அவதாரம் செய்தவன். குரு க்ஷேத்திரம் என்ற யுத்த களத்தில் 18 நாள் பெரும் போர் நடந்தது. கௌரவர்கள் 11 அக்ரோணி சேனையுடனும் பாண்டவர்கள் 7 அக்ரோணி சேனையுடனும் போருக்கு ஆயுத்தமானார்கள். 'பாரத நாட்டிலுள்ள 56 தேச ராஜாக்களும் இப்பெரும் போரில் பங்கு கொண்டனர். இது மகாபாரதப் போர் என்று வருணிக்கப்படுகிறது.

இதை முன்னின்று நடத்தியவரும் போருக்குக் காரண மானவரும் கண்ணபிரானே ஆவார். இந்த அத்தியாயத்தில் முக்கிய நிகழ்ச்சிகளான கிருஷ்ணனது தூதும் அவர் செய்த கீதோபதேசமும் கர்ணமோட்சமும் விளக்கப்படுகின்றன.

## கிருஷ்ணன் தூது :

தருமபுத்திரன் சூழ்வலி காரணமாகத் துரியோதன னிடம் மாயச் சூதாடி தமக்குரிய சொத்து சுதந்திரங்களைத் தோற்றனன். இங்ஙனம் தோற்றவற்றை மீண்டும் பெற விரும்பினால் பாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்து பதின்மூன்றாவது ஆண்டு எவரும் தம்மை இன்னார் என்று அறியாதவாறு உருமாறி வாழ்ந்து வந்த தால் இழந்த உரிமைகளை ஈவதாகத் துரியோதனன் கூறி யிருந்தான்.

அங்ஙனமே பாண்டவர் ஐவரும் பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும், ஓராண்டு அக்ஞாதவாசமும் கழித்துவிட்டு, தம் உரிமைகளைத் திரும்பப் பெற துரியனிடம் கண்ண

னைத் தூதனாக அனுப்புவதென முடிவு செய்தனர் அதன்படி, சென்றுவர, கண்ணனும் ஒப்புக்கொண்டான்.

## ஆலோசனைக் கூட்டம் :

கண்ணன் துரியோதனன்பால் தூது போவதற்கு முன் தருமனையும் அவன் தம்பிமார்களையும் உடன் வைத்து ஓர் ஆலோசனைக் கூட்டம் நடத்தினான். கிருஷ்ணன் கூட்டத்திற்குத் தலைமை வகித்து ஐவருடைய கருத்துக்களையும் கூறுமாறு பணித்தனன். அவர்களும் அவ்வாறே ஒவ்வொருவராகக் கூறத் தொடங்கினர்.

முதலில் தருமன் கண்ணனை நோக்கி, "கண்ணா! துரியோதனன் போர் வேண்டும் என்று சஞ்சய முனிவரைத் தூது அனுப்பினான். அரசநீதி தவறி உடனே போருக்கு எழுதல் ஆகாது. போரில் இருதரப்பாரும் மடிவர். ஒரே குளத்தில் தாமரையும் அல்லியும் வளர்ந்து பூத்து விளங்குவதுபோல கௌரவ பாண்டவர்களாகிய நாங்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக வாழ்வதே முறை. ஆகவே அவனிடம் சமாதான மொழிகளையே சாற்றி வருக. பெரியோர்களையும் உற்றார் உறவினர்களையும் போரில் வென்று, இவ்வுலகை ஆள்வதைவிட முன்போல் காட்டில் வாழ்வதே நல்லது" என்றான்.

இவ்வாறு தருமன் கூறியதைக் கேட்ட பரந்தாமன், "தரும நந்தனா! போருக்குப் பயந்து காட்டிற்குச் சென்றால் நீங்கள் முன்னர் அரச சபையில் மொழிந்த சபதங்களை எவ்வாறு நிறைவேற்றுவீர்கள்?" என்று தூண்டினான்.

"கண்ணா! நீ கூறுவதும் முறையாகும். ஆகையால் நீ அவர்களிடம் தூது சென்று எங்களுடைய தாய்பாகத்தைக் கேள். நாடு தர மறுத்தால் ஐந்து சிற்றூர்களை யாவது கேள். அவைகளையும் கொடுக்க மறுத்தால் ஐந்து வீடுகளை யாவது தருமாறு கேள். அவற்றையும் தர மறுத்தால் போர் வேண்டு" என்று தருமன் தன் கருத்தைக் கூறினான்.

இவ்வாறு தருமன் கூறியதைக் கேட்ட வீமன் வெகுண் டெழுந்தான். ''கண்ணா! என் அண்ணன் இன்னும் பணிந்து போவது எனக்கு வருத்தமாகவே இருக்கிறது. அரச சபையில் ஏற்பட்ட அவமானத்தைப் போக்கிக் கொள்ள வேண்டாமா? துரியனையும் அவனைச் சார்ந்தவர்களையும் கொன்று நானே அண்ணனுக்கு முடி சூட்டுகிறேன். முன்பு உலூகரைத் தூது அனுப்பியதே போதும்'' என்று வீமன் சினந்து கூறினான்.

தருமன் வீமனுக்குச் சமாதானம் கூறிய பின்னர் அருச்சுனன் கூறலுற்றான்:

''நாம் இதுவரை பொறுத்தது போதும். யார் தூது போனாலும் துரியோதனன் கேளான். கெடுமதி கண்ணுக் குத் தோன்றாது. திரௌபதியின் கூந்தலை முடிக்க வேண்டும். தேவர்களை வெல்லக் கூடிய அஸ்திரங்கள் என்னிடம் உள்ளன. போரிடுவதே தக்கது'' என்றான்.

அதன் பின்னர் நகுலனும், அர்ச்சுனன் கூறியவாறே 'போரிடுவதே தக்கது' என்றான். பரந்தாமன் கடைசியாக, சகாதேவனை நோக்கி, ''உன் கருத்து யாது?'' என்று கேட்டனன். சகாதேவன் பேரறிஞன்; முக்காலமும் உணர்ந்த ஞானி என்றே சொல்லலாம். அவன் புருஷோத் தமனை நோக்கி, ''கண்ணா! நீ நினைக்கிறபடி தூதனாகச் சென்றால்தான் என்ன? துரியன் நாட்டைக் கொடுத்தால் என்ன? கொடுக்காமற் போனால் என்ன? திரௌபதி கூந்தலை முடித்தால் என்ன? விரித்திருந்தால் என்ன? முடிவில் இன்னதுதான் நடக்கும் என்பது எனக்குத்தெரியும். உன் கருத்து எதுவோ அதுவே என் கருத்தும் ஆகும்'' என்று கூறி முடித்தான்.

வசுதேவன் உடனே எழுந்து, சகாதேவனை ஒரு தனி இடத்திற்கு அழைத்துச் சென்று, ''சகாதேவா, பாரதப் போர் நடவாவண்ணம் ஒரு வழி கூறுக'' என்றனன்.

இவ்வாறு கண்ணன் வினவியபோது சகாதேவன் வணங்கி, ''ஐயனே! நீ பாரதப் போரில் யாவரையும் கொன்று, பூபாரம் தீர்க்கவே எண்ணியுள்ளாய். எனினும் என் கருத்தைக் கூறிவிடுகிறேன். கொடிய பாரதப் போரில் நாங்கள் ஈடுபடும்போது எங்களைக் காத்தருள வேண்டும்'' என்று வேண்டினான். அவ்வாறே காப்பாற்றுவதாகக் கண்ணனும் வாக்களித்தான்.

இருவரும் பின்னர் சபைக்கு வந்தனர். சகாதேவன் சமாதானத்தையே விரும்புகிறான் என்று கண்ணன் கூறியவுடன் திரௌபதி கதறினாள். ''சபையில் துச்சாதனன் என் துகிலை உரிந்தபோது இவர்கள் பார்த்துக் கொண்டு தானேயிருந்தார்கள். என் மானத்தைக் காத்தவன் நீ தானே. இன்னமும் சமாதானம் பேசிக் கொண்டிருந்தால் அன்று விரித்த கூந்தலை யான் எப்போது முடிப்பது?'' என்று கண்ணன் திருவடிகளில்வீழ்ந்து அழுதனள்.

இத்துன்பக் காட்சியைக் கண்ட கண்ணன், ''மாதே! வருந்தாதே; நானே தூது சென்று மீண்டதன்பின் உன் கூந்தலை முடிக்க வழி செய்கின்றேன்'' என்று கூறி சாந்தப் படுத்தினான்.

## தூது செல்லுதல் :

மாயவன் தேர்மீது அமர்ந்து வாத்தியங்கள் முழங்க தூது சொல்லப் புறப்பட்டான். மலைகள், பாலைவனங்கள், காட்டாறுகள், நன்செய் புன்செய் நிலங்கள் இவற்றைக் கடந்து சென்றான். இரண்டு நாட்கள் பிரயாணம் செய்து மாளிகைகளும் கோபுரங்களும் நிறைந்த அஸ்தினாபுரம் போய்ச் சேர்ந்தனன்.

அஸ்தினாபுரம் நீர்வளம் மிக்கது. குளங்களில் செந்தாமரை மலர்கள் பூத்திருந்தன. கண்ணன் ஒரு சோலையில் தங்கியிருந்தான். நகரம் அலங்கரிக்கப்பட்டது. வரவேற்புக்குரிய ஏற்பாடுகள் நடைபெற்றன. சகுனி

தடுத்தமையால் துரியோதனன் வரவேற்பில் கலந்து கொள்ளவில்லை.

பீஷ்மர், துரோணர், விதுரர் முதலானோர் பரிவாரங்களோடு சென்று வரவேற்றனர். பரந்தாமன் விதுரர் மாளிகைக்குச் சென்றனன். விதுரர் மகிழ்ந்து கூறியவற்றை வில்லிபுத்தூரார் கூறும் திறம் காண்மின்:

**முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ**
**பன்ன காதிபப் பாயலோ பச்சை ஆலிலையே?**
**சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீ எய்தற்கு**
**என்ன மாதவம் செய்தது இச்சிறுகுடில் என்றான்.**

''இது, முன்பு நீ பள்ளி கொண்டிருந்த திருப்பாற் கடலோ? ஆதிசேஷனாகிய படுக்கையோ? பிரளய காலத்தில் நீ படுத்திருந்த பச்சை ஆலிலையோ? ஓதப்படுகின்ற நான்கு வேதங்களோ? நீ விரும்பி எழுந்தருளியதற்கு இச்சிறு வீடு என்ன பெருந்தவம் செய்ததோ அறியேன்'' என்று விதுரர் பாராட்டி மகிழ்ந்தார்.

விருந்து படைத்தார், உபசரித்தார். அன்றிரவு மாயோன் வந்த களைப்பு நீங்க நன்கு உறங்கி, மறுநாள் துரியோதனன் சபைக்குச் சென்றார்.

வாசுதேவன் துரியோதனன் சபைக்குள் நுழைந்த போது, துரியோதனன் தவிர மற்ற எல்லோரும் எழுந்து வணங்கி வரவேற்றனர். தனக்கென அமைத்த ஆசனத்தில் கண்ணன் அமர்ந்தனன். துரியோதனன், ''ஐய; அஸ்தினாபுரம் வந்தவர், என் அரண்மனைக்கு வராமல் விதுரர் இல்லத்திற்குச் சென்றது ஏன்?'' என்று வினவினான்.

''நான் பாண்டவர்பொருட்டுத் தூதனாக வந்துள்ளேன்; உன் இல்லத்தில் தங்கி, உன் விருந்தினை உண்டு, உன் கருத்துக்கு மாறாக நான் பேச நேர்ந்தால் அஃது ஒழுங்காக இராது. அதன்றியும் ஒருவர் இல்லத்தில் உண்டு, பின் அவரோடு போர் தொடுக்க எண்ணினால் அத்தகையோர்

நரகத்தில் ஆழ்வர்'' என்று சாதுர்யமாகப் பதிலளித்தான் பரந்தாமன். பின்னர் துரியோதன், கண்ணன் வந்த காரியத்தை வினவினான்.

''துரியோதனா! உன் துணைவர்கள் சூதாட்டத்தில் அரசை இழந்தனர். பின்னர் நீ சொன்னபடி 12 ஆண்டு வனவாசமும் ஓராண்டு அக்ஞாத வாசமும் கழித்து வந்துள் ளனர். எனவே அவர்களுக்குரிய தாய பாகத்தைக் கேட்டுப் பெற நான் தூதனாக வந்துள்ளேன். நீ பாண்டவர்களை அழைத்து அவர்களுக்கு உரிய நாடுகளைத் தந்து அவர் களோடு பொருந்தி வாழ்க. இதுதான் நேர்மையான முறை. அதைச் செய். இல்லையேல் அறமும் புகழும் ஆண்மையும் ஏற்படா'' என்று கோவிந்தன் கூறினான்.

இதைக் கேட்ட அரவக் கொடியோன் சீற்றம்கொண்டு, ''பாண்டவர்கள் இன்னமும் காட்டில் திரிவதே முறை. யார் என்ன கூறினும் யான் கேளேன். பாண்டவர் போர் தொடுத்தாலும் சரி; ஈ உட்காரும் இடம்கூட அவர்களுக்குக் கொடுக்க மாட்டேன்'' என்று சிறிதும் இரக்கமின்றி இயம்பினான்.

''மன்னா, பாதி நாட்டினைக் கொடுக்க மறுத்தனை யாயின் ஐவரும் வாழ ஐந்து ஊர்களையேனும் தருக'' என்று இரந்தனன் கண்ணன். இவ்வளவு கெஞ்சிக் கேட்டும் ஒரு வீடுகூட அளிக்க மறுத்தனன் துரியோதனன்.

''மன்னர் மன்னா, ஆண்மையோடு பாண்டவருடன் போரிட எண்ணம் இருக்குமானால் கை போட்டுத் தருக. அதாவது சத்தியம் செய்து தருக'' என்று கேட்டனன்.

இவ்வாறு கூறக் கேட்ட துரியோதனனுக்கு அடக்க வொண்ணாத சினம் பொங்கியது. ''காட்டில் மாடுகளை யும் கன்றுகளையும் மேய்க்கும் இடையனாகிய நீயா, என் குருகுலத்து வாய்மையறியாது இந்த வார்த்தைகளை இச்சபையில் மொழிந்தாய். யானைகள் எதிர்த்தால் சிங்கங்கள் அஞ்சுமோ? அதுபோல, பாண்டவர்கள்

என்னைப் பகைத்துப் போரிட்டால் அதற்கு அஞ்சி யான் பின் அடைவனோ? நாக்கு ஒன்றா? இரண்டா? அப்படி யிருக்க, நான் கைபோட்டுத் தரவேண்டுமோ? பாண்டவர் கள் தம்மை வீரர் என்று கூறிக்கொள்ளத் தகுதியுடைய வரோ? திரௌபதி ராஜசபையில் துகிலுரியப்பட்டபோது பார்த்துக் கொண்டிருந்தார்களே, அவர்களா வீரர்கள்'' என்று இழிவாகக் கூறினான்.

இதைக் கேட்ட கண்ணன், அரவக்கொடியோன் போருக்கு ஆயத்தமாக இருக்கின்றான் என்று முடிவு செய்து கொண்டு சபையை விட்டுப் புறப்பட்டான். விதுரர் இல்லம் வந்து சேர்ந்தான்.

அதன் பின்னர் வாசுதேவன் குந்திதேவி இருக்கும் இடத்தை அடைந்தான். அவளும் பெருமகிழ்ச்சி கொண்டாள். தான் வந்த சேதியையும், போருக்குத் துரியன் ஆயத்தமாயிருக்கிறான் என்பதையும் கூறினான்.

''குந்திதேவி! நீ கர்ணனிடம் சென்று நான்தான் உன்னைப் பெற்ற தாய்' என்று கூறி அவன் வளர்த்து வரும் பாம்புக்கணையை ஒரு முறைக்கு மேல் மறுமுறை அர்ச்சுனன் மீது விடாதிருக்க அவனிடம் வாக்குறுதி பெற்று வருக'' என்று சொல்லி அனுப்பினான் கண்ணன்.

## சதியாலோசனை

இதற்கிடையில் துரியோதனன் சதியாலோசனை செய்தான். ''பாண்டவர்களுக்குக் கண்ணன் பல உதவி களையும் செய்யக்கூடும்; இப்போது இங்கு தனித்து வந்துள்ளான், ஆகவே இவனை என்ன செய்வது?'' என்று சிந்தனை செய்தான். திருதராஷ்டிரன் ''அவனைக் கொல் வதே நல்லது'' என்றான்.

நீதிமுறை பிறழாத விகர்ணன், ''தூதுவர்களைக் கொல்வது தகாது. அது பெரும் பாவம்'' என்று எடுத்துக் கூறினான். விகர்ணன் கொலை செய்யக் கூடாது என்று

தடுத்தமையால் கண்ணனைச் சிறைப்படுத்தலாம் என்ற முடிவுக்கு வந்தனர். அதன் பொருட்டு நில அறை ஒன்று அமைத்து, அது தெரியாதவாறு அதன் மீது விரிப்பு ஒன்றை விரித்து, மேலே ஆசனம் அமைத்து அதன்மீது கண்ணனை அமரச் செய்வதென ஏற்பாடு ஆயிற்று. நிலவறையில் மல்லரை வைத்து இருந்தனர்.

மறுநாள் கண்ணன் சபைக்கு வந்தபோது அவனை அத்தவிசில் அமருமாறு துரியன் கூறினான். இந்தச் சூழ்ச்சி கண்ணனுக்கா தெரியாது? அருகில் சென்றதும் தவிசு முறிந்தது. கிருஷ்ணன் விசுவரூபம் எடுத்தான். தன் காலாலும் கையாலும் மல்லர்களைச் சாடினான். கண்ணனின் தோற்றத்தையும் சீற்றத்தையும் சபையோர் கண்டு நடுங்கினர். கோபம் தணியுமாறு வேண்டினர்.

அதன் பின்னர் கண்ணன் சீற்றம் தணிந்து முன்னிருந்த நிலையில் தோன்றினான். ''துரியா, நீயா என்னைக் கொல்ல முயன்றனை. உன்னையும் உன்னைச் சார்ந்தவர் களையும் கொல்ல வழி தேடுகிறேன். அதனை நீ விரைவில் காண்பாய்'' என்று கூறி சபையைவிட்டுப் புறப்பட்டான்.

இந்திரனை அழைத்து, ''நீ கர்ணனிடம் சென்று அவனுடன் தோன்றிய கவச குண்டலங்களைப் பெற்று வருக. அவைகள் அவனுடன் இருக்கும்வரையில் அருச்சுனன் அவனைக் கொல்ல முடியாது'' என்று கூறிவிட்டு பாண்டவரிடம் வந்து சேர்ந்தான்.

பாண்டவர்களை அமரச் செய்து கண்ணன் தான் தூது சென்ற விவரத்தையும், போருக்கு முடிவாகியிருப்பதையும் விளக்கமாகக் கூறினான். குந்திதேவி, இந்திரன் இவர் களைக் கர்ணனிடம் அனுப்பியதையும் அருச்சுனனுக்குச் சாதகமான சூழ்நிலையை அமைத்துத் தந்ததையும் மொழிந்தனன். முன்னவனே முன் நின்றால் முடியாத பொருள் உளதோ? என்று பாண்டவர்கள் பரந்தாமனைப்

போற்றிப் புகழ்ந்தனர். பாரதப் போருக்கு எல்லா ஆயத் தங்களும் தயாராயின.

## கீதோபதேசம்

பாண்டவர்கள் ஏழு அக்ரோணி சேனையுடனும் கௌரவர்கள் பதினொரு அக்ரோணி சேனையுடனும் குருக்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தனர். இரு தரத்துச் சேனைகளும் கடல் அலைபோல் ஆரவாரம் செய்தன. அது மார்கழி மாதம்.

கண்ணபிரான் தேர் செலுத்த, அத்தேரில் ஏறிக் கொண்டு அருச்சுனன் போர்க்கள நடுவில் வந்து நின்றான். இரு பக்கங்களிலும் திரும்பிப் பார்த்தான். இவ்வளவு சேனை களும் போரில் மடியப் போகின்றனவே என்று ஒரு கலக்கம் உண்டாயிற்று. பாட்டனும், குருவும், நண்பரும் உறவினரும் ஆகிய எல்லோரும் போர்க்களத்தில் மாய்ந் திடும் தோற்றம் உதித்தது. தேகம் நடுங்கிற்று. மனம் குழம்பிற்று. கால்கள் விலவிலத்தன. கைகள் தளர்ந்தன. காண்டீபம் தேர்த்தட்டின் மேல் விழுந்தது.

கண்களில் நீர் பெருகிற்று. ''கண்ணா! நான் போர் புரிய மாட்டேன். என் மனம் தளர்ந்திருக்கின்றது. இத்துணைப் பெரியோர்களையும் கொன்று அடையப் போகும் சுகமென்ன? இந்த ராஜ்யத்தைப் பெற்று வாழ்ந் தாலும் இப்பழியை மறுக்க முடியுமா? நான் வணங்கும் பெரியோர்களைக் கொன்று அதனால் அடையப் போகும் வாழ்வும் ஒரு வாழ்வாகுமா? உலகம் அழியும்வரை அழியாத ஒரு நிந்தையை ஏற்று நான் உயிரோடிருக்க விரும்பவில்லை.

''இந்த அரசு போகத்தைவிட வன வாழ்க்கையே மேலாகத் தோன்றுகிறகிறது'' என்று கூறி தனஞ்சயன் உட்கார்ந்து விட்டான். போர் வேண்டாமென்று புலம் பினான். இதைப் பார்த்துக் கண்ணபிரான் அவன் மனம் தெளிவடையுமாறு கூறுகின்றார்.

''அர்ச்சுனா! நிந்தைக்கு உரியதாகிய இந்த யோசனை உனக்கு எப்படித் தோன்றியது. ஒரு க்ஷத்திரிய வீரனுடைய மனம் தனது தர்மமாகிய துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனத்திலிருந்து பின்வாங்கலாமா? உனது தர்மத்தைச் செய்வதை விடுத்து உலக உயிர்களின் அழிவைப் பற்றி நீ கவலைப்படுகிறாயே! இவற்றை அழிப்பவன் நீயா? உன்னால் ஒருவனை அழிக்கவாவது ஆக்கவாவது முடியுமா?

''இன்று உன் மூலம் இவர்கள் அழியாமல் போனால் என்றைக்கும் நிரந்தரமாக உலகில் இருக்கப் போகிறார்களா! முன்னிருந்த மாந்தாதா முதலான பேரரசர்கள் எல்லோரும் இப்போது இருக்கின்றார்களா? அவர்களை நீ தான் அழித்துக் கொன்றனையோ?

''தோன்றுவதும்,மறைவதும் மாறுவதும் உலக இயற்கையல்லவா? ஒவ்வொன்றும் அதனதன் தன்மைக்கேற்றவாறு தோன்றுகிறது; மறைகிறது; மாறுகிறது. அதை யாராலும் மாற்ற முடியாது. தோற்றத்திற்கும் மறைவிற்கும் இடையில் இருக்கும் கருவிகளே நாம். இதுவன்றி நமக்கு இவற்றில் தொடர்பு ஒன்றுமில்லை.

## உடலும் உயிரும்

''குரு பாட்டன் என்கிறாய்; உடலை அங்ஙனம் குறிக்கின்றாயா? அதற்குள் இருக்கும் உயிரைக் குறிக்கின்றாயா? உடல் என்றால் போர்க்களத்தில் அவர்களின் உடல் வீழ்ந்த பிறகு அவ்வுடலைக் குருவென்று சொல்லி உன் மனையில் வைத்திருப்பாயோ? உயிரைத்தான் குறிக்கின்றேன் என்றால் உயிரை எனக்குக் காட்டு. நீ அதைப் பார்த்ததில்லை.

''உடலின் தன்மை என்ன? தோன்றி மறையும் இயல்புடையது. குருவின் உடலை நீ அப்படியே விட்டு விட்டாலும் பிறகு அது மறையத்தான் போகிறது.

மறையப் போகும் உடலுக்காக ஏன் வருந்துகிறாய்? உயிரைக் குருவாக நினைக்கிறேன் என்றால் உயிரின் தன்மை என்ன? அது அழியாத ஒன்று, அதற்காக நீ ஏன் வருந்துகிறாய்.

"க்ஷத்திரியனாகிய உன்னுடைய சுயதர்மத்தைச் செய்ய ஏன் தயங்குகிறாய்? பார்க்கும்போது காண்பன கேட்பன எல்லாம் மனத்தால் ஏற்படுத்திக் கொண்ட தோற்றந்தான். அம்மனத் தோற்றத்தை நீக்கி விட்டால் நமக்கு உறவு யார்? பகை யார்? இப்படிக் கொள்வதெல்லாம் மாயையாகும்.

**மாயை :**

நம்மில் மாயையன்று ஒரு சக்தி தோன்றியிருக்கிறது. அதிலிருந்துமனம் தோன்றுகிறது. அது இயற்கை ஞானத்தை மறைத்துவிடுகிறது மெய்ஞ்ஞானம் மறைந்து தாய் என்றும் தார மென்றும் தனயர் என்றும் உறவினர் என்றும் மயக்கம் தோன்றி நாம் உழலுகின்றோம். ஐம்பொறிகள், ஐம்புலன்கள், முக்குணங்கள், அறுவகைப் பகைகள் இவைகளை ஆளுகின்ற மனதுக்கு நாம் உட்கட்டு. நமது சுதந்திரத்தை இழந்து மயங்கி உழலுகின்றோம். ஞான விசாரணை செய்தால் உண்மை விளங்கும். அவ்வாறு அறிந்த ஞானிகள் 'அவனே எல்லாம்' என்று உணர்வர்.

**அவதாரங்கள் :**

நீயும் நானுமாகச் சேர்ந்திருந்து இத்தொழிலை இயற்றுவது இந்தப் பிறவியில் மாத்திரமன்று. ஒரு பிறப்பில் நானும் நாராயணனுமாக இருந்தோம்; இன்னொரு பிறப்பில் இலட்சுமணனும் இராமனுமாக இருந்தோம்; இப்பிறப்பில் நீயும் நானுமாக இருக்கின்றோம். ஒவ்வொரு பிறப்பிலும் பரமனிட்ட கட்டளையால் தமது சுயதர்மத்தை

ஆற்றி வருகிறோம். இப்போது மேற்கொண்டிருப்பதும் சுயதர்மம்தான்.

பகைவர்களை, எதிரிகளை, துஷ்டர்களைக் கொல்வது க்ஷத்திரிய வீரனது கடமை. ஒருவன் தன் கடமையைச் செய்வது பாவமாகாது. எதிரியிடம் சாந்தம் காட்டுவது ஞானியின் தர்மம். உதிரியாகிய துஷ்டனைக் கொன்று குடிமக்களைத் துன்பத்தினின்றும் விடுவிப்பது க்ஷத்திரிய தர்மம், உன் கடமை இது. தயங்காதே'' என்று ஞானோப தேசம் செய்தார்.

## மனந்தெளிதல் !

அருச்சுனன் மனந்தெளிந்து உண்மையறிந்து சுயதர்ம வீஷ்டனாகி, வில்லைக் கையிலேந்திக் கொண்டு கண்ண பிரானை நோக்கி, ''சுவாமி! தேவரீரைத் துணையாக அடைந்ததன் பயனைப் பெற்றேன். அஞ்ஞானத்தால் ஒரு கணத்தில் தலைகவிழ்ந்து போகக் கூடிய நிலையிலிருந்த அடியேனை ஆதரித்து சத்உபதேசம் செய்து அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தைப் போதித்து நான் எனது என்ற தர்மத்தைக் கைவிடாதிருக்குமாறு செய்தருளினீர்கள்'' என்று துதித்துப் போற்றினான்.

''இதுவரையில் தேவரீரைச் சாதாரண துணைவனாக மதித்து அநேக தவறுகளைச் செய்துவிட்டேன். மன்னித்து அருள வேண்டுகிறேன்'' என்று சொன்னான். கண்ணபிரான் களித்துப் புன்னகை காட்டி நண்பனை அங்கீகரித்துத் தேரைச் செலுத்தலானான்.

இருவரும் பாண்டவர்களுடன் பிதாமகராகிய பீஷ்ம ரிடம் சென்று அவரை வணங்கினார்கள். பீஷ்மர் அவர் களை ஆசீர்வதித்து அனுப்பினார்.

## கர்ணமோட்சம் :

கர்ணன், குந்திதேவி கன்னியாக இருக்கையில் சூரியனது அருளால் அவள்பால் தோன்றியவன்; துரியோதனனது தேர்ப்பாகனால் வளர்க்கப்பட்டவன்; பரசுராமரிடம் விற்பயிற்சி பயின்றவன்; துரியோதனனது உயிர்த் துணைவன்; அவனால் அங்கதேசத்துக்கு அரசனாக ஆக்கப் பட்டவன்; அருச்சுனனுடன் தீராப் பகைமை கொண்டவன்; இந்திரனுக்குத் தன் கவச குண்டலங்களை அளித்தவன்; கொடையிற் சிறந்தவன்; செய்ந்நன்றி மறவாமல் துரியோ தனனுக்காகப் போர்க்களத்தில் உயிர் கொடுத்தவன்.

பாரதப் போரில் பதினேழாம் நாள் கர்ணன் அருச்சுன னோடு வெகுண்டு போர் செய்யும்போது அருச்சுனன்மீது நாக வெங்கணையைக் குறிவைத்து எய்தான். கண்ணனது சூழ்ச்சியால் அருச்சுனனது தேர், பூமியில் அழுந்தியது. அம்பு குறி தவறி அவனது முடியை வீழ்த்தியது. கர்ணன் தன் தாய் குந்திதேவிக்குத் தான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றும் பொருட்டு மீண்டும் அந்த நாகாஸ்திரத்தை எய்யாது இருந்தான். உடனே அருச்சுனன் கர்ணன்மீது பல அம்புகளை எய்தான்.

அம்பு பட்ட கர்ணன் தேர்த்தட்டில் சாய்ந்தான். சூரியனும் மேலைக் கடலில் மூழ்கும் நேரம். கண்ணபிரான் அருச்சுனனை நோக்கி, ''நீ சிறிது நேரம் போரை நிறுத்து வாயாக'' என்று சொல்லி, அவனைத் தேரின் மேலேயே நிறுத்தி வைத்துவிட்டு, உண்மையான தவக்கோலங் கொண்ட அந்தண வடிவமாய்ச் சூரியனது புதல்வனாகிய கர்ணனிடம் சென்றான்.

''கர்ண பூபதியே! வரையாது வழங்கும் வள்ளலே! நான் மேருமலையில் தவஞ் செய்கிறேன். வறுமையால் வாடு கிறேன். நான் வேண்டிய ஒன்றைத் தருவாயாக'' என்று

அந்தண உருவில் இருந்த மாதவன் வேண்டினான். தளர்ச்சியுற்றுத் தேரின்மீது கிடந்த கர்ணன், ''யான் கொடுக்கக் கூடிய பொருள் யாது சொல்லுக'' என்றான்.

''நீ செய்த புண்ணியமனைத்தையும் கொடுப்பாயாக'' என்று மறையவன் வேண்டினான். கர்ணன் மனமகிழ்ந்து, ''உயிரோ கலக்க நிலையில் உள்ளது. வேண்டுவார் வேண்டும் பொருள்களையெல்லாம் பாவியாகிய யான் விரும்பிக் கொடுத்த சமயத்தில் தாங்கள் வரவில்லை. இப்போது தாங்கள் கோரியபடியே நான் செய்துள்ள புண்ணியங்களையெல்லாம் கொடுக்கிறேன். பெற்றுக் கொள்வீர்களாக'' என்றான்.

''கையினால் தாரை வார்க்கப்படும் நீருடன் தானம் செய்வாயாக'' என்றான் அந்தணன். தன் மார்பில் தைத்துள்ள அம்பின் வழியாக ஒழுகுகின்ற ரத்தத்துடன் தாரைவார்த்துக் கொடுத்தான் அந்த வள்ளல். மறையவன் தானத்தை ஏற்றுக் கொண்டான்.

அந்தண வடிவங்கொண்டு வந்த கண்ணன் மகிழ்ந்து, கர்ணனைப் பார்த்து, ''நீ விரும்பிய வரங்களைக் கேள்; தருகிறேன்'' என்றார். ''யான் செய்த தீ வினையால் இனியும் எனக்குப் பிறப்பு உண்டாகுமானால் என்னிடம் வந்து யாசிப்பவர்களுக்கு 'இல்லையென்று சொல்லாத மனத்தை' எனக்கு அருளுவாயாக'' என்றான் கர்ணன்.

**மைத்துனன் உரைத்த வாய்மைகேட்(டு) ஐயன்**
**மனமலர் உகந்துகந் தவனைக்**
**கைத்தல மலரால் மார்புறத் தழுவிக்**
**கண்மலர்க் கருணைநீர் ஆட்டி**
**எத்தனை பிறவி எடுக்கினும் அவற்றுள்**
**ஈகையும் செல்வமும் எய்தி**
**முத்தியும் பெறுதி முடிவில்என் றுரைத்தான்**
**மூவருள் ஒருவனாம் மூர்த்தி** (243)

போற்றிய கர்ணன் கண்டுகண் களிப்பப்
புணரிமொண் டெழுந்தகார் முகிலை
மாற்றிய வடிவம் பஞ்ச ஆயுதமும்
வயங்குகைத் தலங்களு மாகிக்
கூற்றுறழ் கராவின் வாயில் நின்றழைத்த
குஞ்சர ராசன்முன் அன்று
தோற்றிய படியே தோற்றி னான்முடிவும்
தோற்றமும் இலாதபைந் துளவோன். (244)

*(வில்லிபாரதம் (243, 244)*
*—பதினேழாம் போர்ச் சருக்கம்.*

*[குறிப்பு : கஜேந்திரன் என்ற யானையின் முன் தோன்றிய காட்சி இதில் குறிப்பிடப்பட்டுள்ளது.]*

*கர்ணன் வேண்டியபடியே வரமளித்து, கண்ணபிரான் அவனுக்குக் காட்சியளித்து நிகழ்ச்சியை வில்லிபுத்தூர் ஆழ்வார் எவ்வளவு அழகாகப் பாடியுள்ளார் என்பதை வாசகர்கள் படித்து மகிழ்வார்களாக.*

*கர்ணன் இக்காட்சியைக் கண்டு அகமகிழ்ந்தான்; பலவாறு துதித்தான். கண்ணன் கர்ணனை நோக்கி, "உன்னைப் பற்றிய பாசங்கள் எல்லாம் நீங்கிப் போயின; இனி உனக்குப் பிறப்பில்லை. உனது மனம் பற்றிய மூர்த்தியை இனித் தியானித்துக் கொண்டிருப்பாய்" என்று கூறி மறைந்தான்.*

*பின்னர் கண்ணன் உருக்கொண்டு அருச்சுனன் தேர்மீது ஏறினான். கர்ணன் மீது அஞ்சரீகமென்னும் கணையைத் தொடுத்து அவன் ஆவியைக் கவருமாறு பணித்தான். அர்ச்சுனனும் அவ்வாறே அம்பு தொடுத்தான்.*

*கர்ணன் தான் கடைக் காலத்தில் கண்ட கார்மேக வண்ணன் உருவையே தன் மனத்துக்குரிய காட்சியாகக் கொண்டு, இதயத்தில் இருத்தி, இரு கண்களையும் மூடி,*

''ஓம் நமோ, நாராயணாய'' என்று கூறி, மலர்ந்த திரு முகத்தோடு மோட்சமடைந்தான்.

**சனிபகவான் :**

ஒரு சமயம் கிருஷ்ண பரமாத்மா ராதா ருக்மணி சமேதரராய் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தார். சனி பகவான் வந்திருக்கிறார் என்று வாயிற்காவலர் வந்து கூறினர். ''உள்ளே வரச்சொல்'' என்றார் பரமாத்மா.

''சுவாமி நமஸ்கரிக்கின்றேன்; என்னை மன்னிக்க வேண்டும்; நாளையிலிருந்து தங்களுக்குச் சனிதிசை ஆரம்ப மாகிறது; அதைச் சொல்லிவிட்டுப் போகவே வந்தேன்'' என்றார் சனிபகவான்.

''சரி'' என்று சுருக்கமாகச் சொல்லி வழியனுப்பினார் எம்பெருமான்.

இரண்டு நாள் கழித்து, சனிபகவான் மறுபடியும் வந்தார். ''சவுக்கியம்தானே! உன்னுடைய திசை ஆரம்ப மாகி விட்டதா?'' என்று கிருஷ்ணன் கேலியும் குத்தலாகவும் கேட்டார்.

''ஓ! நேற்றே தங்களைப் பற்றிக் கொண்டேனே; உலக ரட்சகராகிய தாங்கள் கேவலம் ஒரு பிள்ளைப் பூச்சியாக மாறி, சாக்கடையில் போய் ஒளிந்து கொண்டீரே; அது போதாதா? இன்னுமா துன்புறுத்த வேண்டும்'' என்று தன் அனுதாபத்தை வெளிப்படுத்தினார் சனிபகவான்.

அவர் பொல்லாதவர்; வந்தனை வழிபாடு செய்தால் அவர் மனமிரங்கி அருள் செய்வார். ஐஸ்வரியங்களையும் தந்து ஆளாக்கி விடுவார், அவரைப் பாபக்கிரகம் என்று கூறுவர். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் அவர் தலையிடாமல் இரார்,

# 15. துவாரகை

## இரும்பு உலக்கை :

துரியோதனாதியரின் மரணத்திற்குப் பிறகு கிருஷ்ணன் யாதவர்களுடன் துவாரகை வந்து சேர்ந்தான். மகிழ்வுடன் சில காலம் ஆட்சி செய்து வந்தான். பக்கத்தி லுள்ள பிண்டாரகம் என்னும் நகரில் முனிவர்கள் வந்து தங்கியிருந்தனர். அங்கு விளையாடிக் கொண்டிருந்த யாதவர்கள்,முனிவர்களிடம் விளையாட விரும்பி ஜாம்பவதி யின் பிள்ளையான சாம்பானுக்குக் கர்ப்ப ஸ்திரீயைப் போல வேடம் போட்டு அழைத்துச் சென்றனர். முனிவர் களைப் பார்த்து, "ஐயன்மீர்! இந்தப் பெண்ணுக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா? தயவு செய்து சொல்லுங்கள்" என்று வேண்டினர்.

முனிவர்கள் ஞான திருஷ்டியின் மூலம் அவர்களது குறும்பை அறிந்தனர். அவர்களுக்குப் புத்தி புகட்ட எண்ணி, "மூடர்களே, உங்கள் குலத்தை அழிக்க வல்ல இரும்பு உலக்கைதான் பிறக்கும்" என்று சபித்தனர்.

பயந்து போன யாதவர்கள் சாம்பானுடைய வேடத்தைக் கலைத்தனர். இரும்பு உலக்கைதான் விழுந்தது. அதை எடுத்துச் சென்று உக்கிரசேனரிடம் காண்பித்தனர். அதைப் பொடி செய்து சமுத்திரத்தில் எறிந்து விடுமாறு அவர் கூறினார். அவ்வாறே அவர்களும் உலக்கையைப் பொடிச் செய்து சமுத்திரத்தில் கொட்டினார்கள். அலைகளால் அப்பொடிகள் கரையில் துக்கப்பட்டுக் கோரையாக முளைத்தன. அந்தப் பொடிகளும் ஒன்று சற்றுப் பெரிதாக இருந்தது. அதை ஒரு மீன் விழுங்கி விட்டது.

செம்படவர்கள் மீன் பிடிக்க வலை வீசிய பொழுது அந்த மீன் அவர்களுடைய வலையில் அகப்பட்டுக்

கொண்டது. வீட்டுக்கு எடுத்து வந்து மீனை அரிந்த போது, அதனுள் இருந்த இரும்புத் துண்டை எறிந்து விட்டனர். அவ்வழியாக வந்த உலுபதன் என்னும் வேடன் அதை அம்பின் நுனியாக உபயோகித்துக் கொண்டான்.

இவ்வாறு இருக்கும்போது தேவர்கள் வந்து கிருஷ்ணனைத் தரிசித்து, அவர் வைகுந்தம் திரும்ப வேண்டிய சமயம் நெருங்கி விட்டதென்று அறிவித்து அவ்வாறே எழுந்தருளுமாறு வேண்டினர்.

"அன்பர்களே! பூபாரம் தீர்க்கும் பொருட்டு நான் அவதரித்தேன். வந்த வேலை முடிந்துவிட்டது: எனினும் என்னுடைய அவதார காரணத்தால் யாதவ குலம் மிகவும் கர்வமடைந்து அடியோடு நாசமடைய சாபத்தை அடைந் துள்ளது. அதையும் நிறைவேற்றி நான் வைகுந்தம் திரும்பு வேன்" என்று கூறி கிருஷ்ணன் அவர்களை அனுப்பி வைத்தான்.

துவாரகையில் பயங்கரமான உற்பாதங்கள் தோன்றின. யாதவர்கள் பயந்து கிருஷ்ணனிடம் முறையிட்டனர். "அன்பர்களே! ஏதோ பெரும் ஆபத்து விளையும் போலிருக் கிறது, நாம் அனைவரும் பிரபாச தீர்த்தம் சென்று புண்ணிய ஸ்நானம் செய்வோம்" என்று கிருஷ்ணன் யோசனை கூறினான். அவ்வாறே யாதவர்கள் தம் மனைவி மக்களைத் துவாரகையில் விட்டுவிட்டு பிரபாச தீர்த்தத் திற்குப் புறப்பட்டனர்.

**யாதவ குலம் அழிந்தமை :**

யாதவர்கள் பிரபாச தீர்த்தம் வந்து சேர்ந்தனர். வந்த வேலையை மறந்து மதுபானத்தில் இறங்கிவிட்டனர். ஒவ்வொருவரும் அளவுக்கு மீறிக் குடித்து உணர்வு இழந்தனர். மரியாதைக் குறைவாகப் பேசினர். வார்த்தைத் தடித்தது. ஒருவரையொருவர் அடிக்க ஆரம்

பித்தனர். கரையோரத்தில் முளைத்திருந்த கோரைப் புல்லைப் பிடுங்கிக் கொண்டு சண்டையிட்டனர். யாதவ சிரேஷ்டர்களும் சண்டையில் ஈடுபட்டனர்.

பலராமனும் கிருஷ்ணனும் சமாதானப்படுத்தியும் பயனில்லை. ஒரு முகூர்த்த காலத்திற்குள் யாதவர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு மாண்டனர். முனிவர்களின் சாபம் இவ்வாறு வேலை செய்து, யாதவ குலத்தை அழித்தது.

கிருஷ்ணனும் பலராமனும் எஞ்சியிருந்தனர். பலராமன் சமுத்திர தீரத்தில் யோகத்தில் அமர்ந்தார். ஆத்மாவைப் பகவானிடம் நிலைக்கச் செய்து மனித உடம்பைத் துறந்து வைகுந்தம் சேர்ந்தார்.

## கிருஷ்ணனின் இறுதிக்காலம் :

கிருஷ்ணன் தானும் வைகுந்தம் செல்லும் வேளை நெருங்கி விட்டதை உணர்ந்தான். நான்கு கைகளுடன் அரையில் பட்டு பீதாம்பரம் தரித்து கௌஸ்தபம் முதலான மணிமாலைகள் மார்பில் தவழ காதுகளில் மகர குண்டலங்கள் அசைய இரத்தின மயமான முடிதரித்து நாராயண சொரூபத்துடன் அருகிலிருந்த ஓர் அரச மரத்தின் கீழ் அமர்ந்தான். வலது காலை இடது துடை மீது வைத்தான். சற்றுச் சாய்ந்த வண்ணமாய்ப் படுத்தான்.

அப்போது உலுபதன் என்ற வேடன் அங்கு வந்தான். தூரத்திலிருந்து பார்த்தபோது பகவானுடைய திருவடி படுத்திருக்கும் மானின் முகம் போல் தோன்றியது. உலக்கையின் இரும்புத் துண்டை அவன் அம்பின் நுனியில் பொருத்தியிருந்தான். அந்த அம்பை எடுத்து மானைக் குறி பார்த்து அடித்தான். பின்னாலேயே ஓடி வந்தான்.

இரத்தம் பெருகும் பாதத்தைப் பார்த்துக் கதறினான். பகவானுடைய பாதங்களில் வீழ்ந்து தெரியாமல் செய்த அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினான்.

"வேடனே, வருந்தாதே; இத்துன்பத்தை நானே விரும்பிப் பெற்றேன்; யாதவ குலம் நசிக்க வேண்டு மென்பது சாபம். அது என்னை மட்டும் விட்டு வைக்குமா? நீயாக இதைச் செய்யவில்லை. என் விருப்பப்படி எல்லாம் நடந்தது!" என்றான் கிருஷ்ணன். சோதி உருவில் அவ்வேடன் தேர் ஏறி உத்தம லோகம் சென்றான்.

## கண்ணன் வைகுந்தம் சேர்தல்

சற்று நேரத்திற்கு எலலாம சாரதயான தாருகன தேரைக் கொண்டு வந்து நிறுத்தினான். துக்கத்தில் மூழ்கிக் கதறினான். "இத்துன்பத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வேன்" என்று கண்ணன் பாதங்களில் வீழ்ந்தான்.

"தாருகா, நான் சொல்வதைக் கேள். உலகில் பிறந்தார் அனைவரும் மடிந்தே ஆகவேண்டும். அதுபோல் யாதவர் களும் மடிந்தார்கள். நீ நேராகத் துவாரகைக்குச் செல். இங்கு நடந்தவற்றை விவரமாகச் சொல். பெண் மக்களை யும் குழந்தைகளையும் அழைத்துச் சென்று இந்திரப் பிரஸ்தத்தில் அருச்சுனனிடம் விட்டுவிடு. நான் சென்ற பிறகு எனக்காக உண்டாக்கப்பட்ட துவாரகையும் இருக்காது. அது கடலில் மூழ்கிவிடும். துக்கப்படாதே. என் னிடம் நிறைந்த பக்தியுடையவன் நீ விரைவிலேயே. நற்கதி பெறுவாய்" என்றான் கண்ணன்.

அப்போது பகவானுடைய தேர் குதிரைகளோடு ஆகாயத்தில் கிளம்பியது. அவனுடைய பஞ்சாயுதங்களும் அவனிடமிருந்து புறப்பட்டன. அதைக் கண்ட தாருகன் நெஞ்சம் வெடிப்பதைப் போன்று துக்கப்பட்டு, கிருஷ்ண னைப் பணிந்து அவனிடம் விடைபெற்றுக் கொண்டான்.

வானில் தேவர்கள் குழுமினர். இந்த அற்புதக் காட்சி யைக் கண்டு மகிழ்ந்தனர். துதித்தனர். கண்ணன் தன் னுடைய மானிட உடம்பைத் துறந்து வைகுந்தத்திற்குப் புறப்பட்டான்.

துவாரகை திரும்பிய தாருகன் ருக்மணி முதலானவர்களிடம் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினான். இந்தத் துக்கச் செய்தியைக்கேட்டுப் பலர் மூர்ச்சித்தனர். தாருகன் ஆறுதல் வார்த்தைகளைச் சொன்னான். துவாரகையிலுள்ள மாதர்கள் தங்கள் கணவன் உடலோடு தீக்குளித்து உத்தம லோகத்தை அடைந்தனர். உக்கிரசேனன் வசுதேவர் ஆகியோரும் இத் துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் தீயில் மூழ்கி உயிரை விட்டனர்.

துவாரகையிலிருந்து குழந்தைகளை அழைத்துக் கொண்டு தாருகன் இந்திரப்பிரஸ்தம் வந்து அர்ச்சுனனிடம் ஒப்படைத்தான். நடந்தவற்றையெல்லாம் கூறினான். பாழடைந்த துவாரகை கடலில் மூழ்கியது.

அர்ச்சுனன் தன் சகோதரர்களுடன் மறைந்த உற்றார் உறவினர்களுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்தான். யாதவ வம்சத்தில், எஞ்சியிருந்த வச்சிரனுக்கு முடிசூட்டினர். கிருஷ்ணன் வைகுந்தம் சேர்ந்ததும் பூலோகத்தில் கலிபுருஷன் பிரவேசித்துவிட்டான். அவன் ஆதிக்கத்தில் தர்மம் சீர்குலையப் போகிறது என்பதை அறிந்த பாண்டவர்களும் கிருஷ்ணனைத் தொடர்ந்து வைகுந்தம் செல்ல விரும்பினர். பரீட்சித்துக்குப் பட்டம் சூட்டி, ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்புவித்துவிட்டு வனத்துக்குப் புறப்பட்டு விட்டனர்.

கலியுகத்தில் பகவானைப் பக்தியால் ஆராதிக்க வேண்டுமென்று சொல்லப்பட்டுள்ளது. பரந்தாமனுடைய கல்யாண குணங்களையும் அவனுடைய அவதார மகிமைகளையும் படித்து நற்கதி அடைவோமாக.

**'அருமறை முதல்வனை ஆழி மாயனைக்**
**கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்**
**திருமகள் தலைவனைத் தேவ தேவனை**
**இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்."**

**(—வில்லிபாரதம், வாரணாவதச்சருக்கம்—1)**

**திருமாலின் பன்னிரு நாமங்கள் :**

1. கேசவன்
2. நாரணன்
3. மாதவன்
4. கோவிந்தன்
5. விஷ்ணு
6. மதுசூதனன்
7. திருவிக்ரமன்
8. வாமனன்
9. ஸ்ரீதரன்
10. ரிஷிகேசன்
11. பத்மநாபன்
12. தாமோதரன்

# 16. கல்கி அவதாரம்!

**முன்னுரை :**

யுகங்கள் நான்கு. அவையாவன : கிருதயுகம், திரேதா யுகம், துவாபரயுகம், கலியுகம் என்பன. மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன ஆகிய ஐந்து அவதாரங்களும் கிருத யுகத்தில் நடைபெற்றன. பரசுராம, தசரத ராம அவதாரங்கள் திரேதா யுகத்தில் நடைபெற்றன. கிருஷ்ண, பலராம அவதாரங்கள் துவாபர யுகத்தில் நடைபெற்றன. கல்கி அவதாரம் கலியுகத்திற்கு உரியது. சிலர் கௌதம புத்தரைப் பத்தாவது அவதாரமாகக் கூறுகின்றனர். அந்த அவதாரம் வேதங்களில் கூறப்பட்டுள்ள கர்மாக்களையும் யாகங்களையும் ஏற்றுக் கொள்வதில்லை. ஒழுக்க முறையிலேயே நிர்வாண நிலையை அடையலாம் என்பது அவரது கோட்பாடு. அதை நிரீஸ்வர மதம் என்றும் கூறுவர். அதாவது கடவுட் கொள்கை அவர்களுக்கு உடன்பாடன்று. எனவே பாகவத புராணத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் இங்குக் கூறப்பட்டுள்ளன.

**கலியின் விருத்தி :**

கலியின் விருத்தியால் நாட்டில் ஆசார அனுஷ்டானங்கள் குறைந்துவிடும். பெண்கள் மிகுந்த மோகத்தால் கணவனைவிட்டுப் பரபுருஷர்களை விரும்புவார்கள்.

பிராமணன் தன்னுடைய கர்மாக்களைக் கைவிட்டு விடுவான். கணவன் தலைவியையும் குழந்தைகளையும் காப்பாற்றுவது என்ற கொள்கையும், மகன் வயது தன் பெற்றோர்களைக் காப்பாற்றுவது என்ற கொள்கையும் குறைந்துபோகும். போலி கவுரவம் மேலோங்கி நிற்கும். பலவானாய் இருப்பவன் அதிகாரத்தைக் கைப்பற்றுவான்.

பசி, தாகம், வியாதி ஆகியவற்றால் மக்கள் அவதியுறுவார்கள். வருணாசிரம தருமங்கள் நலிவுறும். பகவானிடம் பக்தி கொள்ளுதலும் விருந்தினர்களை உபசரித்தலும் அற்றுப் போகும். பருவ காலங்களில் மழை பெய்யாது. பயிர் பச்சைகளின் விளைச்சல் குறையும். வறுமையும் பஞ்சமும் தாண்டவமாடும். ஒருவர் மற்றவரை ஏமாற்ற நினைப்பர். சாதுக்கள் துஷ்டர்களாய் துன்பப்படுவர்; கொடுமைகள் அதிகரிக்கும்.

இந்த சமயத்தில் பகவான் அந்தணன் ஒருவனுக்கு மகனாகப் பிறப்பார். தேவதத்தம் என்னும் குதிரை மீதேறி உருவிய வாளுடன் சிஷ்ட பரிபாலனம் செய்வார். தர்மத்தை நிலை நிறுத்துவார். தர்ம தேவதை நான்கு கால்களுடன் நடக்க ஆரம்பிக்கும். ஒவ்வொரு யுக முடிவிலும் பிரளயம் உண்டாகும். பரந்தாமனான நாராயணன் பிரபஞ்சத்தைத் தம் வயிற்றில் அடக்கிக் கொண்டு ஆதி சேஷன் மேல் பள்ளி கொண்டிருப்பார். பிரமன் அவருடைய நாபிக் கமலத்தில் இருந்து தோன்றி மறுபடியும் சிருஷ்டித் தொழிலை ஆரம்பிப்பார்.

## இறுதி உபதேசம்:-

பாகவத புராணத்தை இதுவரை கூறிவந்த சுகப்பிரம்ம ரிஷி கடைசியாக பரீட்சித்தை நோக்கி "பரீட்சித்து மன்னனே! இந்த விதமாகப் பகவானுடைய திவ்விய கல்யாணகுணங்களைப் பற்றியும் அவருடைய அவதாரங்களைப் பற்றியும் நான் கூறி வந்த போது நீ பக்தி சிரத்தை

யுடன் கேட்டு வந்தாய். அதனால் நீ பரிசுத்தனாகி விட்டாய். உன் ஆத்மாவுக்கு அழிவு இல்லை; இந்த உடம்புக்குத்தான் அழிவு. பகவானுடைய அவதார கதை களைக் கேட்ட உனக்கு இனி உலக பந்தங்கள் இரா.

இந்த தீபத்தைப் பார். எண்ணெய், திரி, நெருப்பு, விளக்கு இவை ஒன்றுக்கொன்று சம்பந்தம் இருக்கும் வரை யில்தான் விளக்கு சுடர்விட்டு எரியும். அதைப்போல ஆத்மா, தேகம், கர்மம், என்ற சம்பந்தங்கள் இருந்தால் தான் சம்சாரமாகிற தீபம் எரியும்.

உன் தேசத்திலுள்ள ஆத்மாவைப் பரப்பிரமத்தினிடம் லயிக்கச் செய்து, பரமாத்மரூபத்தை அடைந்து அப்பரம் பொருளுடன் ஐக்கியமடைவாயாக. தட்சன் தீண்டப் போவது அழியக் கூடிய உன் தேகத்தை; உன் ஆத்மாவை அல்ல; உன் உடல் சாம்பலாகுமே தவிர ஆத்மாவுக்கு எந்த விதக் கெடுதலும் ஏற்படாது" என்றார்.

பரீட்சித்து சுகாசாரியாரை வலம் வந்து வணங்கினான் "தவ சிஷ்டரே! தங்களால் உபதேசிக்கப்பட நான் மரணத் தைக் கண்டு பயப்படவில்லை. பல உண்மைகளை எடுத்துச் சொல்லி நல்வழியைக் காட்டினீர்கள். பிறப்பும் இறப்பும் மாறிவரும் இந்த சம்சாரத்தில் கிடந்து உழலாதிருக்கும் உன்னத வழியை எனக்குப் போதித்தீர்கள். முன் பிறப்பில் நான் செய்த புண்ணியத்தினால்தான் தங்களைத் தரிசிக்கும் பேறு பெற்றேன்" என்று உணர்ச்சி வசப்பட்டவனாய் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகக் கூறினான்.

பின்னர் சுகப்பிரமம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

**புராண பலன் :**

புராணங்ககளுக்குப் பத்து லட்சணங்கள் சொல்லப் படுகின்றன. சர்க்கம், வீசர்க்கம், ஸ்திதி, ரட்சணம்,

மனுவந்தரங்கள், வமிசம், வமிச சரித்திரம், சமுஸ்தை; ஏதி, ஆசிரியம்என்ற பத்துமாகும். இந்தப் பத்து லட்சணங் களையுடைய புராணங்கள் மகாபுராணங்கள் எனப்படும். பிரமம், பத்மம், வைணவம் சைவம், லிங்கம், கருடம், நாரதீயம், பாகவதம், ஆக்கினேயம், ஸ்காந்தம், லவுஷ்யம், பிரமகை வர்த்தம், மார்க்கண்டேயம். வாமனம், வராகம், மத்சயம், கூர்மம், பிரமாண்டம் என்று பதினெட்டு புராணங்கள் உள்ளன.

ஸ்ரீமத் பாகவத புராணம் மற்ற புராணங்களைவிடச் சிறந்ததாகும். ஏகாதசி அல்லது துவாதசியில் இந்தப் புராணத்தைக் கேட்பவர்கள் சிறந்த புண்ணியத்தை அடைவார்கள். பரிசுத்தமாக இருந்து இந்தப் புராணத் தைப் பாராயணம் செய்பவர்கள் சகல பாவங்களினின்றும் விடுபடுவார்கள்.

கலியுகத்தினால் பகவானைப் பக்தியால் ஆராதிக்க வேண்டும். பரந்தாமனுடைய கல்யாண குணங்களையும் அவருடைய அவதார கதையையும் கேட்பவர்களின் உள்ளத்தில் உள்ள அழுக்குகள் மறைந்து போகும். பக்தி உண்டாகும். பக்தியோடு தம்மை ஆராதிப்பவர்களை ஸ்ரீமன் நாராயணன் ஒரு போதும் கைவிடுவது இல்லை. பக்த ரட்சகன், தீன ரட்சகன் என்று கொண்டாடப் படுபவர் அவர்.

**கண்ணன் கழலிணை**
**நண்ணும் மனமுடையீர்**
**எண்ணும் திரி நாமம்**
**திண்ணம் நாரணமே** 3711

—நம்மாழ்வார் (திருமொழி)